KALKI 29.9.2002
ரூ. 6.00

# கல்கி





## எட்டிப் பார்க்கும் குட்டி கிராமங்கள்!



# அளிப்பது அதிக வட்டி மட்டுமல்ல,
# அளவற்ற நிம்மதியும் கூட.



அன்பான
முதியோர்களுக்கான
ஆதரவான திட்டம்.

## Shanti

**மூத்த குடிமக்களுக்கான சிறப்பு டெபாசிட் திட்டம்**

- டெபாசிட்டுகளுக்கு அதிக வட்டி
- சேமிப்புக்கணக்கில் குறைந்த பட்ச இருப்பிலிருந்து விலக்கு*
- கட்டணமின்றி வெளியூர் காசோலைகள் வசூலிக்கும் வசதி*
- கட்டணமின்றி டிராப்டுகள் பெறும் வசதி
- கனிவான - விரைவான - தனிச் சேவை.

* நிபந்தனைகளுக்கு உட்பட்டது

FORTUNE-CH

மேலும் விவரங்களுக்கு எங்களது இணையதளத்திற்கு உங்களை வரவேற்கிறோம்
www.bharatoverseasbank.com



# Bharat Overseas Bank Ltd.

**A bank owned by 7 banks.**

H.O: Habeeb Towers, 196, Anna Salai, Chennai 600 002. Tel: 852 2983, 852 0748. Fax: (91)-(044)-859 4615.
Telex: 041-7493 BOB-IN.E-mail : bobl@vsnl.com

*We'll be with you, right through*

ஜி. கிருஷ்ணமூர்த்தி
தலைவர்

# இந்தியா

"இரண்டு வழுக்கைத் தலை மனிதர்கள், சீப்புக்காக சண்டை போட்டுக் கொள்வதற்கு ஒப்பானது தான் சியாச்சின் பிரச்னை" என்கிறார் மேஜர் வி.ஆர். ராகவன். காஷ்மீர் மற்றும் சியாச்சின் பகுதிகளில் இந்திய



ராணுவத்தின் உயர் பொறுப்புகளில் இருபதாண்டுகளுக்கும் மேல் இருந்தவர் இவர். 'சியாச்சின்: முடிவில்லாத பிரச்னை' என்ற தலைப்பில் சியாச்சின் குறித்து விரிவாக புத்தகம் எழுதியிருக்கிறார் இந்த ஓய்வு பெற்ற ராணுவ மேஜர். அண்மையில் சென்னை வந்திருந்தார்.



• ராகவன்

இமயமலைப் பகுதியில், கடல் மட்டத்திலிருந்து இருபத்தியோராயிரம் அடி உயரத்தில் கடும் குளிர் நிலவும் பகுதி சியாச்சின். அங்கே, இந்திய ராணுவத்தைச் சேர்ந்தவர்கள் சுமார் இரண்டாயிரம் பேர் நிறுத்தப்பட்டுள்ளனர். இவர்களில் ராணுவ வீரர்கள் தவிர, சமையல்காரர்கள், உதவியாளர்களும் அடங்குவர். சியாச்சினில், நமக்கு எதிரி என்று யாரும் கிடையாது. போரிட வேண்டிய அவசியமும் இல்லை. காரணம், பாகிஸ்தானுக்கு சியாச்சினை கைப்பற்ற வேண்டும் என்கிற எண்ணமும் கிடையாது. அவர்கள் அதை நெருங்கியதாக சரித்திரமும் கிடையாது.

சியாச்சினில் நம் ராணுவப் பராமரிப்புக்காகச் செலவிடும் நிதியைக் கணக்கிட்டால், நாளொன்றுக்கு மூன்று கோடி. இதை மத்திய பாதுகாப்பு அமைச்சர் ஜார்ஜ் பெர்னாண்டஸ் பாராளுமன்றத்திலேயே தெரிவித்திருக்கிறார். சியாச்சினில் பணி புரியும் ஒரு ராணுவ வீரர் சாப்பிடும் சப்பாத்தி ஒன்றின் மதிப்பு நானூறு ரூபாய்.

கடுங்குளிரைச் சமாளிப்பது எப்படி என்று பிரத்தியேகமாகப் பயிற்சி பெற்ற பின்னர்தான், ஒரு ராணுவ வீரர் சியாச்சினுக்கு அனுப்பப்படுவார். தமிழ்நாடு உட்பட பல மாநிலங்களைச் சேர்ந்த ராணுவ வீரர்களும் சியாச்சினில் இருக்கிறார்கள். சியாச்சினுக்கு அனுப்பப்படும் ஒரு ராணுவ வீரர், அங்கே மூன்று மாத காலம் பணி புரிந்தபின் திரும்பிவிடுவார்.

சியாச்சினுக்கு, நேரில் சென்று, ராணுவத்தினரைச் சந்தித்து, உற்சாகப்படுத்தி, அவர்கள் தேவைகள், குறைகளைக் கேட்டறிந்து, உடனடியாக உதவிய பெருமை ஜார்ஜ் பெர்னாண்டஸுக்கு உண்டு. மிக அதிக தடவைகள் சியாச்சினுக்குச் சென்று திரும்பிய இந்தியப் பாதுகாப்பு அமைச்சரும் அவர்தான்.

'சியா' என்றால் ரோஜா. 'சின்' என்றால் 'இடம்' என்று அர்த்தமாம். ஆனால் சியாசினில் இருப்பது என்னவோ கடும் குளிரும், இந்திய ராணுவமும் மட்டுமே!

— எஸ். சந்திரமௌலி

படம் : ஸ்ரீஹரி

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
புதிய ஈ மெயில் முகவரிகள் : எடிட்டோரியல் : kalki@kalkiweekly.com
சந்தா : subscription@kalkiweekly.com பிற தகவல்கள் : info@kalkiweekly.com

# பாகிஸ்தான்

பாகிஸ்தானின் பிரதமராக இருமுறை விளங்கிய பேனசிர் புட்டோ, இம்முறை பாராளுமன்றத் தேர்தலுக்கே நிற்கமுடியாத நிலைமை. தடை போட்டிருக்கிறது முஷாரஃப் அரசு. மற்றொரு முன்னாள் பிரதமரான நவாஸ் ஷெரீப் சவுதி அரேபியாவில் இருந்தபடி தாமும் தேர்தலில் நிற்க விண்ணப்பிக்க, அதற்கும் மறுப்பு.

பேனசிர் கடந்த இருபது வருடங்களாகவே லண்டனிலும் துபாயிலுமாகக் காலம் கடத்தி வருகிறார். என்றாலும் பாகிஸ்தான் மக்களிடையே உள்ள செல்வாக்கு அப்படியொன்றும் குறைந்ததாகத் தெரியவில்லை. நவாஸ் ஷெரீப்பின் பாகிஸ்தான் முஸ்லிம் லீக்கிற்கும் ஆதரவு நலிந்து விடவில்லை. கடந்தமுறை நடந்த தேர்தலில் இந்த இரு கட்சிகளுமாகச் சேர்ந்து எழுபது சதவீதம் வோட்டுக்களைக் குவித்திருந்தன.

இதன் காரணமாகவே முஷாரஃப்புக்கு கிலி. இன்னும் பத்து வருடங்களுக்காவது நவாஸ் ஷெரீப் பாகிஸ்தானுக்குத் திரும்பவோ, அரசியலில் ஈடுபடவோ கூடாது என்று அவரை ஒரு கட்டாய ஒப்பந்தத்தில் கையெழுத்திட வைத்துவிட்டுதான் சவுதி அரேபியாவுக்கு அனுப்ப சம்மதித்தார் முஷாரஃப். ஷெரீப்பும் ஒப்புக் கொண்டு விட்டார். ஆனால் இப்போது மீண்டும் தாய் நாட்டு அரசியலில் ஈடுபடும் ஆசை துளிர் விட, ஷெரீப் தேர்தலில் நிற்பதற்கான மனுவைத் தாக்கல் செய்திருக்கிறார்.





• நவாஸ்ஷெரீப்

தமக்குச் சாதகமான வகையில் சட்டத்தை இஷ்டத்துக்கு மாற்றி வருகிறார் முஷாரஃப். ஜூன் மாதம் ஆறாம் தேதி மாற்றிய விதியின்படி எந்தப் பிரதமரும் மூன்றாம் முறையாக தேர்தலில் நிற்கக் கூடாது! ஆகஸ்ட் இரண்டாம் தேதி வெளியான சட்டத்திருத்தத்தின்படி நாட்டைவிட்டு ஓடிப் போனவர்கள் தேர்தலில் நிற்கக் கூடாது என்றாகிவிட்டது. சம்மன் அனுப்பியும் நீதிமன்றத்தில் ஆஜராகாதவர்களும் தேர்தலில் போட்டியிட முடியாது என்ற கூடுதல் நிபந்தனை வேறு!

ஆக, பேனசிர் பாகிஸ்தான் அரசியலில் மீண்டும் தலைத்தூக்க முடியாத அளவுக்குச் செய்து, தன்னை சட்டத்தின் துணையோடு தம்மைப் பலப்படுத்திக் கொண்டிருக்கிறார் முஷாரஃப்.

பேனசிர் 1990ல் நடைபெற்ற தேர்தலில் தோல்வியைத் தழுவினார். 1993ல் மீண்டும் பிரதமரானார். அடுத்த மூன்றாண்டுகளில் மீண்டும் அவரது ஆட்சி கலைக்கப்பட்டது. அவரது ஆட்சிக் காலத்தில் நடைபெற்ற ஊழல்கள் விசாரிக்கப்பட்டன. பல லட்சம் டாலர்களை அவர் அபராதமாக அளிக்க வேண்டும் என்றது நீதிமன்றம். இந்தத் தீர்ப்பை எதிர்த்து மேல் முறையீடு செய்தும் பலனில்லை. பேனசிர் இதனாலெல்லாம் ஒடுங்கிவிடுவார் என்று தோன்றவில்லை. சட்டம் என்று இருந்தால் சட்ட ஓட்டைகள் இல்லாமல் போய்விடுமா? "பாகிஸ்தான் மக்கள் கட்சி" என்ற பெயரை "பாகிஸ்தான் மக்கள் கட்சி பாராளுமன்றத்தினர்" என்று மாற்றிக் கொண்டதன் மூலம் சில சட்டச் சிக்கல்களைச் சமாளித்து வருகிறார் பேனசிர். முஷாரஃப்பும் பேனசிருக்கு எதிராக சளைக்காமல் தினமும் ஒரு முயற்சியை எடுத்து வருகிறார்.

பேனசிருக்கு அனுமதி மறுத்தவுடன், நவாஸ் ஷெரீப் இதற்கு எதிர்ப்பு தெரிவிக்கும் வகையில் தாமும் போட்டியிலிருந்து விலகுவதாக அறிவித்திருக்கிறார். இதற்கு நன்றி தெரிவித்திருக்கும் பேனசிர், "இருந்தாலும் நீங்கள் போட்டியிலிருந்து பின்வாங்க வேண்டாம்" என்று கேட்டுக்கொண்டிருக்கிறார். நவாஸ் ஷெரீப்புக்குத் தேர்தல் ஆணையம் பச்சைக் கொடி காட்டுமா என்பது பெரும் சந்தேகம்!

**— ஜி.எஸ்.எஸ்.**

# மலேசியா

மலேசியாவில் அனுமதியில்லாமல் இருக்கும் இந்தோனேசிய, பிலிப்பைன்ஸ் காரர்கள் அத்தனை பேரையும் வெளியேறச் சொன்னது அரசாங்கம். அதற்காக அவகாசம் தந்தது. கெடு தாண்டி ஊரில் இருப்பவர்களைக் கடுமையாக தண்டிக்கப் போவதாய் எச்சரிக்கை விடுத்தது.

இது போன்ற எச்சரிக்கைகள் அடிக்கடி வழங்கப்படுவதுதான். ஆனால் இந்தத் தடவை தீவிரமாயிருந்தது. அவர்களைத் தேடிக் கண்டுபிடித்து அபராதம், கடுங் காவல், பிறகு பிரம்படி, இறுதியாக வலுக்கட்டாயமாய் நாடு கடத்தல் என்று கெடுபிடி தொடர்ந்தது. லட்சக்கணக்கில் அகதிகள் வெளியேற்றப்பட உத்தரவு பிறப்பிக்கப்பட்டது.

கடுமையாக இருக்க வேண்டிய நிர்பந்தத்தில் மலேசியா தன் அதிகாரிகளை முடுக்கிவிட, அவர்களும் டென்ஷனில் அகப்பட்டவர்களைப் பிரம்பால் அடித்து, இருப்பவரையெல்லாம் கப்பலில் அள்ளிப் போட்டு லோடு லோடாக குப்பையை அப்புறப்படுத்துகிறமாதிரி மக்களை அப்புறப்படுத்தியதில் அந்தப் பிரதேசமே கொந்தளிப்பான சூழ்நிலைக்குத் தள்ளப்பட்டது.

இது ஒரு புறம் இருக்க, அவர்களுக்கு இன்னொரு பக்கமும் அடி விழுந்தது. திடீரென்று இந்த அளவுக்குத் தங்கள் நாட்டினரே அகதிகள் போல தங்கள் பிறந்த நாட்டுக்குத் திரும்பி வருவார்கள் என்று எதிர்பார்க்காத இந்தோனேசியாவும் பிலிப்பைன்ஸும், வந்து சேர்ந்த மக்களைச் சமாளிக்க முடியாமல் திணறிப் போனார்கள்.

உடம்பு சரியில்லாத நிலையில் இருப்பவர்களையும் கப்பலில் திணித்து ஊருக்கு அனுப்பியதில் சிலர் வரும் வழியிலேயே இறந்து போனார்கள். இந்த நெருக்கடி மலேசிய அரசாங்கத்தின் மேல் அவர்களுக்கு ஆத்திரத்தைக் கிளப்பி விட்டது. மணிலாவில் உள்ள மலேசியத் தூதரகத்துக்கு முன்னால் உணர்ச்சிவசமாய் ஒரு போராட்டம் நடந்தது. மலேசிய நாட்டுக் கொடியும் மலேசியப் பிரதமரின் உருவப் படமும் எரிக்கப்பட்டன.

அந்தக் கொடி எரிப்புப் போராட்டம் மலேசியாவை உசுப்பிவிட்டு அவர்களின் வெளியுறவுத்துறை அமைச்சர், வாய்க்கு வந்தபடி வசை பாடிவிட்டார். பிலிப்பைன்ஸில் வெளியுறவுத் துறை அதிகாரிகள் எகிற, மலேசியப் பொருட்களை பகிஷ்கரிப்பு செய்யச் சொல்லி ஒரு போராட்டம் தொடங்கியது. இந்தோனேசியாவிலும் போராட்டங்கள். மலேசியாவிற்குப் போக வேண்டாம் என்று இந்தோனேசியர்கள் கேட்டுக் கொள்ளப் பட்டார்கள்.

பிலிப்பைன்சுக்கு இந்த விவகாரம் இன்னொரு பிரச்னையைக் கிளப்பி விட்டிருக்கிறது. மலேசியாவிலிருந்து திரும்பி வரும் மக்கள் தஞ்சம் புகுவது அந்த நாட்டின் தெற்குப் பகுதியில். இந்தப் பகுதி பிலிப்பைன்சின் காஷ்மீர். அந்தப் பகுதியில் இருக்கும் முஸ்லீம் தீவிரவாதிகள் அந்தப் பகுதியை ரணகளமாக்கி வைத்திருக்கிறார்கள்.





• கொடி எரிப்பு

இந்தோனேசியர்களின் நிலை இன்னும் பரிதாபம். திரும்பிய இந்தோனேசியர்களில் நிறைய பேர் தங்கள் நாட்டில் இருக்கும் மோசமான நிலையைப் பார்த்துவிட்டு மலேசியாவுக்கே ஓடி வந்திருக்கிறார்கள்.

— ஆனந்த்

# அமெரிக்கா

ரிச்சர்ட் வுல் என்னும் அமெரிக்க என்ஜினீயர் கண்டுபிடித்திருக்கும் தொழில்நுட்பம் அங்கீகரிக்கப்பட்டால் சிலிக்கன் பள்ளத்தாக்கான கலிபோர்னியாவை இனி "சிக்கன் பள்ளத்தாக்கு" என்று பெயர் மாற்ற வேண்டியிருக்கும். ரிச்சர்ட் வுல், மைக்ரோ சிப்புகள் செய்யப்படும் சிலிகானுக்கு ஒரு மாற்றுப் பொருள் கண்டுபிடித்திருக்கிறார். என்ன தெரியுமா? கோழி இறகு!

மைக்ரோ சிப் என்பது சிலிகான் விரிப்பில் நுண்ணிய ட்ரான்ஸிஸ்டர்கள் பொதிக்கப்பட்ட கணிப்பொறியின் தகவல் கேந்திரம். மின்சார அலைகள் இந்த ட்ரான்ஸிஸ்டர்கள் வழியாகப் பாய்ந்து இந்த மைக்ரோ சிப்புகளுக்கு போஷாக்கு ஊட்டி செயல்படுத்துவதுதான் கம்ப்யூட்டரின் ஆதாரத் தன்மை. டிரான்ஸிஸ்டர்களின் இந்த மின்சார அலை வீச்சு, அவை பொதிக்கப்பட்ட பொருளின் தன்மைக்கு ஏற்ப மாறுபடுகிறது.

இந்த மைக்ரோ சிப்புகளின் வேகத்தை எப்படிக் கூட்டுவது? இதுநாள்வரை டிரான்ஸிஸ்டர்களின் அளவைச் சிறியதாக்கியே அந்த இலக்கை அடைந்திருக்கிறார்கள். ஆனால் அளவுகளைச் சிறியதாக்குவதற்கும் ஒரு வரைமுறை இருக்கிறதல்லவா? அந்தத் தடையை எப்படி வெல்வது என்றே ஆராய்ச்சியாளர்களின் தேடல் இருந்தது.

சிலிகானை விட இன்னொரு பொருளில் அதிகமான வேகத்தில் மின்சார அலைகள் பாய முடியுமானால் மைக்ரோ சிப்புகள் இன்னும் துரிதமாய்ச் செயல்படும். உதாரணம் காற்று. காற்றில் எந்த எதிர்ப்பு சக்தியும் இல்லாததால் மின் அலைகள் அதிவேகமாகப் பாய்கிறது. காற்று ஊடுருவிப் பாயும் பொருள் ஒன்று கிடைத்தால் அந்தத் துரிதத்தை எட்டி விடலாம். ரிச்சர்ட் வுல், அப்படி ஒரு மாற்றுப் பொருள் தேடி ஆராய்ச்சி செய்தபோது, பறவைகள் அவருக்கு வழிகாட்டின. பறவைகளின் இறக்கைகளில் உள்ள இறகுகள் காற்றை நுழைய விடும் அமைப்பு கொண்டிருக்கின்றன. அவற்றுள் காற்று ஊடுருவிப் பாய்கிறது. பேட்மிண்டன் பூப்பந்து ஓர் உதாரணம். ரிச்சர்ட் வுல் அதை முன்னோடியாய்க் கொண்டு கோழி இறகுகளையும், தாவர எண்ணெயையும் கலந்து ஒரு விசேஷப் பொருள் தயாரித்தார். அதில் டிரான்ஸிஸ்டர்களைப் பொதித்து எலெக்ட்ரான்களின் பிரயாண வேகத்தைச் சோதித்துப் பார்த்த போது, அவை சிலிகானை விட இரண்டு மடங்கு வேகத்தில் பாய்வது கண்டுபிடிக்கப்பட்டன. "யுரேக்கா" என்று குதிக்க ஆரம்பித்தார் ரிச்சர்ட்.

ரிச்சர்ட் வுல் தம் கண்டுபிடிப்பைப் பதிவுசெய்து அங்கீகாரத்திற்காகக் காத்திருக்கிறார். கோழி இறகு கொண்டு தயாரிக்கப்படும் சிலிகானின் மாற்றுப் பொருள் அங்கீகாரம் பெற்று, தனியார் நிறுவனங்கள் அதன் உற்பத்தியை ஏற்றுக் கொண்டால் மைக்ரோ சிப்புகள் தயாரிக்கும் தொழில்நுட்பமே மாறிவிடும். ரிச்சர்ட் வுல்லுக்கு மவுசு கூடி விடும். கோழிகளுக்கும் தான்!



— ராகவ்

# எகிப்து



ஒரு பொம்மை ரயில் அளவே உள்ள அந்த ரோபோட் உள்ளே நகரத் தொடங்கிவிட்டது. மெல்ல... மெல்ல... ஊர்ந்து தன்னிடமிருக்கும் காமிராவால் படமெடுத்து அதை வெளியே ஒளிபரப்பக் காத்திருப்பவர்களுக்கு அனுப்பியபடியே நகர்கிறது. 8 அங்குல சதுர வழிப்பாதை. 200 மீட்டர்களுக்கு நீண்டிருக்கிறது. நேஷனல் ஜியாகிரபிக்கின் டீ.வியும், அமெரிக்க ஃபாக்ஸ் டீ.வியும் நேரடியாக ஒளிபரப்பும் அந்தக் காட்சியை கடந்த செவ்வாய்க் கிழமையன்று காண உலகம் முழுவதுமான பார்வையாளர்கள் காத்துக் கிடந்தார்கள்.

எகிப்தின் பாரோ மன்னர்களில் ஒருவரும், தன்னை 'சூரியக் கடவுள்' என்று அறிவித்துக்கொண்டவருமான 'சியோப்ஸ்' (மற்றொரு பெயர் குஃபு) 4500 ஆண்டுகளுக்கு முன் கட்டிய 481 அடி உயரமும், 756 அடி அகலமும் கொண்ட பிரும்மாண்டமான பிரமிட் அது. 2.3 மில்லியன் கல் வார்ப்புக்களைக் கொண்டது.



● ரோபோ

ரோபோட் ஊர்ந்து செல்கிறது. குறுக்கே நிற்கும் கல் கதவைத் துளையிட்டு உள்ளே நுழைகிறது. அதன் காமிராக் கண்கள் உட்புறமிருக்கும் பெரும் கல் அறையைக் காட்டுகிறது. அது கல்லறையா, கல்-அறையா என்பது தெரியவில்லை. வெறும் கற்சுவர்கள்தான் தெரிகின்றன. ரோபோட் மேலும் நகர்கிறது. 200 மீட்டர்களைக் கடக்க இரண்டு மணி நேரமாகிறது. எதிரில் செவ்வகக் கல் போலத் தெரிகிறது. அதில் இரு பித்தளைக் குமிழ்கள் தெரிகின்றன. அது ஒரு கதவாகத்தான் இருக்க வேண்டும். உள்ளே என்ன இருக்கக் கூடும்? பாரோ மன்னரின் பொக்கிஷங்களா, எலும்புக் கூடா, ரகசியங்களா? அந்த 'ரகசிய அறையை' எப்படி நெருங்குவது? கதவை எப்படித் திறப்பது? ரோபோட் நின்று விடுகிறது.

பிரமிட்டின் உள்ளே மற்றொரு சேம்பரிலிருந்து ரோபோவை இயக்கிக் கொண்டிருக்கும் பொறியியல் வல்லுனர்களால் அதற்கு மேல் அதை இயக்க முடியவில்லை! கனமான கற்சுவர்கள் ரோபோவை இயக்கும் நுண்ணலைகளைத் தடுத்து விடுகின்றன.

1993ல் அந்தக் கதவு வரை ரோபோவை அனுப்பிய ஜெர்மானிய வல்லுனர்களின் அனுபவத்தைப் பயன்படுத்தி பாஸ்டனின் 'ஐ-ரோபோட்' நிறுவனம் ஆறுமாத காலம் அரும்பாடுபட்டு உருவாக்கிய 'பிரமிட் ரோவர்' இது. இந்த நாளுக்காக எகிப்தின் பழம் பொருள் சுப்ரீம் கவுன்சில் 'ஐ ரோபோட்' நிறுவனத்துடனும் நேஷனல் ஜியாக்ரபிக்காரர்களுடனும் ஓராண்டாக திட்டமிட்டுக் காத்திருக்கின்றனர்.

'இந்தக் கண்டுபிடிப்பின் கணங்களை வெகுவாக அனுபவித்தோம்' என்கிறார் நேஷனல் ஜியாக்ரபிக் டீவியின் தலைவர். ஒளி பரப்பின் போது பிரமிட்டின் அருகிலிருக்கும் மற்றொரு கல்லறையைத் திறந்தால் உள்ளே மனித எலும்புக் கூடு! 4500 ஆண்டுகளுக்கு முற்பட்டது.

மன்னன் சியோப்ஸுக்கு முந்தைய மன்னர்கள் இறப்புக்குப் பின்னர்தான் சூரியக் கடவுளாக மாற முடியும் என்று நம்பினார்கள். சியோப்ஸ் தான் உயிருடன் இருந்த போது தன்னை சூரியக் கடவுள் என்று அறிவித்துக் கொண்டான். அந்தப் பிரமிட்டிலிருக்கும் இதே போன்ற நான்கு சுரங்க வழிகளும் அவன் தத்துவங்களை விளக்குவதாக இருக்கலாம் என்று ஹவாஸ் நம்புகிறார்.

என்ன, பிராண்டன் ஃபிரேசர் நடித்த 'மம்மி' படத்தை இன்னொரு முறை பார்க்கலாமென்று தோன்றுகிறதா?

— விஸ்வக்





தேசியக் கல்வி ஆராய்ச்சி மற்றும் பயிற்சிக் கவுன்ஸில் தயாரித்த பாடத்திட்டம் பற்றி, சுப்ரீம் கோர்ட்டின் மூன்று நீதிபதிகள் கொண்ட பெஞ்ச் தீர்ப்புக் கொடுத்திருக்கிறது. "இந்தப் பாடத் திட்டத்தில் அரசியல் சட்டத்திற்கு எதிரான அம்சங்கள் எதுவும் இல்லை. மேலும் மத்தியக் கல்வி வாரியத்தின் ஒப்புதல் வாங்காத ஒரே காரணத்திற்காக பாடத்திட்டம் அரசியல் சட்டத்திற்கு எதிரானது என்று சொல்லக்கூடாது'' என இரண்டு நீதிபதிகள் பெரும்பான்மை கருத்தைச் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் மூன்றாவது நீதிபதி, "பாடத்திட்டங்களுக்கு ஒப்புதல் வழங்குவதில், மத்தியக் கல்வி வாரியத்தின் பங்கு முக்கியமானது. அதை அலட்சியப்படுத்த முடியாது" என்று சொல்லியிருக்கிறார். சுப்ரீம் கோர்ட்டின் இந்தத் தீர்ப்பால் மகிழ்ச்சியின் உச்சியில் இருக்கிறார் மத்திய மனிதவளத்துறை அமைச்சர் முரளி மனோகர் ஜோஷி. "கல்வியைக் காவிமயமாக்குகிறோம் என்று எங்கள் மேல் அரசியல்

# காவிமயமாக்கலுக்கு பச்சைக் கொடியா?

காழ்ப்புணர்ச்சி காரணமாக அநியாயமாகப் பழிபோட்டார்கள். இப்போது சுப்ரீம் கோர்ட்டே வழி விட்டு விட்டது" என்று சொல்லியிருக்கிறார் அவர். "இந்தத் தீர்ப்பை அந்த ரீதியில் எடுத்துக் கொள்ளக் கூடாது; பாடத்திட்டத்தை அமுல்படுத்த கையாளப்பட்ட நடைமுறையை மட்டுமே சுப்ரீம் கோர்ட் ஏற்றுக் கொண்டுள்ளது. எனவே, ஒட்டுமொத்தப் பாடத்திட்டத்துக்கு சுப்ரீம் கோர்ட் அனுமதி கொடுத்ததாக எடுத்துக் கொள்ளக் கூடாது'' என்று முன்னணிப் பத்திரிகையாளர்களும், இடதுசாரிகளும் குரல்கொடுத்துள்ளனர்.

பாடத் திட்டம் "காவிமயமாக்குதலை" அடிப்படையாகக் கொண்டது என்று குற்றம் சாட்டுவதற்கான காரணங்களைத் தெரிந்து கொண்டு, சுப்ரீம் கோர்ட் தீர்ப்பைப் பற்றி சிந்தனை செய்வதே சரியான அணுகுமுறையாக இருக்கும்.

- காவிமயமாக்குதலுக்குப் பிள்ளையார் சுழி போடப்பட்டது 1998ல் நடந்த கல்வி அமைச்சர்கள் மாநாட்டில்தான். அப்போது சரஸ்வதி வந்தனம் பாடப்பட்டதால் கல்வி அமைச்சர்கள் வெளி நடப்புச் செய்தனர்.
- 'என்.சி.இ.ஆர்.டி'யின் பாடத்திட்டத்தை கல்வி அமைச்சர்களின் பரிசீலனைக்கு வைக்காததால் 16 மாநிலக் கல்வி அமைச்சர்கள் மாநாட்டில் வெளிநடப்பு செய்தனர்.
- காவிமயமாக்கல் அடிப்படையில் பாடப் புத்தகங்களை எழுதுவோரின் பெயர்கள் ரகசியமாக வைக்கப்பட்டன.
- 'சோதிட சாஸ்த்திரம்' பாடத் திட்டமாக வைக்கப்பட்டது.
- இந்தியாவில் திராவிட இனம் இருந்தது; இருக்கிறது என்பதை மறைக்கும்படியான பாடங்கள்.
- ஆரியர்கள் என்பவர்கள் மத்தியக் கிழக்கு ஆசியாவில் இருந்து வந்தவர்கள் அல்ல; அவர்கள் இந்தியாவின் பூர்வ குடிகள் என்று வரலாற்று உண்மைக்கு மாறான பாடங்கள்.
- செய்யும் தொழிலின் அடிப்படையில் மக்கள் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டதை வர்ணாஸ்ரம தர்மம் என்று சொல்கிறோம். ஜாதிபேதமற்ற சமுதாயத்தை அமைக்கப் பாடுபடும் இந்தக் காலகட்டத்தில், வர்ணாஸ்ரம தர்மத்தை கட்டிக் காப்பாற்றும் விதமாகப் பாடங்கள்.

"இந்தப் பாடத் திட்டங்கள் அமுலுக்கு வந்து நமது சிறார்களின் மனத்தில் பதியுமானால், நமது நாட்டின் பன்முகத் தன்மைக்கு நிச்சயமாக பங்கம் வரும்" என்கிறார்கள் கல்வியாளர்கள். "இந்தப் பாடத்திட்டங்கள் மக்களை பழமைவாதத்துக்கும் தள்ளிவிடும்" என்கிறார்கள் அவர்கள். "மதங்களைப் பற்றிச் சொல்லித் தருவதும், மதக்கல்வி என்பதும் வெவ்வேறானவை என்று சுப்ரீம் கோர்ட் தீர்ப்பில் சொல்லப்பட்டிருக்கிறது. மதங்களைப் பற்றி மாணவர்கள் தெரிந்து கொள்வதில் தவறில்லை. ஆனால் அந்த அணுகுமுறை விஞ்ஞானபூர்வமாகவும், காலத்தை ஒட்டியும் இருக்க வேண்டும். ஆனால் ஹிந்துத்வா சக்திகளின் நோக்கம் மதத்தின் பெயரால் அறியாமையையும், துவேஷத்தையும் வளர்ப்பதுதான்" என்கிறார் இடது கம்யூனிஸ்ட் பிரமுகர் பிரகாஷ் கரட். "தேன்கூட்டில் கை வைக்க வேண்டாம்" என்றும் எச்சரிக்கிறார் அவர்.

— கௌசி

உ



# ஸ்ரீ ஸர்வாங்கஸுந்தரீஸமேத ஸ்ரீ ஸற்குணேச்வரர் ஆலயம், கருவேலி



ஸ்ரீ வாஞ்சாகல்பலதா ஸ்ரீ வித்யாகணபதி உபாஸனா யோகபீடாதிபதி ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீ வித்யாகணேச ஸ்வாமிகள் ஆக்ஞைப்படி

# ஏகதின ஷோடசலக்ஷ ஸ்ரீ மஹாகணபதி ஸஹஸ்ரநாம பாராயணம்

**ஸ்ரீ ஸர்குணேச்வரர் ஆலயத்தில் 29.09.2002 ஞாயிறு அன்று மதியம் 2.00 மணி முதல் மாலை 6.00 மணி வரை நடக்கிறது.**

---

கருவிலியில் (தற்போது கருவேலி என்று மருவிவந்துள்ளது) எழுந்தருளி அருள்பாலிக்கும் **ஸ்ரீ ஸற்குணேச்வரரையும், ஸ்ரீ ஸர்வாங்கஸுந்தரியையும்** நினைத்தவர்களும், தரிசித்தவர்களும் "கருவில்" புகார், (மறுபிறவி அடையாது முக்தியை அடைவர்) என்பது பெரியோர் வாக்கு. 51 சக்தி பீடங்களும் ஒருங்கே சேர்ந்து, பூர்ண யோகாக்னி ஸ்வரூபமாய், ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரியாய், கலியுக மக்கள் தங்கள் ஊனக்கண்களால் பார்த்து மகிழ்ந்து, எளிதில், ஸித்தர்களும் யோகிகளும் பெறக்கூடிய பெரும்பேற்றினை அடையும்படியாக, அழகே உருவெடுத்தவளாய் காட்சி அளிக்கிறாள். ஸித்த யோக புருஷரான, ஸ்ரீ வித்யாகணபதி உபாஸனாயோகபீடாதிபதி, ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீ வித்யாகணேச ஸ்வாமிகளுக்கு ஸ்ரீ ஸர்வாங்கஸுந்தரி இட்ட கட்டளையின் படியே, அகில உலகிலுள்ள எல்லா உயிர்களின் நலனுக்காக முதன் முதலாக அவளது ஸந்நிதியில் இந்த ஸ்ரீ மஹாகணபதி ஸஹஸ்ரநாம பாராயணம் நடத்தப்படுகிறது. இந்த ஸஹஸ்ரநாமத்தை எவர்கள் தூய்மையான மனதுடன் சொல்கிறார்களோ அவர்கள் இம்மையிலும், மறுமையிலும் எல்லா துன்பங்களும் நீங்கப் பெற்று நிறைந்த வாழ்வைப் பெறுவார்கள் என்பது திண்ணம்.

இந்த பாராயணத்தில் நம்பிக்கை மற்றும் தூய்மையான மனதுடன் ஆண்கள், பெண்கள், சிறுவர், சிறுமியர் எல்லோரும் கலந்து கொள்ளலாம். பாராயணத்தின் போது அமைதி யுடனும், ஈடுபாட்டுடனும் இருக்க வேண்டும் என்பதே நிபந்தனை. இதில் பங்கேற்போர் அனைவருக்கும் எண்ணற்ற பலன் கிடைக்கும்.

பாராயண ஏற்பாடுகளை கும்பகோணம் **ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா** ஏற்பாடு செய்து வருகிறது. (Ph: 0435 / 423297)

இங்ஙனம்,

**Dr. V.கிருஷ்ணமூர்த்தி**
பரம்பரை தர்மகர்த்தா

ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா
மற்றும் ஆஸ்திக அன்பர்கள்

---

**குறிப்பு:** 1.பாராயணத்தில் பங்கேற்பவர்கள் தங்கள் பெயர்களை ஸபாவில் பதிவு செய்ய வேண்டுகிறோம்.
2. பாராயணத்தில் பங்கேற்பவர்கள் மதியம் 1.45 மணிக்குள் ஆலயத்தில் இருக்க வேண்டும்.
3. கோயிலை அடைய நாச்சியார்கோயில் பூந்தோட்டம் மார்க்கத்தில் கூந்தலூர் பஸ் நிறுத்தத்தில் இறங்கி வடதிசையில் வரவேண்டும்.

### - தலித்துகள் குமுறல்

# மதிக்காவிட்டால் மதம் மாறுவோம்!

ஐந்தாறு தெருக்கள், சுமார் 250 வீடுகள் உள்ள சின்ன கிராமம் காஞ்சிபுரம் அருகிலுள்ள கூத்திரம்பாக்கம். மெயின் ரோட்டை விட்டு நெடுந்தூரம் தள்ளி உள்ளதால் சந்தடியின்றி அமைதியாக இருந்த கிராமம், முத்துமாரியம்மன் கோயில் திருவிழாவை நடத்துவதில் ஏற்பட்டுள்ள சாதிய உரசல்களால் தகித்துக் கொண்டிருக்கிறது.

கடந்த எட்டு ஆண்டுகளாக சாதிப் பிரச்னையினால் திருவிழா நடக்காமலிருந்த இக்கோயிலில் இந்த ஆண்டு திருவிழா நடத்த முயற்சித்தபோது மீண்டும் தகராறு.

'எங்களை ஒதுக்கிவிட்டுத் திருவிழா நடத்துகிறார்கள்' என்று தலித் மக்களும், 'வழக்கத்தை மாற்ற முடியாது' என சாதி இந்துக்களும் மல்லுக்கு நிற்க, பிரச்னை கொழுந்துவிட்டது.

இதனிடையே எங்களை மதிக்காத இந்து மதத்தை விட்டு விட்டு இஸ்லாத்தைத் தழுவப் போகிறோம் என்று தலித் மக்கள் அறிவிக்க, போலீஸ் பாதுகாப்பு, அரசு தலையீடு, அமைதிக் கூட்டம், அமைச்சரின் சமாதானம் என்று கிராமமே பரபரப்பாகிக் கிடக்கிறது.



• முத்துமாரியம்மன் கோயில்




• பேனர்

இப்பிரச்னை 1979ஆம் ஆண்டே கிளம்பி விட்டது. தங்கள் காலனி தெருவுக்கும் சாமியின் ஊர்வலத்தை எடுத்துவர வேண்டும் என்று கோரிக்கை வைத்திருக்கிறார்கள் தலித் மக்கள்.

'காலங்காலமாக இருந்து வரும் வழக்கத்துக்கு விரோதமாக உங்கள் தெருவுக்குச் சாமியைக் கொண்டு வர முடியாது' என்று மறுத்து விட்டனர் மெஜாரிட்டி வன்னியர்கள்.

ஊருக்குள் இருக்கும் 250 வீடுகளில் 50 வீடுகளில் தலித் மக்கள் உள்ளனர். அவர்கள் வசிக்கும் பகுதி ஊரையொட்டியே தனியாக உள்ளது. வன்னியர்கள் தவிர இங்கு கொஞ்சம் யாதவர்கள் வசிக்கின்றனர்.

"79ல் ஏற்பட்ட பிரச்னையின் போதே, அதுவரை திருவிழாவில் மேளம் (தாரை-தப்பட்டை) அடித்து வந்த தலித் பிரிவினர், 'சாமி எங்க தெருவுக்கும் வரணும்'' இல்லைன்னா நாங்க அடிக்க மாட்டோம் என்று ஒதுங்கி விட்டனர்'' என்கிறார் ஊராட்சித் தலைவியின் கணவர் மோகன்.

பிறகு வெளியூரில் இருந்து மேளம் வாசிக்க ஆட்கள் அழைத்து வரப்பட்டனர். அதற்கு ஆட்சேபணை இல்லை என்றாலும் சாமி தங்கள் தெருவுக்குள் வர வேண்டும்

என்பதில் உறுதியாக இருந்துள்ளனர் தலித்துகள்.

பிரச்னை தாசில்தார் முன்னிலையில் காஞ்சிபுரத்தில் பேசப்பட்டது.

"கோயில் திருவிழா வருவின் போது எங்களிடம் பங்குத் தொகை பெற வேண்டும். நிர்வாகத்தில் இடமளிக்க வேண்டும்' என்று கூறப்பட்டது. ஆனால் இவர்கள் எங்களுக்குத் தெரியாமல் நீதிமன்றம் போய் விட்டனர்" என்று குற்றம் சாட்டினார் தலித் பிரமுகர் வேதாசலம்.

கோயில் உரிமைகேட்டு நீதிமன்றம் போன கதிர்வேல் நாயக்கர், "பல ஆண்டுகளாக நாங்கள் நிர்வாகம் பண்ணிக்கிட்டு வர்றோம். முன்னோர்கள் வழக்கப்படிதான் எல்லாம் நடந்துக்கிட்டு வருது. அவர்களை நாங்க சாமி கும்பிடக் கூடாதுன்னு சொன்னதில்லை. எது வழக்கமோ அதைக் கடைபிடிக்கணும்னு சொல்றோம்; அவ்வளவுதான். காஞ்சிபுரத்தில் கலெக்டர் கூப்பிட்டு அமைதிக்கூட்டம் போட்டப்பவே நான் கேட்டேன். காஞ்சி காமாட்சி அம்மன் ஊர்வலத்தை வழக்கத்துக்கு மாறா புதிதா ஒரு தெருவுக்குள் போக வைக்க முடியுமா? அப்படித்தான் கிராமத்திலே எது வழக்கமோ அதுபடி நடக்கணும்னு சொன்னேன்' என்கிறார்.

இந்தக் கோயிலுக்குத் தலித்துகளும் பங்கு(வரி) தருகிறார்களாம்.

"அவங்க அப்படிச் சொல்றதில் உண்மையில்லை, நாங்க தான் கோயில் நிர்வாகம் பண்றோம். எங்க ஜனங்களிடம் தலைக்கட்டுக்கு (குடும்பத்துக்கு) இவ்வளவு என்று பங்குத் தொகை வசூல் பண்றோம். அவங்க அப்படி தர்றது இல்லை. ஏதோ கொஞ்சம் தருவாங்க. அதையும் அவங்க தெருவில் உள்ள அம்மன் கோயில் திருவிழாவின் போது நன்கொடையாக் கேட்டு வாங்கிட்டுப் போவாங்க. அவங்க தந்ததோட மேல போட்டு அதிகமாகவே திருப்பிக் கொடுப்போம்" என்கிறார் கோயில் நிர்வாகியான ஏழுமலை.

• மோகன்



• கதிர்வேல்





• தலித் இளைஞர்கள்

"இவங்க தகராறுனால எட்டு வருடம் கோயில் திருவிழா இல்லாமத்தான் கிடந்தது. 2002 பிப்ரவரியில் எங்க ஆட்கள் போட்ட கேஸ்ல தீர்ப்பாகி, திருவிழாவை, கோயில் பூஜையை யாரும் தடை செய்யக் கூடாது. எல்லோருமாக சாமி கும்பிடலாம்' என்று சொல்லப்பட்டது. அதன்படி எட்டு ஆண்டாக நடக்காத திருவிழாவைத் தீர்ப்பு வந்ததும் நாங்க கொண்டாட முடிவு பண்ணி ஏற்பாடு எல்லாம் பண்ணினோம். ஆனா தலித்துகள் பிரச்னை பண்ணிட்டாங்க. போலீஸ் கேஸாகி 144 தடை உத்திரவு போட்டுட்டாங்க. ஏற்பாடு எல்லாம் வீணாகிப் போச்சு. பொங்கல் வைக்கப் போன பெண்களைக் காவலர்கள் விரட்டி அடிச்சி, சட்டி பானையையெல்லாம் உடைச்சிட்டாங்க" என்கிறார் மோகன்.

"ஊரில் பஜனை மடம், அங்காளம்மன், சென்னியம்மன், விநாயகர் என்று நான்கைந்து கோயில்கள் இருக்கின்றன. நாங்கள் அதையெல்லாம் எங்க தெருவுக்கு வர வேண்டும் என்று கேட்கவில்லை. ஆனால் மாரியம்மன் கோயில் ஊர் பொதுவில் உள்ளது. எங்க அப்பன், பாட்டன் கல்லுமண்ணு சுமந்து கட்டின கோயில் அது. அப்படி இருக்கும்போது எங்களுக்குக் கோயிலில் உரிமையில்லைன்னு பேசறது நல்லாயில்லைன்னு



"என் காதலியோட அப்பாகிட்டே 'நான் உங்க பெண்ணைக் காதலிக்கிறேன்'னு தைரியமா சொல்லிட்டேன்!"

"என்ன சொன்னாரு?"

"என்னைக் கட்டிக்கிட்டு 'ஓ'ன்னு அழுதாரு!"

- மெலட்டூர் விசுவநாதன்

தான் சொல்கிறோம்" என்கிறார் கோயில் விவகாரத்தில் உயர்நீதி மன்றத்திற்கு அப்பீல் செய்த தலித்துகளில் ஒருவரான ஏழுமலை.

"நாங்க உரிமை கோரி அதிகாரியிடம் போனோம். அமைதிக் கூட்டம், அது இதுன்னாங்களே தவிர, சாமி எங்க தெருவுக்கு வர ஏற்பாடு எதுவும் செய்யவில்லை. அமைச்சர் சோமசுந்தரம் கூட வந்தாரு. 'உங்களுக்குத் தனிக் கோயில் கட்டித் தறோம்' என்று சொன்னார். அது எங்களால் முடியாதது அல்ல. அந்தக் கோயிலில் எங்களுக்கு உரிமை உண்டு. ஐந்து தெரு சுற்றி வரும் சாமி ஆறாவதாக எங்க தெருவுக்கு வந்தால் என்ன? ஆனால் அதை யாரும் ஏற்றுக் கொள்ளவில்லை. அரசாங்கம் அவங்க திருவிழாவுக்குத்தான் போலீஸ் பந்தோபஸ்து எல்லாம் கொடுத்தது. ஆறு மாதம் முன்பு காஞ்சி சங்கராச்சாரியார் நடத்திய அமைதிக் கூட்டத்தில் கூட, "உங்க தெரு சுத்தமாயில்லை. அதனால் சாமி அங்கு வரமுடியாது" என்றுதான் சொன்னார். மத்த தெருவை விட நாங்க சுத்தமாகத்தான் வைத்திருக்கிறோம்" என்கின்றனர் தலித் இளைஞர்கள்.

"அரசு, மதத் தலைவர்கள் எல்லாம் உயர் சாதிக்குத்தான் சாதகமாக செயல்படுகிறார்கள். அதனால்தான் மதிக்காதவர்களை விட்டு விட்டு மதம் மாறுவது சரி என்று முடிவு எடுத்தோம்" என்கின்றனர் அவர்கள்.

"கோயில் திருவிழா நடக்கும் அன்றே நாங்கள் மதம் மாறுவது என முடிவு எடுத்து காஞ்சிபுரத்தில் உள்ள ஐந்து ஜமாத்துகளை அணுகி நாங்கள் மதம்மாறும் விஷயத்தைத் தெளிவுபடுத்தினோம். அவர்களும் ஒப்புக் கொண்டனர். அதற்கான ஏற்பாடுகள் நடந்தன. தொப்பி, கைலி எல்லாம் வாங்கி மேடை போட்டு வைத்துக் கொண்டு, இஸ்லாமியப் பாடல் கேசட்டுகளை ஒலிபரப்பி மதம் மாறுவதை விழாவாகவே நடத்த முயற்சித்தோம். ஆனால் இஸ்லாமியத் தலைவர்களைக் கிராமத்துக்குள் அனுப்பாமல் மெயின் ரோட்டோடு போலீஸ் திருப்பி அனுப்பிவிட்டது" என்கிறார் தலித் பிரமுகர் வேதாசலம். "ஆனாலும் மதம் மாறுவது உறுதி. இந்து தவிர மற்ற மதங்களில்கூட சாதியிருக்கிறது. இஸ்லாத்தில் அது இல்லை. சமமாகத்தான் நடத்துகிறார்கள் என்பதை நாங்களே அறிந்திருக்கிறோம். தமிழகம் தழுவிய ஜமாத் தலைவர் ஒருவர் எங்களுக்கு வழி காட்டுவதாக உறுதி கூறியிருக்கிறார்" என்கிறார் அவர்.

ஊருக்குள் நுழையும் போதே 'மதம் மாறும் திருவிழா' என்ற பேனர் கட்டப்பட்டுள்ளது. ஊருக்குள்ளும் காலனி முகப்பில் பேனர்கள் அலங்கரிக்கின்றன.

ஆனால், யாரும் இன்னும் மதம் மாறியதாகச் செய்தி இல்லை. காலனிக்குள் இன்னமும் அம்மன் கோயில் விளக்கு எரிந்து கொண்டிருக்கிறது. கிராமத்துப் பெண்கள் இது குறித்து எதுவும் பேச மறுக்கின்றனர்.

'இந்த ஆண்டு திருவிழா முடிந்து விட்டது. இனி நாங்க அடுத்த ஆண்டுதான் அதைப் பற்றிக் கவலைப்படவேண்டும்' என்று முடித்துக் கொண்டார் கோயில் நிர்வாகி. ஊரில் போலீஸ் கண்காணிப்பு தொடர்ந்து இருந்து வருகிறது.

ஊரைவிட்டுப் புறப்பட்ட போது வழியில் கண்ட ஒரு மூதாட்டி சொன்னதுதான் முத்தாய்ப்பு வார்த்தை. 'அந்த முத்து மாரி அம்மன் எல்லார் மனசையும் சரிப்படுத்தி ஒழுங்கு படுத்தணும்' என்கிறார் அவர்.

"சாமி விஷயத்தில் இப்படி பிரச்னை பண்ணிவிட்டு இறைவன் முன்பு அனைவரும் சமம் என்று கூறுவது அர்த்தமில்லாத ஒன்று. அரசும் பிரச்னை வரும் போது மட்டும் தலையிட்டு ஏதாவது செய்வது என்பதைக் கைவிட்டு நிரந்தரத் தீர்வுக்கு வழிசெய்ய வேண்டும்" என்கிறார்கள் இப்பகுதி மக்கள்.

— இரா. சுந்தரமூர்த்தி

படங்கள்: ராஜன்

# பசு (கோமாதா) பராமரிப்புக்கு உங்கள் அன்பு காணிக்கையை வழங்குங்கள்!

**ஆன்மிக அன்பர்களுக்கு வணக்கம்! கோமாதா தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.**

இந்துக்களின் அனைத்து தெய்வங்களும் உள்ளடங்கிய "கோ" என்பது கோமாதாவாகிய "பசு" ஆகும். அது தாயைப் போன்றது. பிறந்த குழந்தைக்கு தாய்ப்பால் எவ்வளவு அவசியமோ அதற்கு நிகரான பசுவின் பால் குழந்தைப் பாதுகாப்புக்கு மிக அவசியமாகும். இத்தகைய புனிதமான காமதேனுவை - கோமாதாவை - பசுத்தாயை பராமரிப்பதும், பாதுகாப்பதும், பூஜைசெய்து வழிபடுவதும் ஒவ்வொரு இந்துவின் கடமையாகும். மேலும் பசுக்களை காப்பாற்றுவதே உண்மையான லட்சுமி பூஜை என்ற நல்லுணர்வுடனும், சமுதாய சிந்தனையுடனும் சென்னை திருவேற்காடு அருள்மிகு தேவி கருமாரியம்மன் திருக்கோயில் அருகில் "ஸ்ரீ கோசாலா சேவா டிரஸ்ட்" மூலம் பசுமடம் ஒன்றை பெருமாளகரம், திருவேற்காடு, சென்னை - 77 என்ற விலாசத்தில் ஏற்படுத்தியுள்ளோம். பசுக்களின் துன்பங்களைத் தனதுபோல் உணர்ந்து அவற்றைப் போக்கவும், மத்திய, மாநில அரசின் பசு வதை சட்டத்தை மதித்தும், குடும்பநலன் கருதியும் நமக்குப் பலவழிகளில் நன்மைதரும் பசுக்களை வாங்கி நமது பசுமடத்திற்கு அனுப்பிப் பாதுகாக்க, பராமரித்து பூஜை செய்து வழிபட, கொடுப்பதன் மூலம் தங்களுக்குக் கோமாதாவின் அருளைப்பெற இது ஒரு நல்ல வாய்ப்பாகும்.

நீங்கள் தானம் செய்யும் பசுவுக்கும், கன்றுக்கும் வைதீக முறைப்படி புரோகிதர்களை வைத்து நித்தம் பூஜைகள் உங்கள் பெயரில் நடத்தி வைக்கப்படுகிறது. மேலும் பசுத்தொழுவத்தில் கோமாதாக்களுக்கு நவீன விஞ்ஞான முறைப்படி பராமரிப்புகள், மின்விசிறிகள், வேதபாராயண ஸ்லோகங்கள், கண்ணன் தெய்வீகப்பாடல்கள் தொடர்ந்து ஒலிக்க ஒலிநாடாக்கள் இயக்கி வைக்கப்படுகிறது. இத்தகைய பராமரிப்புகள், வழிபாடுகள் அமைந்துள்ள கோசாலாவிற்கு கோதானம் செய்து கோமாதாவின் தெய்வீக அருளைப்பெற அன்புடன் அழைக்கிறோம். பசுவை பராமரித்து, பாதுகாத்து பூஜிக்கவும், பசுக்களின் தினப்படி ஆகாரங்களுக்கும், தீவனங்களுக்கும் தினம், வாரம், மாதம், வருடம் என முறைப்படியாகும் செலவுகளுக்கு உதவியளித்து கோமாதாவின் அருளைப்பெறுவதுடன் வாழ்வில் உயர்வும் பெற்றிடலாம்.

*தீவனம் அனுப்புவோர் TVS/ABT மூலமாக மைலாப்பூர், சென்னை - 4 க்கு அனுப்பி வைத்து எங்களுக்குத் தெரிவித்தால் நாங்கள் உடனே Delivery எடுத்துக் கொள்வோம்.*

பசுத்தாயின் உடலில் மும்மூர்த்திகளும், 33 கோடி தேவர்களும், அனைத்துப் புண்ணிய தீர்த்தங்களும் குடிகொண்டுள்ளன. பசுவை வலம் வந்தால் எல்லா தெய்வங்களை வணங்கிய பலனும், எல்லாப் புண்ணிய நதிகளில் நீராடிய பலனும் தங்களுக்குக் கிடைக்கும் என்று வேதசாஸ்திரங்கள் சொல்கின்றன. பசுச்செல்வத்தின் உடல் புண்ணியத்தின் விளைநிலம். இறந்த நமது முன்னோர்களுக்கு உணவு அளிக்க விரும்பினால், பசுவிற்கு கொடுத்தால் போதும். அது நமது முன்னோர்களுக்குப் போய்விடும். பசுவின் சாணம் கிருமிநாசினியாகப் பயன்படுத்தப்பட்டு வருகிறது. பஞ்சகவ்யம் எனப்படும் பால், தயிர், நெய், கோமியம், சாணம் இவைகளில் இருந்து தயாரிக்கப்படும் மருந்து தீராத வியாதியாகிய கேன்சரைக் குணப்படுத்துகிறது. இப்படி நீதிப்படி பார்த்தாலும், விஞ்ஞானப்படி பார்த்தாலும் பல வழிகளில் நமக்கு நன்மை தரக்கூடிய பசுத்தாயைப் பாதுகாத்து வணங்க வேண்டியது மிகவும் அவசியமான ஒன்றாகும்."இறைவனுக்கு அபிஷேகமாகும் பாலையும், இறைவனின் திருமேனியை அலங்கரிக்கும் விபூதியையும், வேள்விகளுக்கான வரட்டியையும், நெய்யையும், பறை, பேரிகை முழங்க தன் தோலையும் வழங்குவது கோமாதாதான் என்பதை தாங்கள் நன்கு அறிவீர்கள்.

பசுவைப் பாதுகாத்து பராமரிக்க தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.

* ரூ.500/- அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.
* ரூ.1000/- அனுப்பும் ஆன்மிக அன்பர்களுக்கு, 'ஆன்மீகம்' மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
* ஒரு பசுவை பராமரிக்க ஆண்டிற்கு ரூ.5400/- தேவைப்படுகிறது. இந்த நன்கொடையை வழங்கும் ஆன்மிக அன்பர்கள் சார்பாக ஒரு பசுவை ஒரு ஆண்டிற்கு பராமரிப்பதுடன், தங்களை "Ghomadha Seva Scheme" "பசு சேவை திட்டம்" என்ற புனித அமைப்பில் சேர்த்துக் கொள்ளப்படுவதுடன் "ஆன்மீகம்" மாத இதழ் 10 ஆண்டுகளுக்கு தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ஆன்மிக அன்பர்கள் தங்களுடைய திருமண நாள், பிறந்த நாள், பிள்ளைகளின் பிறந்த நாள், பண்டிகை நாட்கள், விசேஷ நாட்கள், முன்னோர்கள் திதி நாட்கள் என தங்களுக்கு உகந்த நாட்களில் பசுவை தானமாகத் தரலாம். மேலும் இதுபோன்ற முக்கிய நாட்களில் தாங்கள் "கோ பூஜை" செய்ய விரும்பினால் அந்த நாட்களில் நமது "ஸ்ரீ கோசாலா சேவா டிரஸ்ட்" என்ற அமைப்பின் மூலம் சென்னை திருவேற்காட்டில் நிர்வகிக்கப்படும் "பசுமடத்திற்கு" குடும்பத்துடன் நேரில் வரலாம். குழந்தை இல்லாதவர்கள் 1 ஆண்டு பசு கன்று வளர்த்து சேவை செய்ய குறை நீங்கும். தீராத துன்பங்கள் குடும்ப பீடை உடையவர்கள் வெள்ளிக்கிழமை விரதமேற்று பூஜை செய்ய குடும்ப சுபிட்சம் ஏற்படும். திருமணம் ஆனவுடன் பசு ஒன்றை வளர்க்க தொடங்கிட மணமக்கள் மங்கள வாழ்வு பெறுவார்கள். பலவிதமான சாபத்தால் ஏற்பட்ட குறை நீங்க கோவில்கள், மடங்கள், அந்தணர்களுக்கு பசுதானம் செய்ய சாபம் விலகும். 108 பசுக்களை ஒரே நேரத்தில் தரிசித்தால் நூறு ஆண்டுகள் இறைவனை வழிபட்ட பயன் ஒரு நாளில் உண்டாகும். தொழில் விருத்தி, வியாபார விருத்தி, திருமணத்தடை, புத்திர பாக்யம், குடும்ப நலன் ஏற்பட கோமாதா பூஜை செய்ய குறை நீங்கி சுகவாழ்வு ஏற்படும்.

இறைச்சிக்காக பசு கொல்லப்படுவதை தடுக்கவும், குடும்பநலனுக்காக பசுக்களை காக்கவும், கோபூஜை செய்யவும், ஆன்மீக அன்பர்கள் பசுவைத் தானமாக கொடுக்கலாம் அல்லது பசுக்களை பாதுகாத்து பராமரிக்க தங்களால் இயன்ற அளவு நன்கொடையை Cheque/D.D/M.O மூலமாக Shri Ghosala Seva Trust என்ற பெயருக்கு மேற்கண்ட முகவரிக்கு அனுப்பி உதவுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.



# பசுமடம்

## பசுக்கள் பாதுகாப்பு இல்லம்

(ஸ்ரீ கோசாலா சேவா டிரஸ்ட் மூலம் பராமரித்து பாதுகாக்கப்படுகிறது)

பெருமாளகரம், திருவேற்காடு (P.O), சென்னை - 600 077.

✆ : 4959302 Fax: 7102308 E-mail:sivasiva@vsnl.net

**பசு பாதுகாப்பு, உலகத்திற்கு இந்துமதம் அளித்துள்ள அருமையான பரிசாகும்!**






# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
- பாரதியார்.

## காஷ்மீர் தேர்தல் - தார்மிக வெற்றி!

காஷ்மீரில் முதல் சுற்று வாக்குப்பதிவு வெற்றிகரமாக நடந்துள்ளது மிக நல்ல அறிகுறி. அம்மாநில மக்கள் இந்திய ஜனநாயக மரபுகளில் பெரும் நம்பிக்கை வைத்துள்ளதற்கு அடையாளம் 44 சதவிகித வாக்குப்பதிவு.

அமைதி நிலவுகிற இந்தியாவின் இதர பகுதிகளில் தேர்தல் நடக்கும்போது பதிவாகும் வாக்குகள் விழுக்காடை ஒப்புநோக்க, காஷ்மீரில் 44 சதவிகிதம் பதிவாகியிருப்பது ஆரோக்கியமான வெற்றி.

தேர்தலுக்குச் சில தினங்கள் முன்புதான் முக்கிய வேட்பாளர் கொலை செய்யப்பட்டிருக்கிறார். பயங்கரவாதிகள் தங்கள் கைவரிசையைக் காட்டியுள்ளனர்.

தேர்தல் தினத்தில் ஹுரியத் அமைப்பு பந்த் அறிவித்து, தேர்தலைப் புறக்கணிக்க அழைப்பும் விடுத்துள்ளது. இத்தனையும் மீறி மக்கள் பல பகுதிகளில் உற்சாகத்தோடு வாக்களித்



2002 செப்டெம்பர் 29
சித்ரபானு புரட்டாசி13
மலர் : 61
இதழ் : 9




துள்ளனர்.

வோட்டுப் போட ராணுவம் அவர்களை வற்புறுத்தியதாகக் கூறுகிறது ஹுரியத் அமைப்பு. ஆனால் அங்கே இருந்துகொண்டு செய்தி சேகரித்த மீடியாக்காரர்களின் கருத்தும் செய்தித் தொகுப்பும் அதை மறுக்கிறது.

பயங்கரவாதம் இன்னமும் கட்டுக்கடங்காமலிருக்கும் பகுதிகளில் வாக்குப்பதிவு குறைவாகவே நடைபெற்றிருப்பதையும், ராணுவ பாதுகாப்பு கூடுதலாக உள்ள கார்கில், பூஞ்ச், குப்வாரா, ரஜௌரி போன்ற பகுதிகளில் வாக்குப்பதிவு சதவிகிதம் அதிகமாயிருப்பதையும் கவனிக்க வேண்டும். போதுமான பாதுகாப்பு இல்லாத இடங்களில், மக்கள் தொகை குறைவாகவே இருக்கும். உயிருக்குப் பயந்து கொண்டு அவர்களுள் பெரும்பாலோர் வாக்களிக்கவும் அஞ்சுவார்கள். மாறாக, ராணுவ பாதுகாப்பு கூடுதலாக உள்ள இடங்களில் மக்கள் அச்சமின்றி ஊக்கத்துடன் வாக்குப் பதிவு செய்ய முன்வருவார்கள். இதையே வாதத்துக்குச் சௌகரியமாகத் திருப்பிப் போட்டுக் கொண்டு, ராணுவம் வற்புறுத்தியதால்தான் மக்கள் அப் பகுதிகளில் வாக்களித்தனர் என்று குற்றம் சாட்டலாம்.

ஆனால், தங்கள் விருப்பத்துக்கு விரோதமாக மக்களை வாக்குச்சாவடிக்கு அழைத்துச் செல்வது என்பது சுலபமல்ல. அவ்வாறு செய்யப்பட்டிருப்பின் இந்த சாடிலைட் தொலைக்காட்சி யுகத்தில் உலகமெங்கும் காட்டுத்தீ போல் செய்தி பரவியிருக்கும்.

உலகப் பார்வையாளர்கள் அனுமதிக்கப்படாவிட்டாலும் உலகப் பத்திரிகையாளர்கள் இத் தேர்தலைக் குறித்து செய்தி சேகரிக்க அனுமதிக்கப்பட்டுள்ளனர். உலகமே காஷ்மீரை உற்றுநோக்குகையில் ராணுவத்தைக் கொண்டு மக்களைக் கட்டாயப்படுத்தும் அசட்டுத்தனத்தை எந்த அரசும் செய்யாது. அவ்வாறு செய்வதற்கான அவசியமும் மாநில, மத்திய அரசுகளுக்கு இல்லை. நியாயமாகத் தேர்தலை நடத்தி நல்ல பெயர் எடுக்கவே அவை விரும்பும்.

இதையும் மீறி ராணுவ பலம் துஷ்பிரயோகமாகும் சிறு சந்தர்ப்பங்கள் ஒன்றிரண்டு இருக்கலாம். ஆனால், ராணுவத் துணையுடன் மக்களைக் கட்டாயப்படுத்தும் நோக்கம் அரசுக்கு இல்லை



என்பது தெளிவாகியிருக்கிறது.

முதல் சுற்றுத் தேர்தலைப் போலவே, அடுத்த இரு சுற்றுகளும் அமைதியாக நடந்து முடியும் என்று நம்பிக்கை கொள்ள இடமிருக்கிறது. இன்னும் சொல்லப் போனால், முதல் சுற்றின் வெற்றியால் இதர பகுதிகளிலுள்ள மக்கள் நம்பிக்கை பெற, முதல் சுற்றைக் காட்டிலும் மற்ற சுற்றுகளில் அதிகமாக வாக்குப் பதிவு நடைபெறலாம். அந்தச் சுற்றுகளின் போது, எவ்விதக் குறையும் கூறுவதற்கு இடமின்றி ராணுவமும், மாநில அரசு நிர்வாகமும் மிகக் கவனமாகவும் எச்சரிக்கையாகவும் செயல்படவேண்டியது அவசியமாகிறது.

காஷ்மீரில் இந்திய ஜனநாயகம் வெற்றியடைந்து விட்டால் என்ன செய்வது என்கிற அச்சம் கொண்ட பாகிஸ்தானும் அதன் ஆதரவு பெற்ற பயங்கரவாத அமைப்புகளும், காஷ்மீர் தேர்தல் தோல்வியுற்றதாகவே சித்திரிக்க முயற்சி செய்யும்.

ஐக்கிய நாடுகள் சபையில் பாக். அதிபர் முஷாரஃப், குஜராத் சம்பவங்களைச் சம்பந்தமில்லாமல் பேசி, கண்டனம் தெரிவித்ததும் 'இந்தியாவில் ஜனநாயகம் படுகொலை செய்யப்படுகிறது' என்று முழங்கியதும் கூட காஷ்மீர் தேர்தலின் வெற்றியிலிருந்து உலகின் பார்வையை திசைதிருப்பும் முயற்சிதான்.

குஜராத்தில் நடந்தவை கண்டனத்துக்குரியவை என்றாலும் ஐ.நா. சபையில் அது குறித்துப் பேசுவதற்கான நியாயம் எதுவும் இல்லை.

முஷாரஃபின் வார்த்தைத் தாக்குதல் ஒருபுறம், பாகிஸ்தான் ஆதரவுடனான பயங்கரவாதிகளின் தாக்குதல் இன்னொருபுறம் - இரண்டையும் சமாளித்து காஷ்மீர் தேர்தல்களை வெற்றிகரமாக நடத்தி விட்டால், மத்திய அரசும் காஷ்மீர் அரசும் நியாயமான பெருமை கொள்ளலாம்.

ஜம்மு காஷ்மீர் தேர்தலில் ஜெயிக்கும் கட்சி வலுவான பெரும்பான்மை பெற்று ஆட்சி அமைக்குமானால், அந்த தார்மிக வெற்றியே அம்மாநில மக்களுக்குப் பெருமளவு ஆறுதலும் உற்சாகமும் அளிக்கும். பாகிஸ்தான் ஊடுருவலையும் பயங்கரவாதத்தையும் அணுகிச் சமாளிக்கும் பலமும் புத்துணர்ச்சியும் புதிய அரசுக்கு மக்களிடமிருந்து பிறக்கும். ○

# பெண்ணியம்

இருளாய்
பயம் கவ்விய பால்யத்தில்
துடியான கொண்டைச்சாமி
துணையென்று திரிந்தேன்

துடியானதெனச் சொன்னதெல்லாம்
தற்காப்புக்கே

உண்மையில்
அவள் இருந்தாள்
என் அம்மாவைப் போல

கோடைகள் பல கடந்தபின்
கொடைக்குப் போயிருக்கையில் பார்த்தேன்
கொண்டைச்சாமிக்குக் கைகளில்லை

பீடம் தகர்ந்து
சாத்தி வைக்கப்பட்டிருக்கிறாள்
ஒரு மூலையில்

பக்கவாட்டில் பற்கள் நீள
நாக்கை நீட்டிய காளியாத்தாளுக்கும்
நாயுடன் வேட்டைக்குக் கிளம்பும்
வைரவருக்கும்தான்
பூஜை புனஸ்காரங்கள்

கொண்டைச்சாமியோ
தலையில் சுண்ணாம்பு வழியக் கிடக்கிறாள்

சுவருக்கு வெள்ளையடித்தவன்
மட்டையை
தலையில் தட்டிச் சரிசெய்திருப்பான்

"லேசுப்பட்டவளில்லை...
அவள் கொண்டையவிழும்போது
அணுகுண்டு தின்று தீர்க்கும் உலகத்தை"
எனச் சிரிக்காமல் புளுகி விட்டால் போதும்
அடுத்த வருடமே
அவளுக்கும்
அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம்தான்



- மு. செல்லையா

# ஐந்து வயது அம்மா!

தென் அமெரிக்காவில் உள்ள பெரு நாட்டின் தலைநகரமான லீமாவுக்கு அருகில் உள்ள சிற்றூர். அங்கிருந்த ஒரு மருத்துவமனை வழக்கத்துக்கு மாறாக பரபரப்பாக இருந்தது. மருத்துவர்கள், பத்திரிகையாளர்கள், மருத்துவ மனை அதிகாரிகள், அரசு அதிகாரிகள் எல்லாம் குழுமியிருந்தார்கள். அவர்கள் அவ்வளவு ஆர்வமாய்க் கூடியது அன்றைக்கு மகப்பேறு பிரிவில் பிறந்த ஒரு குழந்தையைப் பார்க்க. தன்னைப் பார்க்க ஊரே கூடியிருப்பது தெரியாமல், குழந்தை அசந்து தூங்கிக் கொண்டிருந்தது.

அப்படி என்ன அந்தக் குழந்தைப் பிறப்பில் பரபரப்பு? அத்தனைக் களேபரமும் குழந்தையைப் பற்றி அல்ல. குழந்தையின் அம்மாவைப் பற்றி! லீனா மெடினா என்கிற அந்தக் குழந்தையின் அம்மாவுக்கு வயது 5 வருஷம் 7 மாதங்கள்!



மருத்துவ உலகில் பதிவு செய்யப்பட்ட இள வயது தாய்மைகளிலேயே மிகப் பிரத்யேகமானது லீனாவுடையதுதான். அவளின் இரண்டரை வயதிலேயே வயதுக்கு வந்திருந்தாள். ஐந்தரை வயது இருக்கும்போது அவள் வயிறு இலேசாக உப்பிப் போய் இருந்ததைக் கவனித்த பெற்றோர்கள் வயிற்றில் கட்டி என்று மருத்துவமனைக்கு எடுத்துச் செல்ல, அங்கே அவர்களுக்குப் பேரிடி! லீனா எட்டு மாத கர்ப்பம்! ஊரே அவள் குழந்தையைப் பார்க்கக் காத்திருந்தது. குழந்தை பிறந்ததும் தன் நிலையோ, தன் குழந்தை பற்றிய பிரக்ஞையோ இல்லாமல் லீனா பாட்டுக்குத் தன் பொம்மையோடு விளையாடிக் கொண்டிருந்தாள்.

இயல்புக்கு மாறாய் இருப்பவர்களைச் சமூகம் சும்மா விட்டு வைப்பதில்லையே. லீனா என்ற ஐந்து வயதுக் குழந்தையின் வாழ்க்கை பிறகு முற்றிலும் திசை திரும்பியது. அவள் காட்சிப் பொருளானாள்.

அம்மாவும் ஐந்து வயது வித்தியாசத்தில் மகனும் இரண்டு குழந்தைகள் வீட்டில் வளைய வந்த விநோதம் உலகத்தில் வேறு எங்கும் நடந்திருக்காது. ஜெரார்டோ என்ற குழந்தைக்கு லீனாவை அக்கா என்று அறிமுகப்படுத்தித்தான் வளர்த்தார்கள் பெற்றோர்கள். அவனது பத்தாவது வயதில்தான் இருவருக்கும் உண்மை சொல்லப்பட்டு, அத்தனை நாள் தன் தமக்கையாக வளைய வந்த லீனா அவன் அம்மாவானாள். தகப்பன் யார் என்பது இன்று வரை எவருக்குமே தெரியாத மர்மம்.

இதெல்லாம் நடந்தது 1939 இல். அறுபது வருடம் கழித்து இந்த மருத்துவ அதிசயம் சமீபத்தில் மறுபடியும் பரபரப்பாய்ப் பேசப்படுவதின் காரணம், லீனாவைப் பற்றி ஜோஸ் சான்டோவெல் என்கிற மருத்துவர் சமீபத்தில் வெளியிட்டுள்ள புத்தகம். 'mother aged five' என்ற அந்தப் புத்தகத்தில் அறுபது ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்த அந்த அதிசயத்தைப் பற்றிய பத்திரிகை வெளியீடுகள், மருத்துவக் குறிப்புகள் என்று எல்லாவற்றையும் தொகுத்து, அவளின் உறவினர்களிடம் பேசி விவரங்கள் சேகரித்து எழுதியிருக்கிறார்.

ஐந்து வயதில் பிறந்த மகனும் அவனது நாற்பதாவது வயதில் இறந்து போய்விட, அறுபத்தி எட்டு வயது நிரம்பிய லீனா இன்னும் உயிரோடு இருக்கிறார். தன் கடந்த காலத்தைப் பற்றி பேசுவதையே அவர் தவிர்க்கிறார். குழந்தையாக இருக்கும்போதே தாயாகி, ஒரு ஆராய்ச்சிப் பொருளாய் மட்டுமே பார்க்கப்பட்டு, முதிய வயதில் தன் ஒரே மகனையும் இழந்து நிற்கும் லீனாவின் மனநிலை எப்படி இருந்திருக்கும் என்பது பற்றி யாரும் ஆராய்ச்சி செய்ததாகத் தெரியவில்லை.

– ஆனந்த் ராகவ்

■ க.சீ.சிவகுமார் ■

# துரையின் மரணம்



ரொட்டி துரையின் வீட்டுக்குத் தென் கிழக்கே தொப்பி துரையின் வீடு இருந்தது. ரொட்டி துரை என்னையும் என்னைப் போன்ற சிறுமிகளையும் சிறுவர்களையும் பார்க்கும்போதெல்லாம் விதவிதமான பிஸ்கட்டுகளைப் தந்து கவர்ந்திருந்தார். அவர் தனது மலை வாசஸ்தல வீட்டில் தனியே தனது பிஸ்கட் பொட்டலங்களுடன் வசித்தார். ஏதோ ஒரு மேலை நாட்டில் அவர் பிஸ்கட் பொட்டலத்துடனே பிறந்திருக்க வேண்டும். சரிந்தோடும் மலையின் சரிவில் வேர்ப்பிடிப்புகளே படிகளாய் அமைந்த மரப் பிராந்தியத்தில் இப்போது கிளைத்துப் பரவுவது தொப்பி துரையின் மீதான ஞாபகங்கள்தான்.

பூக்கள், சாக்லெட்டுகள், நாலணாக்கள், எட்டணாக்கள், முழுதும் தீராத தவத்தைல (சென்ட்) பாட்டில்கள் என அப்போதைக்கு எதிர்பாராத ஏதோ ஒன்றை சிறார்களுக்கு வழங்குவது அவரது குணமாயிருந்தது. கைகளிலும் பாக்கெட்டிலும்

எதுவுமில்லாதபோது மேடுகள் உப்பிப் பணைத்த தனது ரத்த ஓட்டம் தெரியும் கைகளை அசைத்துச் சிரிப்பார்.

குழந்தைகளுக்கும் சிறுவருக்கும் மனிதர்கள் அறிமுகமாகும்போது 'முன் கதைகள்' இல்லாமல்தான் அறிமுகமாகிறார்கள். தொப்பிதுரையும் அவ்விதம்தான் தோன்றினார். இன்றளவும் கனவில் தோன்றும் மூன்று குதிரைகளுக்காகத்தான் இந்தக் கதையைச் சொல்ல வேண்டி வந்தது. பழைய சம்பவங்கள் மீது இன்றைய அறிவைத் தூவுவதால் உண்டாகிற பனிமூட்டமான உவமைகளோடும் உண்மைகளோடும் இதைக் கதைக்க முயல்கிறேன்.

ரொட்டி துரை, தொப்பி துரை, ஆனா, எடி முதலான ஆங்கிலம் பேசுவோர்க்கும் மற்றுமிரு தமிழ் பேசும் குடும்பத்தினருக்கும் பால் வழங்கும் பொறுப்பும் வருவாயும் எங்கள் குடும்பத்துக்கு இருந்தது.

'வரை' எங்கும் ஏறி இறங்கிப் புல் அறுத்து அப்பா தலைக் கட்டாய்க் கொண்டு வருவார். பால் கறப்பதும் பாத்திரம் துலக்குவதுமான அம்மாவின் விரல் நகங்கள் தேய்மானத்தின் பிறைவடிவம் கொண்டிருந்தன.

ரொட்டி துரையின் வீட்டுக்கு அடுத்த படி பால் ஊற்ற தொப்பிதுரையின் வீட்டுக்குப் போவோம். ஸ்வெட்டர் அணிந்த எனக்குத் துணையாக ஸ்வெட்டர் அணிந்த என் தங்கையும் வருவாள். வருட முழுவதும்



அதிகாலையில் பனியுணரும் மலைத் தேகத்தில் தந்தியடிக்கும் பற்களில் குளிரைச் சூடி இருப்போம். பசும்பாலின் புகைபோல வாய்களிலிருந்து ஆவி வெளியேறும்.

தொப்பிதுரையின் வீட்டிலிருந்து இடப் புறம் பார்த்தால் தொலைவில் பனிமலை மாதாவின் கோபுரச் சிலுவை தெரியும். வலது கைப் பின் வாட்டத்துத் திசையி லிருந்து மாலை நேரத்தில் 'தற்கொலைப் புள்ளி'யின் சுற்றுலாவினரின் பேச்சரவங் களையோ கூச்சலரவங்களையோ கேட் கலாம். குதிப்போர்க்கு வல்வினைபோம். துன்பம்போம் என்று யாராவது அப் பகுதியில் விழுந்துவிட்டால் உடலை மீட்கும் கூலிக் குழு தொப்பி துரையின் வீட்டின் பின்னால் கூடிப் பேசுவார்கள். துயரம்தான். வாழ்கிறவர்களுக்கு உடல் அவசியமாயிருக்கிறது.

அந்தக் குழுவினர் சடலமீட்புக்குப் போகிறார்கள் என அறிகிறபோது தொப்பி துரை தனது தொப்பியைக் சுழற்றியவாறு இரண்டு நிமிடம் அஞ்சலி செலுத்துவார். அவரது இரண்டு நிமிடம் நூற்றியிருபது விநாடிகளுக்குக் குறைவில்லாதது.

தொப்பி துரையின் சொட்டையோ அரை அடிக்குக் குறைவில்லாதது. நல்ல நேர்த்தியான சொட்டை அவருக்கு - மரத் தக்காளிப் பழத்தின் பளபளப்புக் கொண்டது.

தொப்பி துரையின் வீடு சால்வியா, டாலியா, கிளாடியஸ், ரோஸ், லூபின், பால் சம், கார்னேசன், பீசியா, (புனித சூசையப் பரின் கையிலுள்ள) லில்லி அனேகமாய் யாரும் கையில் வைத்திருக்காத காகிதப் பூ வகையினங்கள் சூழ்ந்ததாயிருந்தது.

தருவதற்கு எதுவுமற்ற ஒரு நாள் பால் குவளையில் எனக்காக "இந்த இனிய நாளில் என் அன்பே உனக்காக இந்தக் காகிதப்பூ" என்று ஆங்கிலத்தில் சொல்லிப் பறித்துத் தந்தார். சிராப்பின் சிறு விளாறு பவளக் கடுகுகளைப் பொங்குமாறு அழகிய முரட்டுக் கையைக் கிழித்துக் கொண்டார் காகிதப் பூஞ்செடியின் முள் ஒன்றால்.

நிதந்தோறும் பால் குவளையில் ஏதாவது ஒன்றைப் போட்டு வைத்திருப்பார். விதவித மான தின் பொருட்கள். குவளையில் ஒரு நாள் வெறும் காற்றுதான் இருந்தது. அந்த ஏமாற்ற நாளின் பகல் பொழுதில் என்னை எதிர் கண்டு "டார்லிங், இன்றைய சாக்லெட் சுவையாயிருந்ததா?" என வினவினார்.

நான், "நோ.. நோ... சாக்லெட் நோ" என்று அழுதுவிட்டேன்.

அன்று சாயங்காலம் வேலைக்காரன் ஆரோக்யத்தை பணி நீக்கம் செய்தார்.

"உனக்காக லட்சம் சாக்லெட்டுகள் வாங்கித் தந்திருக்க முடியும். போ. ஒரு குழந்தையை ஏமாற்றியவனே வெளியே போ." என்றார் தொப்பிதுரை - பொய்கள் பிடிக்காத தொப்பிதுரை.

சரியாகச் சொல்லப் போனால் அந்தக் காலத்தில் நான் தபால்பெட்டியை விடக் கொஞ்சூண்டு உயரமாயிருந்தேன்.

நாங்கள் வசித்த பகுதிக்குத் தபால்பெட்டி யும் தபால்காரரும் தொப்பிதுரையின் முயற்சியால் வருகையாயின. தலையில் ஈட்டிக் கூம்பினை நாட்டின தபால்பெட் டிக்கு ஒரு போர் வீரனின் தோற்றம் உண்டு. தபால் பெட்டிக்கும் தொப்பி துரை வீட் டுக்கும் இடைவெளி இருபதடி. தபால்காரர் வரும்போது விற்கவுமான தபால்களைக் கொண்டு வருவாராதலின் எனது தகப்ப னார் சமவெளியிலுள்ள எங்கள் உறவினர் களோடு தொடர்பு கொள்ள ஆரம்பித்தார்.

ஜில்லாவில் தொடங்கி பேர் நாமத்தில் முடிகிற அவரது முகவரி கூறும் சாமர்த்தி யத்தை நிரலில் பெயர்ப்பது எனது பெருஞ் சாதனைகளிலொன்று. தெருக்குறிப்பிடாத எங்கள் உறவினர்களுக்குக் கடிதங்கள் போயின. எங்களுக்கும் கீழ் நாட்டிலிருந்து கடிதங்கள் வந்தன.

மனிதக் காலடிபடாத இடத்தை நாடி உத்தேசித்து கொஞ்சூண்டு நிலத்தை எங்கள் தாத்தா இவ்விடத்தில் வளைத்துப் போட் டார். எப்படியும் மனிதக் காலடிபடாத ஏதாவது நிலப்பரப்பு மிஞ்சிக் கொண்டே இருப்பதால்தான் பூமி இன்னும் தரித்திருக் கிறது. ஆனால் மனிதர் உள்ள இடங்களுக்கு எல்லாம் கடிதங்கள் உண்டு. குதிரைகள் உண்டு.

தொப்பிதுரை தனக்காகவும் தன் மனை

"எதிர்க் கட்சிகளுக்கு தலைவர் நல்ல பாடம் புகட்டியிருக்காராம்..!"

"இருக்கலாம். அதுக்காக தனக்கு 'நல்லாசிரியர்' விருது கேட்கிறது சரியில்லை..."

- தஞ்சை தாமு

விக்காகவும் குதிரைகள் வாங்கி வந்தார். மூன்று குதிரைகள்.

பன்னிரண்டு ஆண்டுகளுக்கொரு முறை குறிஞ்சி, பன்னிரண்டு மாதமும் குளிர்ச்சி என அறியப்பட்ட மலைத் தலத்திலிருந்து உள்ளகத்தே நான்கு மைல் தொலைவிலிருந்தன எங்கள் காடுகள் வீடுகள். நகரிலிருந்து இந்த நாலு மைல் தூரத்திற்கான வளைவுகளாலான பாதையைத் தொப்பி துரையே முன்கை எடுத்து அமைத்தார். அந்தப் பாதை உருவாக நான்கு மாத காலம் பிடித்தது. பாதை உருவான மறு வாரமே பெங்களூரிலிருந்து லாரியில் வந்து சேர்ந்தன குதிரைகள். வெள்ளை நிறமொரு குதிரை, பிரவுன் நிறமிரு குதிரைகள்.

மாலை நேரத்தை மலைக்குளிர் அறிவிக்கும். குளிரோ பலசமயங்களில் பகலையும் மாலை நேரமாக்கி விடும்.

துரையும் மனைவியும் மாலை துவங்குமுன் ஆளுக்கொரு குதிரையேறி நகரம் நோக்கிப் போய் விட்டு மாலை மயக்கம் நிறைந்ததும் இரவு மிருதுவாகவும் இருக்கும் அந்திச் சந்தியில் திரும்புவார்கள். கோட், சூட், தொப்பி, தொப்பியில் சூடும் பூ, யாவும் ஒரே நிறத்தில் அமையுமாறு கோலம் பூண்டிருப்பார்கள். பயணத்துக்கு வெள்ளைக் குதிரையைத் தேர்ந்தெடுக்கும் நாளில் துரையின் மனைவி பூரணவெள்ளையில் திகழ்வாள். இடுப்பில் இறக்கைமட்டும் முளைத்தால் இந்த மண்ணுக்கான நற்செய்தியை அளித்திடுவாள் போலத் தோன்றுவாள். கடந்து போகிறபோது கமழ்கிற சென்ட் மணமானது மண்ணில் சொர்க்கம் சாத்தியமே என்று கருதத் தோதுண்டு. அவளது கண்கள் புறாக் கண்கள்.



குதிரையில் போகும்போது இருவரும் சம உயரமாகக் காட்சியளிப்பார்கள். ஆனால் துரையின் அருகில் அவரது மனைவி நடந்து வரும்போது அவரது நெஞ்சின் உயரத்துக்குக்கூட வரமாட்டாள். மனிதர்கள் தனியாக இருக்கும்போதுதான் அவர்களது நிஜமான உயரத்தில் இருக்கிறார்கள். வீட்டின் முன்னுள்ள நிலத்தில் துரை ஆட்களை ஏவி விதவிதமான காய்கனிகளைப் பயிரிட்டார். தவிர்த்துப் பூக்களை உற்பத்திசெய்ய முனைந்தார். பூக்களை உண்டாக்குவது பயிரிடுவதாகாது. அவருக்காக அவரது நாட்டில் எத்தனைபேர் உழைக்கிறார்கள் அல்லது வீட்டின் எந்த மூலையில் வைரம் காய்க்கிற மரம் இருந்ததென்பது தெரியவில்லை. சுகமாக இருந்தார்.

விருந்துகளில் பங்கு கொண்டார். வீட்டில் விருந்துகள் அளித்தார். நாங்கள் பார்க்க ஓர் உயர் போலீஸ் அதிகாரி நினைத்த நேரத்தில் நாங்கள் நினைக்காத நேரத்தில் - தொப்பி துரையின் வீட்டுக்கு வந்து போய்க் கொண்டிருந்தார்.

குதிரைகள் போகிற பாதைகளில் அனேகமாக ஜீப்புகள் போகவரச் செய்கின்றன - ஒற்றையடிப் பாதைகள் நீங்கலாக.

ஜீப்போ, குதிரையோ, ஆட்களோ தொப்பிதுரை வீட்டுக்குப் போவதை கிரவுண்டிலிருந்து தெளிவாகப் பார்க்க முடியும். கிரவுண்ட் என அழைக்கப்படும் செவ்வகச் சமதளம் குதிரையோட்டத்துக்காக தொப்பிதுரை மலையைச் செதுக்கி அமைத்ததேயாகும். இரண்டு டென்னிஸ் கோர்ட்டுகளை இணைத்தாற்போன்ற நீள அகலமுடையது அந்தக் கிரௌண்டு.

ஒரு நாள் மலைக்காடெங்கும் ஒரே பேச்சாயிருந்தது. என்றால் மலை மாந்தர்களில் ஒரு நாளில் இருமுறையேனும் செய்தி பேச்சாகக் கசிந்து கொண்டிருந்தது. தொப்பி துரை தன் நாட்டுக்குப் போகப் போகிறார். இதிலென்ன ஆச்சரியம். ஒரு வெட்டுக்கிளியும் கொக்கும் கூட தனது நாட்டுக்குப் போகலாம். ஆனால் தொப்பிதுரை அனுமதி எல்லையைத் தாண்டி இங்கே தங்கியிருக்கிறார் என்பதே செய்தி. முதலாவது பூகோள எல்லை, பிறகு கால எல்லை. இடையில் கடலே இல்லாவிடினும் கூட விசா, பாஸ்போர்ட், பச்சை அட்டை, மஞ்சள் அட்டை, மண்ணாங்கட்டி என எத்தனையெத்தனை விஷயங்கள் இருக்கின்றன. கலெக்டர் உத்தரவு, "நீ இந்த தேசத்தின் குடிமகன் அல்ல. வெளியேறு!" முதலில்

துரையின் மனைவி கிளம்பிப் போனாள். போவதற்கு முன் எனது கன்னத்தை ஒரே நேரம் எச்சிலும் கண்ணீரும் நனைக்கும்படி முத்தமிட்டாள். செண்ட் அணிந்து கொள்ளாது தனது தனது வாசனையுடன் அப்போதிருந்தாள். துரையை விரைந்து வரும்படி கூறிவிட்டுக் கிளம்பிப் போனாள். துரை கிளம்புவதன் கெடு இரண்டு நாள் தள்ளிப் போயிற்று. கெடு கடந்த பிறகுதான் காலத்தின் உண்மையான நீளம் உணரத்தக் கது. துரை ஜெயிலுக்குப் போனார். துரையின் மனைவி வெளிநாட்டில் இருந்தவாறே பன்னிரண்டு மணி நேரத்தில் ஜாமீன் எடுத்தாள். ஆயிரமிருந்தாலும் நம் நாட்டின்மீது நம்நாட்டாரை விட வெளிநாட்டவருக்கே செல்வாக்கு ஜாஸ்தி.



தொப்பிதுரையின் கெடு ஒரு வாரத்துக்கு நீடிக்கப்பட்டது. கப்பலுக்குக் காசு கட்டி விட்டு வீட்டுக்கு வந்தார்.

தபால்பெட்டிக்குப் பின்புறம் மண் வெட்டியோடு ஆரம்பித்தார் குழி தோண்ட. அப்போதைய சர்க்கஸ்காரர்கள் 'மரணக் கிணறு' விளையாட்டுக்குத் தோண்டுவார்களே அதுபோல. முதல் நாள் கொஞ்சம் வெட்டினார். மறுநாள் வேலைக்கு மூன்று ஆட்களைக் கூப்பிட்டார். அவர்களுக்கு வேலை மண்ணை அள்ளி வெளியே போடுவதுதானே தவிர குழிவெட்டுவது அல்ல. குழியின் ஒவ்வொரு அங்குலத்தையும் தொப்பிதுரை தானே தோண்டினார்.

குழி தோண்டி முடித்த மறுநாள் பெங்களூரிலிருந்து ஒருவர் வந்தார் விஷ ஊசிகளுடன். மூன்று குதிரைகளும் தொப்பிதுரையின் அழைப்புக்கு கட்டுப்பட்டு வரிசையாய் விஷ ஊசியை தங்கள் நரம்புகளில் ஏற்று வாங்கின. கொஞ்ச நேரத்தில் கனைக்கத் தொடங்கி மடங்கி விழுந்து மரித்தன. கால்களில் கயிறு கட்டி அவற்றை குழிக்குள் விழுத்தினர். ஒற்றை ஆளாக குதிரைக் குழியை துரை மூடத் தொடங்கினார். சாமான்களை மட்டும் பொதிந்து கொண்டு வெளியேறினார். குழியை மூடத் தொடங்கியது முதல் கட்டளையாகக் கூட யாரிடமும் ஒரு வார்த்தையும் பேசாததால் பிராந்தியத்தில் அவரது கடைசி வார்த்தை என்ன என்பது யாராலும் யூகிக்கவும் நினைவு கூரவும் முடியாததாயிற்று.

அவர் சென்ற பின் தபால் பெட்டி கவனிக்கப்படாத - பராமரிக்கப்படாத செயல்படாத ஒரு பொருளாயிற்று. இருபத்தைந்து ஆண்டுகளின் துரு, பெட்டியின் சிவப்பைத் தின்று கொண்டிருக்கிறது.

எங்கள் கீழ் நாட்டு உறவினர்கள் ஆங்கே சம வெளியில் இருக்கிறார்கள். நாங்கள் இங்கே இருக்கிறோம். தொப்பிதுரையும் மனைவியும் தம் நாட்டில் இருக்கிறார்கள் அல்லது இறந்து போய் விட்டார்கள்.

அந்தத் தபால்பெட்டி ஒரு நடு கல்லைப் போல இருக்கிறது. ●

டாப் டென் கலெக்டர்கள்–4

# ‘குழுவின் வெற்றி!’



“முதல் பத்து இடங்களில், நான் இரண்டாவது இடத்தில் இருந்து கொண்டு ஐந்தாம் இடத்தைப் பிடிக்க வேண்டும் என்று நினைத்தால், நான் முதலில் அடியெடுத்து வைக்க வேண்டியது மூன்றாவது இடத்தை நோக்கி. எந்த இடத்தில் நீங்கள் நிற்கிறீர்கள் என்று உங்கள் ஆசானுக்குத் தெரிவிக்க வேண்டுமானால், நீங்கள் உங்களைக் கேள்வி கேட்டுக் கொள்ள வேண்டும். அல்லது, உங்கள் அறியாமையை வெளிப்படுத்திக் கொள்ள வேண்டும். இல்லை என்றால் நீங்கள் புதிதாக எதையும் கற்க முடியாது; வளரவும் முடியாது” என்கிறார் அமெரிக்க சாக்ரடீஸ் எனப் புகழப்படும் ஸ்டீபன் ஆர்.கோவி.



சேலம் மாவட்டக் கலெக்டர் ஜெ. ராதாகிருஷ்ணனை சந்தித்தபோது, “நாங்கள் சில துறைகளில் முன்னணியில் இருக்கிறோம். அதற்காக முதலமைச்சரால் பாராட்டப்பட்டிருக்கிறோம். சில துறைகளில் இன்னும் சிறப்பாகச் செயலாற்ற வேண்டும் என்றும் உணர்ந்திருக்கிறோம். ஆனால் இவை எல்லாமே டீம் ஒர்க்” என்றார் அடக்கமாக.

“உங்கள் டீமில் யார் யார் இருக்கிறார்கள்?”

“தொண்டு நிறுவனங்கள். மக்கள் பிரதிநிதிகள். பொது மக்கள். என்னோடு பணியாற்றும் அரசாங்க அதிகாரிகள். எந்த வேலையானாலும் மக்களையும் இணைத்துக் கொண்டு ஒரு குழுவாகச் செயல்பட்டால் அதில் பாதி வெற்றி நிச்சயம்.”

## தொட்டில் குழந்தைகள்

மாவட்டத்தில் பெரிய பிரச்னை பெண் சிசுக் கொலை தான். தனி நபர் வருமானத்தில், மாநிலத்திலேயே ஐந்தாவது இடத்தில் இருந்தாலும், சமூக-பொருளாதார பிரச்னைகளிலும், பெண் சிசுக் கொலையிலும் மிகவும் பாதிக்கப்பட்ட மாவட்டம். இதுதான் பெரிய சவால். ஒரே வருடத்தில் நூற்றி நாற்பது குழந்தைகளைத் தொட்டிலில் கொண்டு வந்து போட்டு விட்டார்கள். தொட்டிலுக்கு வந்திராவிட்டால், நிச்சயம் ஈவு



இரக்கமின்றிக் கொல்லப்பட்டிருக்கும். மொத்தம் இருபது பிளாக்குகளில், பன்னிரண்டு பிளாக்குகளில் சிசு மரண விகிதம் அதிகமாயிருந்தது. ஒரு வருடம் கடுமையாகப் பிரசாரம் செய்து உழைத்ததில், பன்னிரண்டிலிருந்து ஒரு பிளாக்காகக் குறைந்ததாம்.

"நிச்சயம் இது ஒரு சாதனைதான். எப்படிச் செயல்பட்டீர்கள்?"

"கிராம அளவிலும், பிளாக் அளவிலும் மேற்பார்வைக் குழு அமைத்தோம். பஞ்சாயத்துத் தலைவர், கிராம சுகாதார நர்ஸ், தொண்டு நிறுவனங்கள், சுய உதவிக் குழுக்கள், மதிய உணவு ஆயாக்கள் எல்லோரும் ஒவ்வொரு கர்ப்பிணிப் பெண்ணையும் சந்தித்தார்கள். பேறுகாலத்துக்கு முன்பு தெரிவிக்கும்படி கேட்டுக் கொண்டார்கள். தனி கவுன்செலிங், குழுக்களாக கவுன்செலிங் என்று, தொண்டு




நிறுவனங்கள் செயல்பட்டன. பெண் குழந்தை பிறந்தால் அவர்களே குடும்பத்தில் வைத்துக் கொண்டு வளர்ப்பது; கொல்லாமல் விட்டு விடுவது; கடைசிபட்சமாகத் தொட்டிலில் கொண்டு வந்து விடுவது. சுமார் முந்நூறுக்கு மேற்பட்ட குழந்தைகள் இப்போது பெற்றோர்களுடனேயே குடும்பத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை விட மகிழ்ச்சியான செய்தி எனக்கு என்ன வேண்டும்! இவர்கள் அத்தனை பேரும் சாவின் பிடியிலிருந்து தப்பியவர்கள். தொட்டில் குழந்தைகளை ஆரோக்யமான, சுத்தமானச் சூழலில் வளர்க்கிறோம். தொட்டில் குழந்தைகள், பிறகு தகுதி வாய்ந்த தம்பதியர்க்கு, தத்து விதிகளின்படி ஒப்படைக்கப்படுகின்றன."

பெண்களுக்குக் கல்வியறிவு மிக முக்கியம் என்பதை உணர்ந்து செயல்படுகிறது மாவட்ட நிர்வாகம். சிசுக் கொலைக்கு உதவுகிற பெண்களையும், தூண்டுகிற மாமனார் - மாமியார்களையும் கண்டு பிடித்துத் தண்டிக்கிறது.

எல்லா ஸ்கேன் மையங்களையும் கட்டாயமாகப் பதிவுசெய்யச் சொல்லி, ஆணை பிறப்பித்திருக்கிறார் ஆட்சியர்.



"இன்னொரு முக்கியமான வசதி உண்டு. என் வீட்டிலிருக்கும் ஃபோன் எண் 402000க்குத் தகவல் தெரிவிக்கலாம். இதற்குக் கட்டணம் கிடையாது. (டோல்ஃப்ரீ) இந்த வருடம் சிசுக் கொலை முற்றிலுமாக ஒழிக்கப்பட்டுவிடும். இது உறுதி."

### சுற்றுச்சூழலுக்குப் பரிசு

"உங்களுக்கும் 'க்ரீன் அவார்டு' கொடுத்திருக்கிறாரே, முதல்வர்?"

"சேலம் மாவட்டத்தில் சுற்றுச்சூழல் மேம்பாட்டுக்காகச் சிறப்பாகப் பணியாற்றியதற்காக இந்த ஆண்டு தமிழக அரசின் விருது கிடைத்தது. ஏற்காட்டில் பிளாஸ்ட்டிக் இல்லாச் சூழலை உருவாக்கினோம். வீரபாண்டி, மகுடஞ்சாவடி, ஆத்தூர் நகராட்சிகளில் மெல்லிய பிளாஸ்ட்டிக் பொருள்களுக்குத் தடை விதித்திருக்கிறோம். பிளாஸ்ட்டிக்குக்கு மாற்றாக, பாக்குமட்டைத் தட்டு, சணல் பை, காகிதப் பை அறிமுகப்

படுத்தினோம். திருமண மண்டபங்களில், மாவட்டம் முழுதும், எவர்சில்வர் தம்ளர் மட்டுமே உபயோகிக்க வேண்டும் என்று கட்டாயமாக்கினோம். பிற இடங்களில் மக்களிடம் விழிப்புணர்வுப் பணிகள் மேற்கொண்டு வருகிறோம்.

'வீட்டுக் கழிவுப் பொருள்களை முதலிலேயே பிரித்து, கம்போஸ்ட்டிங் முறையை ஃபேர்லாண்ட்ஸ் பகுதியில் எக்ஸ்நோரா உதவியுடன் செய்து வருகிறோம். ஓமலூர் டவுன் பஞ்சாயத்து, சுத்தமான நகரமாக வைத்திருக்க முகாம் நடத்தியிருக்கிறோம். அரசு சுவர்கள் எதிலும் எழுதுவதோ, பாழ் செய்வதோ கூடாது என்று ஆணை பிறப்பித்திருக்கிறோம்.

"சேலம் மாநகராட்சியில் உள்ள தனியார் மருத்துவமனைகள் அனைத்தும் சேர்ந்து, மருத்துவ திடக் கழிவுகளை எரிப்பதற்காகப் 'பொது எரிப்பான்' நிறுவி இயக்கி வருகின்றன. சேலம் மாநகராட்சிப் பகுதி ஒலி-மாசு நீக்கப்பட்ட பகுதியாக அறிவிக்கப்பட்டுள்ளது."

விருது நியாயமானதுதான். பாராட்டுக்கள், டாக்டர் ராதாகிருஷ்ணன்!

### நிர்வாகம் — மக்களுக்காக

குறை தீர்க்கும் நாளன்று வரும் புகார்களை, எத்தனை விரைவில் தீர்க்க முடியுமோ அத்தனை விரைவாகத் தீர்த்து வைக்கிறார்களாம். முதலமைச்சரின் அலுவலகத்திலிருந்து அனுப்பப்படும் குறைகள் பத்தே தினங்களில் கவனிக்கப்பட்டு, ஒன்று கூட மிச்சம் மீதி இல்லாமல் நூறு சதவிகிதம் தீர்த்து வைக்கப்படுகின்றன.

"குறை தீர்க்கும் நாளன்று மட்டும்தான் என்னிடம் புகார் மனு தரவேண்டும் என்பதில்லை. எல்லா வேலை நாட்களிலும் க்ரீவன்ஸ் கவுன்ட்டர் திறந்திருக்கும். ஓர் அதிகாரி அங்கே நிச்சயம் இருப்பார். உடல் ஊனமுற்றோர் என்றால், நாங்களே அவர்களை அணுகி உதவி புரிகிறோம். அவர்களை அலைக்கழிப்பதில்லை."

### எதெதில் சாதனை?

ஜனவரி 2002 முதல், 20-அம்சத் திட்டச் சாதனையில் நெ.1 மாவட்டம்.

ஒவ்வொரு இரண்டாவது வெள்ளிக்கிழமையும், தனியார் துறையில் வேலை வாய்ப்புக்கான வசதி. 895 பேர் இதுவரை இப்படி வேலைக்கு அமர்த்தப்பட்டிருக்கிறார்கள்.

வேலை வாய்ப்பு தினம் என்று தனியாக ஒதுக்கி, எங்கெங்கே எந்த மாதிரி வேலை வாய்ப்புகள் இருக்கின்றன என்று அறிவிப்பு.

தொப்பூர்-சேலம் சாலையில் பாதுகாப்பான நாலு லேன் போக்குவரத்து - 120 கோடி ரூபாய் முதலீடு.

ஆரம்பப் பள்ளிகளை நடுநிலைப் பள்ளிகளாகவும், நடுநிலைப் பள்ளிகளை உயர்நிலைப் பள்ளிகளாகவும், உயர்நிலைப் பள்ளிகளை மேல்நிலைப் பள்ளிகளாகவும் உயர்வு செய்தல். நரிக்குறவர்களுக்கு என்றே தனியாக ஒரு பள்ளிக்கூடம்!

அரசு தரிசுநில மேம்பாட்டுத் திட்டத்தில் 7000 ஹெக்டேரில் ஆறு லட்சம் மரங்கள் நட ஏற்பாடு. கார்ப்பரேட் துறையிலிருந்து 108 விண்ணப்பங்கள் வந்து, பரிசீலனையில் இருக்கின்றன.

புதிய அண்ணா மறுமலர்ச்சித் திட்டத்தில், தொழில்கள் தொடங்க ஒவ்வொரு பிளாக்குக்கும் ஒரு கோடி ரூபாய். இதற்கான 506 விண்ணப்பங்கள் பரிசீலனையில் இருக்கின்றன.



கலெக்டரின் செயல்பாட்டை டாக்டர் சித்ரா சம்பத் மனம் திறந்து பாராட்டினார், குறிப்பாக பெண் சிசுக் கொலைத் தடுப்பில். 'பூந்தளிர்' தொண்டு நிறுவனத்தின் தலைவர் செழியன், கலெக்டரின் ஆர்வத்தையும் உதவிகளையும் நெகிழ்ச்சியுடன் குறிப்பிட்டார்.

அதிகாரிகளின் கூட்டத்தில் பேசுகிற போது, உற்சாகமூட்டும் வகையில் பேசுகிறார் டாக்டர் ராதாகிருஷ்ணன். 'நேரில் சென்று பேசுங்கள். பிறகு என் கவனத்துக்குக் கொண்டு வாருங்கள்' என்கிறார். தொலைபேசியிலும் கூட ஓர் அதிகாரியிடம், 'ஏணியைக் கொடுத்து மேலேற்றி விடுவது நம் வேலை. அதற்காக ஏணியையே பிடித்துக் கொண்டு நிற்க வேண்டும் என்றில்லை. அடுத்த பிரச்னையைப் பாருங்கள்' என்ற யதார்த்தமான அறிவுரை!

பேட்டி, கட்டுரை : **சாருகேசி**



● ரவுண்ட்ஸ்பாய்

# ஜூனியர் மாதுரி தீட்சித்!

'நீ கிடைத்தால் போதும்' படத்தின் மூலம் மாதுரிதீட்சித் கதாநாயகியாக நடிக்கிறார் என்று விளம்பரம் செய்தால்கூட ரசிகர்கள் நம்பிவிடக்கூடும்! காரணம் படத்தின் நாயகி ஆனந்தி. அச்சில் வார்த்த மாதிரி மாதுரி தீட்சித்தை நினைவு படுத்துகிறார். 'ஹம் ஆப் கே ஹைன் கோன்' படத்தின் குஜராத்தி பதிப்பில் மாதுரி தீட்சித்தின் பாத்திரத்தை ஏற்று நடித்த ஆனந்தியை, குஜராத்தி சினிமாவிலும், பாலிவுட்டிலும் ஜூனியர் மாதுரி தீட்சித் என்றே அழைக்கிறார்களாம்! அப்புறம் படத்தில் ஆனந்தியைக் காதலிக்கும் ஹீரோ சச்சின்தேவ், ஏதோ பாபிதியோல் வீட்டுக்குப் பக்கத்து வீட்டுக்காரர் மாதிரி தெரிகிறதே என்று விசாரித்தால், மனிதர் வாணியம்பாடி தமிழ்ப் பையனாம். இந்தப் படத்தின் மூலம் இன்னும் இரண்டு பேர் அறிமுகம் ஆகிறார்கள். ஒருவர் படத்தின் இயக்குனர் டி. ஷிவராம். மற்றொருவர் படத்தின் தயாரிப்பாளர் சுபா சந்தீப். ஃபேஷன் டிசைன் தொழிலை பேக் அப் செய்துவிட்டு சினிமா தயாரிப்பாளர் ஆகியிருக்கிறார் இந்த திருமதி.



● 'நீ கிடைத்தால் போதும்' - தேவ், ஆனந்தி.



"ஜெயா என்று படத்திற்குத் தலைப்பு வைத்திருக்கிறீர்களே, அரசியல் நெருக்கடி எதுவும் இல்லையா?" என்றால், "ஆதரவுதான் அதிகம்" என்கிறார் படத்தின் இயக்குனர் செந்தில்நாதன். இத்தனைக்கும் ஒரு அப்பாவிப் பெண்ணின் உண்

● 'விசில்' - விக்கிரமாதித்யன் - காயத்ரி ரகுராம்

மைக் கதையைத்தான் பொழுதுபோக்கு அம்சங்களோடு எடுத்திருக்கிறோம் என்கிறார். தலைப்பிற்கு நெருக்கடி வராததற்கு என்ன காரணமாக இருக்கும் என்று துப்பறிந்ததில் கிடைத்த தகவல், படக் குழு, முதல்வரின் அன்னதான திட்டத்திற்கு ஒன்றரை லட்சம் ரூபாய் நன்கொடையை வாரி வழங்கியதாம்!

பத்து வருடத்திற்கு முன்புவரை தெலுங்கு சூப்பர் ஸ்டார் சிரஞ்சீவியின் எல்லாப் படங்களையும் மறக்காமல் தமிழிலும் டப் செய்வார்கள். 'ஏ' சென்டர்களில் ஓடுகிறதோ இல்லையோ; சிரஞ்சிவியின் மின்னல் வேக சண்டைக் காட்சிகளுக்காக 'பி' 'சி'க்களில் பிரமாதமாய் வசூல் பண்ணும். இப்போது ஏகப்பட்ட இளம் ஹீரோக்கள் வந்து தமிழ் சினிமா மாறிவிட்ட நிலையில், சிரஞ்சீவியின் லேட்டஸ்ட் படமொன்றைத் துணிச்சலாய் தமிழில் 'இந்திரனா'க டப் செய்து கொண்டிருக்கிறார்கள். உத்திரப் பிரதேச மாநிலம் காசியில் ஒரு சாதாரண டாக்ஸி டிரைவராக இருக்கும் சிரஞ்சீவியை அந்த மாநிலத்தின் கவர்னர் மகள் சோனாலி பிந்த்ரே காதலிப்பதுதான் கதையாம்...! அடடா! என்னவொரு தெலுங்கு வாசனை!



* 'இந்திரன்' - சோனாலி, சிரஞ்சிவி, ஆர்த்தி அகர்வால்



* 'ஜெயா' - ரம்யா - ஷெரின்

ஜெமினி படத்தில் விலங்குகளைப் போல இமிடேட் செய்து கலக்கிய, கலாபவன்மணி, 'வாசு' படத்தின் மூலம் மறுபடியும் கலக்க வருகிறார். ஒரு கிராமம். வெறி நாய் கடித்து கிராமவாசிகள் சிலர் இறந்து போக, அந்த வெறிநாயைப் பிடிக்க வேலைக்கு அமர்த்தப்படுகிறார் கலாபவன் மணி. நாயைப் பிடிக்கும் முயற்சியில் அதனிடம் கடிபட்டு, அவருக்கு 'ஹைட்ரோ போபியா' வெறி பிடித்து விடுகிறது. இறுதியில் எந்த ஊர் மக்களை அவர் காப்பாற்ற நினைத்தாரோ, அதே ஊர் மக்கள் அவர் சாக வேண்டும் என்று முடிவு செய்கிறார்கள். ஆனால் கலாபவனின் தாய் வேறொரு முடிவு எடுப்பதாக கதை முடிகிறதாம்!

உல்லாசம் படத்திற்குப் பிறகு அமைதியாக இருந்துவிட்ட இரட்டை இயக்குனர்கள் ஜேடி, ஜெர்ரி இப்போது 'விசில்' படத்தை இயக்கிக் கொண்டிருக்கிறார்கள். கல்லூரி வளாகத்திற்கு உள்ளேயே முழுக் கதையும் நிகழ்கிறதாம். நாட்டு புறவியலில் இளங்கலை படிக்கும் ஒரு மாணவர் குழாமுக்கு இடையேயான நட்பும், காதலும் வழிந்தோடும் கல்லூரிக் காலம்தான் கதை என்கிறார்கள். ம்! காட்சிகளாவது புதுசா இருந்தா சர்தான்ங்க!



''அமைச்சர் வீட்டுக்கு வந்துட்டு போறவங்க அவரோட எதிர்க்கோஷ்டிய சேர்ந்தவங்கன்னு எத வச்சி சொல்றே?''

''அமைச்சரை கோவில் தீ மிதி விழாவுக்கு வருமாறு அழைச்சிட்டு போறாங்களே அத வச்சித்தான்!''




# அடம்பிடிச்சா எப்படி?

பாரி






''கெட்டப்-பையே மாத்திக்கிட்டு - செக்யூரிட்டி துணையில்லாம அமைச்சர் எங்கே போறார்?''

''வேற எங்க? கோவிலுக்குச் சாமி கும்பிடத்தான்!''



''கோவில்களுக்கு வரமாட்டேன்னு அமைச்சர் அறிக்கை விட்டது சரி! அதுக்காக இப்படியா?''

''என்னாச்சு?''

''கோவில்பட்டி, சங்கரன்கோவில்னு 'கோவில்' பேர் வர்ற ஊர்களுக்குக்கூட வர மாட்டேன்னு அடம் பிடிச்சா எப்படி?

# "பேனாவில் திரைப்படம் எடுக்கிறவர்!"

எண்பது வயதாகும் கரிசல் எழுத்தாளர் கி. ராஜநாராயணனுக்கு முத்துவிழா எடுக்காமல் பவளவிழா கொண்டாடினார்கள். சென்னை ஃபிலிம் சேம்பரில் காவ்யாவும், செம்புலமும் இணைந்து நடத்திய அவ்விழா, இலக்கியமும் சினிமாவும் சங்கமித்தத் திருவிழா. கி.ரா. எண்பது, கோபல்ல கிராமம், அழகி திரைப்படக்கதை என மூன்று நூல்களின் வெளியீடும் சேர்ந்துகொள்ள அது ஒரு வண்ணமயமான விழாவாக நிகழ்ந்தது.



கவிஞர் அறிவுமதி, நடிகர் விவேக், நாசர், எடிட்டர் லெனின், கவிக்கோ அப்துல் ரகுமான், அ. பஞ்சாங்கம், பூமணி, பா. ஜெயப்பிரகாசம், நாஞ்சில் நாடன், புஷ்பவனம் குப்புசாமி, ஜெயந்தன் என இலக்கியமும் சினிமாவும். கலந்த கலை விழாவாக மாறிப் போயிருந்தது. கி.ரா.வை வாழ்த்திப் பேச வந்த பா. இராமமூர்த்தியின் பேச்சில் அதிகக் காரம். உலகில் இந்தியாவைப் பற்றிப் பேசப்பட்ட 'பாண்டிட் குயின்', காட் ஆஃப் ஸ்மால் திங்ஸ், பொருளாதாரத்திற்கான நோபல் பரிசு, ஐநாவில் பேசப்பட்ட தீண்டாமை, என்ற இந்த நான்கு முக்கிய நிகழ்வுகளிலும் சாதி இருப்பதாகச் சொன்னார்.

பிறகு கொஞ்சம் இலக்கியத்தின் பக்கம் திரும்பி சாட்டையைச் சுழற்றினார். "பொதுவாக இலக்கியத்தில் சக மனிதர்களுக்காகப் பேசுகிறவர்கள் குறைவு. ஆனால் கி.ரா.வின் படைப்புகளில் சராசரி மனிதர்களைப் பார்க்கலாம்" என்று பாராட்டினார்.

சுவாரசியமாக மிக நீண்ட இலக்கியப் பேருரை நிகழ்த்தினார் கவிக்கோ அப்துல் ரகுமான். "கி.ரா. பேனாவில் திரைப்படம் எடுக்கிறவர், தங்கர் பச்சான் கேமராவில் இலக்கியம் படைக்கிறவர்" என்று தன் கவித் தமிழால் பாராட்டுகளை அள்ளி வழங்கினார். "எல்லாருக்கும் முன்னத்தி ஏராக இருக்கிறவர் கி.ரா" என்று மிக மிகக் குறைவான வார்த்தைகளில் பேசி ஆச்சரியப்படுத்தினார். கவிஞர் அறிவுமதியின் பேச்சில் மண் வாசம்.

ஏற்புரை நிகழ்த்த வந்த தங்கர் பச்சான் உணர்ச்சிவசப்பட்டார். "நாட்டின் ஒட்டுமொத்த சீர்கேட்டிற்குப் பத்திரிகைகள்தான் காரணம்" என்று ஒரு பிடி பிடித்தவர், "என்னுடைய உழைப்பெல்லாம் என் மொழி, என் மக்கள், என் இனம் குறித்துத்தான். அப்பா கி.ரா.வுக்கு யார் விழா எடுக்கணும்? அரசாங்கம் என்ன பண்ணுது? கலைஞனை மதிக்காத நாடு உருப்படாது" என்று அருவியாய்க் கொட்டினார்.

கடைசியாகப் பேச வந்தார் கி.ரா. அருகில் துணைவியார் கணவதியும் உட்கார்ந்து கவனித்துக் கொண்டிருந்தார். இளமையின் ரகசியத்தைப் பற்றி அப்துல்ரகுமான் கேட்டுப் போக பதில் சொன்னார் கி.ரா.

"பெண்களை மதிக்கக் கத்துக்கணும். இதுல ரகசியம் ஒண்ணுமில்லை. அவங்கவங்க அனுபவத்துல தெரிஞ்சுக்கலாம். இதெல்லாம் சொல்லிக் கொடுக்க முடியாது. இளமையின் ரகசியம் வேறொன்றுமில்லை மனோ விஷயம்தான்."

— சுந்தரபுத்தன்

## சுவடுகள்—38

# தலையங்கங்கள்!

## திருப்பூர் கிருஷ்ணன்

தலையங்கம் ஒன்றுதான் ஒரு பத்திரிகையின் உண்மையான முகத்தை இனங்காட்டும் பகுதி. மற்றப் பகுதிகளில் தன்னை ஒரு பத்திரிகை மூடி மறைத்துக் கொள்ளலாம். எந்த அபிப்ராயமும் தெளிவாய்த் தெரியாத மாதிரிக் குழப்பிச் சமாளித்துக் கொள்ளலாம். ஆனால் தலையங்கத்தில், தான் யார் என்பதை அந்தப் பத்திரிகை புலப்படுத்திவிடும். புலப்படுத்தியாக வேண்டும். வேறு வழியில்லை.

நான் தீபத்தில் பணிபுரிந்த காலத்தில் பல இலக்கியத் தலையங்கங்களை எழுதியிருக்கிறேன். புதுக்கவிதை ஓர் இலக்கிய வகையா இல்லையா என்பது பற்றி, ஹைக்கூ பற்றி, பட்டிமன்றங்கள் வெட்டி மன்றங்களாய்த் தேய்ந்துவரும் அவலம் பற்றி, நகைச்சுவை என்ற பெயரில் பேச்சாளர்கள் அர்த்தமிழந்த பேச்சுகளைப் பேசுவது பற்றி என தீபம் தலையங்கம் விவாதித்த விஷயங்கள் பலதரப்பட்டவை. தீபத்தின் தலையங்கங்கள் தொகுக்கப்பட்டுப் புத்தகமாகுமானால் அது இலக்கிய உலகின் ஒரு கால கட்டத்தைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாக விளங்கும்.



• நாரண துரைக்கண்ணன்

நான் பணிபுரிந்த நாளிதழான தினமணியின் தலையங்கங்கள் புகழ் பெற்றவை. அதன் ஆசிரியர்களான ஏ.என். சிவராமன், ஐராவதம் மகாதேவன், கி. கஸ்தூரிரங்கன் போன்றோர் தலையங்க விற்பன்னர்கள். மணிமணியான தலையங்கங்கள் மூலம் நாட்டை வழி நடத்தும் கருத்துகளைப் பேசக் கூடியவர்கள். தினமணியில் சில துணையாசிரியர்களும்கூடத் தலையங்கம் எழுதும் ஆற்றலில் தேர்ச்சி பெற்றிருந்ததுண்டு.

பொதுவாகத் தலையங்கம் நடுப் பக்கத்தை ஒட்டித் தான் இடம் பெறும். ஆனால் ஒருமுறை, இட ஒதுக்கீடு குறித்து ஐராவதம் மகாதேவன் எழுதிய ஒரு தலையங்கத்திற்கு, அதன் சிறப்பின் காரணமாக முதல் பக்கத்திலேயே இட ஒதுக்கீடு செய்யப்பட்டது! "இட ஒதுக்கீடு கட்டாயம் தொடர வேண்டும், இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை ஆய்வு செய்து தொடர்ந்து பல்லாண்டுகளாகக் கொடுக்கப்பட்ட சலுகை காரணமாக முன்னேறிவிட்ட ஜாதியைப் பொதுப் பட்டியலுக்குக் கொண்டு வர வேண்டும், அப்படிக் கொண்டு வர இயலவில்லையென்றால் இட ஒதுக்கீட்டு நிர்வாகத்தில் என்ன கோளாறு என ஆராய வேண்டும், முற்பட்ட ஜாதியினர்க்கும் பொருளாதார ரீதியாக ஓர் ஒதுக்கீட்டை ஏற்படுத்த வேண்டும்" என்பது போன்ற விஷயங்களை அவர் எழுதியிருந்தார். நாடெங்கும் பெரிதும் பேசப்பட்ட முக்கியமான தலையங்கங்களில் ஒன்று அது. நாட்டில் வாழும் அனைத்து சமூகத்தினர் நலனிலும் ஒட்டு மொத்த அக்கறையில்லாமல், வாக்கு வங்கியை மட்டுமே நம்பி ஜாதி அரசியல் நடத்தும் நாலாந்தர அரசியல்வாதிகளின் தலையில் ஓங்கிக் குட்டிய தலையங்கம் அது.

ஆனால் சிரமப்பட்டு ஆதாரச் செய்திகளைச் சேகரித்து ஆய்வு நோக்கில் தலையங்கம் எழுதும் பத்திரிகையாளருக்கு அது ஒரு பணி என்பதைத் தவிர வேறு பலன் இல்லை. ஏனெனில் எழுதியவர் பெயர் தலையங்கத்தில் இடம் பெறுவதில்லை. பத்திரிகையின் கருத்தாக மட்டுமே அது கருதப்படும். அந்த வகையில்



• சங்கு கணேசன்

தலையங்கம் எழுதுவது ஒரு தியாகம் தான். படைப்பிலக்கியம் படைப்பவர்கள் ஓவியர்கள் மாதிரி. வரைந்த ஓவியர் தம் பெயரைப் போட்டுக் கொள்வது போல் நாவல், சிறுகதை போன்றவற்றை எழுதும் படைப்பிலக்கியவாதிகளுக்குப் பெயர் பெறும் பாக்கியம் கிட்டுகிறது. தலையங்க எழுத்தாளர்கள் சிற்பிகள் மாதிரி. அவர்கள் தங்கள் பெயரை எங்கும் பொறிப்பதில்லை.

நானும் நாளிதழில் நிறையத் தலையங்கங்கள் எழுதியிருக்கிறேன். நான் அரசியல்ரீதியாக எழுதிய தலையங்கங்கள் குறைவு. இலக்கியரீதியாக எழுதிய தலையங்கங்களே மிகுதி. தி. ஜானகிராமன், க.நா. சுப்பிரமணியம் ஆகியோர் காலமான சந்தர்ப்பங்களில், தினமணியில் அவர்களைப் பற்றி நான் எழுதிய தலையங்கங்கள் வெளியாயின. (இலக்கியச் சிந்தனை அமைப்பு தன் பதினாலாம் ஆண்டு விழாவில் ஜானகிராமனின் நளபாகம் நாவலுக்குப் பரிசளித்தது. இலக்கியச் சிந்தனை தொடங்கிப் பதினான்கு வருஷம் கழித்துக் கிட்டும் கௌரவத்தின் பொருத்தத்தை மெச்சி, பதினாலு ஆண்டு வனவாசத்திற்குப் பிறகு ஜானகிராமனுக்குப் பட்டாபிஷேகம் நடக்கிறது என்பதாக நான் ஒரு கட்டுரை எழுதினேன். அப்போது தி.ஜா. உயிரோடு இல்லை. பரிசைப் பெற வந்தார் திருமதி தி.ஜா. 'இந்தக் கட்டுரை இருக்கட்டும். தினமணியில் என் கணவர் பற்றிய தலையங்கத்தை எழுதியதும் நீங்கள்தானே?' என விசாரித்தார் என்னிடம். என் பெயரே இல்லாமல் இருந்தும் அவர் கண்டுபிடித்துவிட்டது பற்றி எனக்கு ஆச்சரியம்.

'தி.ஜா. பற்றி எழுதுவது என் கடமையல்லவா?' என்றேன். 'அது உங்கள் கடமையல்ல. அவரது தீவிர வாசகரான உங்கள் உரிமை!' என்றார் திருமதி தி.ஜா. (அவர் கம்பன் வீட்டுக் கட்டுத் தறிகூட அல்ல. கம்பருடன் வாழ்ந்த இன்னொரு கம்பர். ஜானகிராமன் இலக்கியத்தில் தோய்ந்த ஆய்வாளர்களில் மிக முக்கியமான ஓர் ஆய்வாளர் சில ஆண்டுகள் முன் காலமான திருமதி தி.ஜா.தான்.)

சங்கு கணேசன் காலமானபோது, மாலன் தினமணி ஆசிரியப் பொறுப்பில் இருந்தார். சங்கு கணேசன் பற்றிய தலையங்கம் எழுதும் வாய்ப்பு எனக்கு அளிக்கப்பட்டது. அவரைப் பற்றி சி.சு. செல்லப்பா சொன்ன பல தகவல்கள் என் வசம் இருந்தன. அவற்றைத் தொகுத்துத் தலையங்கமாக எழுதியபோது, அப்பழுக்கற்ற பத்திரிகையாளர் ஒருவருக்கு ஆத்மார்த்த அஞ்சலி செய்த நிறைவு ஏற்பட்டது எனக்கு.

இதெல்லாம் நான் எழுதிய தலையங்கங்களில் சிலவற்றைப் பற்றிய தகவல்கள். நானே விரும்பினேன் என்றாலும் சூழலால் எழுத முடியாமல் போன தலையங்கமும் ஒன்று உண்டு. நாரண துரைக்கண்ணன் காலமானபோது தலையங்கம் எழுதப் பெரிதும் விரும்பினேன். இலக்கிய மாமேதை, முன்னோடி எழுத்தாளர். ஆனால் அந்த மரணத்தை அடுத்து வெகு சீக்கிரமே மணியனும் காலமாகிவிட்டார். மணியன் புகழ் பெற்ற பத்திரிகையாளர். அவர் மேல் எனக்கு மரியாதை உண்டு. எனினும் புகழ் வேறு. தலையங்கம் எழுதப்படுவதற்கான தகுதி வேறு. 'நாரண துரைக்கண்ணனைப் பற்றித் தலையங்கம் எழுதலாம். மணியனைப் பற்றிக் கட்டுரை வெளியிடலாம்' என்பதே என் நிலைப்பாடு. இருவருக்குமாகச் சேர்த்துத் தலையங்கம் எழுதுவதே சரி என்றும் மணியனை நீக்கி விட்டு, மணியன் இறந்திருக்கும் சூழலில் தலையங்கம் எழுதுவது அநாகரிகமாகக் கருதப்படும் என்றும் சொல்லப்பட்டது. அப்போதைய சூழலில் அத்தகைய அநாகரிகம் வேண்டாம் என நானும் கருதியதால் நாரண துரைக்கண்ணனைப் பற்றியும் தலையங்கம் எழுதாமல் விட்டுவிட்டேன்.

(தொடரும்)

## சினிமா போல் கொலை!

பிரான்சு நாட்டில் பதினேழு வயதான சிறுவன் தன் கூட படிக்கும் இன்னொரு சிறுவனை ஹாலிவுட் திரைப்படமான 'ஸ்கீரீம்' படத்தில் வரும் காட்சியைப் போன்றே கொலை செய்தது, ஐரோப்பாவில்



பரபரப்பை உண்டாக்கியுள்ளது. இதுபோன்ற திகில் திரைப்படங்களைத் தயாரிப்பதை நிறுத்த வேண்டுமென ஐரோப்பிய கவுன்சில் தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

- பாரீஸ். பார்த்தசாரதி

# ரன்



அப்பா அம்மா, அண்ணன் தம்பி சென்டிமென்டை வைத்து அசத்தலாய் ஒரு பேமிலி டிராமா கொடுத்த 'ஆனந்தம்' லிங்குசாமி, தனது பழைய பார்முலாவைச் சுத்தமாய் மறந்துவிட்டு தலைகீழாய்த் திருப்பிப் போட்ட மாதிரி ஒரு படம் தந்திருக்கிறார்.

கண்டதும் காதல், காதலியின் அண்ணனோடு மோதல் என்பதெல்லாம் பழைய கதைதான். ஆனால் நூற்று ஐம்பது நிமிடங்கள் ரசிகனை ஆடாமல் அசையாமல் உட்கார வைக்க வேண்டுமே. அதைத் திரைக்கதை மூலம் நிரம்படச் செய்திருக்கிறார் இயக்குனர்.

தேவையில்லாத விவரிப்புகள், நீட்டிப்புகள் என்று எதுவுமில்லாமல் காட்சிகள் அளந்து வைத்த மாதிரி நகர்கின்றன, வி.டி. விஜயனின் படத் தொகுப்பில்.

'மின்னலே' படத்தில் கொஞ்சமாய் முரட்டுத்தனம் காட்டிய மாதவன், ரன்னில் நெருப்புத் தெறிக்கிற மாதிரி முஷ்டியை மடக்கி முறைக்கிறபோது நமக்கே உதறுகிறது. அதே நேரம் முதல் பாதியில் ரொமான்ஸ் வழியும் காதலனாகவும் கலக்கியிருக்கிறார்.

பனித்துளி போர்த்திய காலை மலர் போல வரும் மீரா ஜாஸ்மின் நடனம், நடிப்பு, இரண்டிலுமே தேறிவிடுகிறார். ஒரே வீட்டில் வசித்தாலும் ரவுடி அண்ணனோடு ஒரு வார்த்தை கூடப் பேசாமல் ஒதுங்கிப் போகும் இவரின் பாத்திரப் படைப்பு கச்சிதம் என்றாலும், தன்னைப் பின் தொடரும் இளைஞர்களிடம் தனது அபாயகர அண்ணனைப் பற்றி வாய் திறக்காதது நெருடல்.

அசத்தல் நடிகரான அதுல்குல்கர்னி தனது அபாரக் கண்களைக் கொண்டே கலக்கிவிடுகிறார்.

மற்றொரு கலக்கல் பேர்வழி ஒளிப்பதிவாளர் ஜீவா. கோணங்களும், கேமரா அசைவுகளும், ஒளி அளவுகளும் அவரைத் தனித்துக் காட்டுகின்றன.

இசை மேளா நடத்தியிருக்கிறார் வித்தியாசாகர். மாதவனைத் தேடி வரும் விவேக், சென்னையில் படும் சிரமங்கள் தனி டிராக், என்றாலும் ரசிகர்களுக்கு நல்ல சிரிப்பு எக்ஸர்சைஸ்.

எந்தப் பின்னணியும் இன்றி ஸ்ரீரங்கத்திலிருந்து சென்னைக்குப் படிக்க வரும் மிடில் கிளாஸ் மாதவனுக்கு எப்படி இத்தனை வீரம் வந்தது என்று பெருத்த சந்தேகம் எழுந்தாலும், அதைப் பற்றியெல்லாம் யோசித்துக் கொண்டிருக்க வாய்ப்புத் தராமல் காட்சிகள் நகர்வதால், காதலும் வீரமும் கைகோத்துக் கொண்ட இளமை எக்ஸ்பிரஸ் ஆகிவிடுகிறது 'ரன்'.

— விஷுவல்தாசன்

● அபவ் ஆவரெஜ்

■ பிரியன் ■

# எட்டிப் பார்க்கும் குட்டி கிராமங்கள்!


• சுகன்யா

மதுரை மாவட்டம், மேலூர் தாலுக்காவில் உள்ள டி. உலகுபிச்சன்பட்டி. டெலிபோன்கூட எட்டிப் பார்க்காதக் கிராமம். விவசாயி சத்தியநாதனின் வெள்ளாட்டுக் குட்டிக்கு வாயில் புண். இலை, தழைகளைக் கொடுக்கப் போனால் துள்ளி ஓடி விடுகிறது. ஆட்டுக் குட்டியின் பிரச்னை தெரிந்தும் அதற்குத் தீர்வு காண முடியாத நிலையில் இருந்தார் சத்தியநாதன். மேலூருக்கு சென்று கால்நடை ஆய்வாளரைப் பார்க்க வேண்டும், போகும்போது அவர் இல்லாவிட்டால் மறுபடி போக வேண்டியிருக்கும். பஸ் கட்டணம், நேரம் எல்லாம் விரயம் ஆகும்.

இப்படி யோசித்தவாறு இருந்தபோது தான் சுகன்யா உதவிக்கு வந்தார்.

சத்தியநாதனையும், அவரது வெள்ளாட்டுக் குட்டியையும் தாம் நடத்தும் சிராஜ் இண்டர்நெட் இல்லத்துக்கு அழைத்துச் சென்றார். கால்நடை மருத்துவக் கல்லூரிக்கு இன்டர்நெட் மூலம் தொடர்புகொண்டு ஆட்டுக்குட்டிக்கு உள்ள பிரச்னைச் சொன்னார் சத்தியநாதன். அது மட்டுமல்லாமல் கம்ப்யூட்டருடன் இணைக்கப்பட்ட காமிராவில், ஆட்டுக் குட்டியின் வாயை பல

கோணங்களில் படமெடுத்து, மின் அஞ்சலில் அனுப்பினார்.


• ரோஸி

அடுத்த நாள் வலையை ஊடுருவிப் பார்த்தபோது, ஆட்டுக் குட்டியின் வாய்ப்புண்ணுக்கு, கால் நடை மருத்துவக் கல்லூரியிலிருந்து சிகிச்சை பற்றிய குறிப்பு வந்திருந்தது. அடுத்த நான்கு நாட்களில் ஆட்டுக்குட்டியின் வாய்ப்புண் முற்றிலும் சரியாகிவிட்டது. "அடி ஆத்தா" என்று கிராமத்துத் தாய்மார்கள் வியக்க "இது என்னப்பா அசத்துதே!" என்று படிக்காத இளைஞர் கூட்டம் மூக்கில் விரல் வைக்க, ப்ளஸ் டூ வரை படித்த சுகன்யா, இண்டர்நெட் தொடர்பைப் பற்றிச் சொன்னவுடன் ஊரே பிரமிப்பில் ஆழ்ந்தது.


• நாகராஜன்

ஆட்டுக்குட்டிக்கு மருத்துவம் மட்டுமல்ல. அரசாங்க அலுவலகங்களான தாசில்தார் அலுவலகம், சார் பதிவாளர் அலுவலகம் ஆகியவற்றின் சேவைகளையும் இண்டர்நெட் மூலம் பெறுகிறார்கள் மேலூரைச் சுற்றியுள்ள முப்பத்தெட்டு கிராம மக்கள். வெண்டைக் காய், கத்திரிக்காய் பயிரில் நோயா? சுகன்யா ஒத்தக்கடையில் இருக்கும் விவசாயப் பல்கலைக் கழகத்தோடு தொடர்பு கொண்டு நிவாரணம் தேடித் தருகிறார். கிராமத்திலிருந்து ஆப்ரிக்காவில் போய் வேலை பார்க்கும் முத்துப்பாண்டி, பதினெட்டாங்குடியில் இருக்கும் அப்பா முனுசாமியோடு இப்போதெல்லாம் அடிக்கடி மின்னஞ்சலில் தொடர்பு கொள்கிறார். இது மட்டுமா? திருவாதவூர் சுப்பையாவுக்குக் கண்ணில் ஏதோ கோளாறு. காமிராவில் படமெடுத்து, மதுரை அரவிந்த் கண் மருத்துவமனைக்கு அனுப்ப, அங்குள்ள டாக்டர் இளங்கோவிடமிருந்து "காடராக்ட் என்று தெரிகிறது. உடனே வரச் சொல்லவும்" என்று அப்பாயிண்ட்மெண்ட் கொடுக்கப்படுகிறது. பொதுவான சேவைகளை இலவசமாகச் செய்யும் அதே நேரத்தில் பிறப்புச் சான்றிதழ், இறப்புச் சான்றிதழ், முதியோர் ஓய்வூதியம் ஆகிய சேவைகளுக்கு எட்டு ரூபாய், பத்து ரூபாய் என்று குறைந்த கட்டணமே வாங்கிக் கொள்ளுகிறார் சுகன்யா! வயல் வேலைகளை முடித்துவிட்டு மாலை வீடு திரும்பும் விவசாயிகள் தங்கள் தேவைகளை நிறைவு செய்து கொள்ள சிராஜ் இண்டர்நெட்டுக்கு வந்து விடுகிறார்கள். "இப்படிப்பட்ட சேவைகள் மட்டுமல்ல, பொழுது போக்கு அம்சங்கள், அரட்டை ஆகியவைகளும் உண்டு. நிறையப் பேர் ராசி பலன் பார்ப்பதற்கு ஆவலாக உள்ளார்கள். மாத பலனை ப்ரிண்ட் எடுத்துக் கொடுத்து விடுகிறோம்." என்கிறார் பதினெட்டாங்குடியில் 'இல்லம்' பார்த்துக் கொள்ளும் ரோஸி. இப்படிக் குட்டிக் கிராமங்கள் உலகத்தை எட்டிப் பார்ப்பது எப்படி சாத்தியமாயிற்று?

அறிவியல் முன்னேற்றம் பெரும்பாலும் நகர மக்களுக்குத்தான் பயனளிக்கிறது. கிராம மக்கள் இன்னமும் போன நூற்றாண்டு காலத்தில் தான் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இப்படிப்பட்ட குற்றச்சாட்டுக்கள் ஐ.ஐ.டி. பேராசிரியர் அசோக் ஜுன்ஜுன்வாலாவை ரொம்பவே சலிப்படைய வைத்தன. ஏற்கெனவே தகவல் தொழில் நுட்பத் துறையில் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்களை கிராம அளவில் கொண்டு போகும் முயற்சியில் இறங்கியிருந்தார் அவர். குறிப்பாகத் தகவல் களஞ்சியமான இண்டர்நெட்டை கிராமங்களுக்குக்கொண்டு சென்றுவிட்டால் அந்த மக்களின் பல பிரச்னைகளுக்கு இருந்த இடத்திலேயே விடை கிடைக்கும் என்பது அவர் நம்பிக்கை. ஆனால் டெலிபோன்



கேபிள் இல்லாத கிராமங்களுக்கு இண்டர்நெட்டை எப்படிக் கொண்டு போவது? சக பேராசிரியர்களைக் கலந்தாலோசித்தார். ஆராய்ச்சிகள் தொடர்ந்தன. அப்படி உருவானதுதான் WLL என்கிற Wireless Local Loop Technology. ஒரு பேஸ் ஸ்டேஷனை அமைத்து, அதன் மூலம் ரேடியோ சிக்னல்களை வானத்தில் தூவி சுற்று வட்டாரங்களில் ஏரியல்கள் மூலம் அவற்றை இறக்கி இண்டர்நெட் தொடர்பை உண்டாக்குவதுதான் அந்தத் தொழில் நுட்பம். "இப்படியொரு திட்டம் கைவசமாயிருக்கிறது. அரசு உதவி செய்தால் முயற்சி செய்து பார்க்கலாம்" என்று மத்திய அரசிடம் கோரிக்கை வைத்தார்கள் ஐ.ஐ.டி. பேராசிரியர்கள். இந்தத் தொழில்நுட்பத்தை மக்களிடம் கொண்டு செல்ல என்லாக் கம்யூனிகேஷன்ஸ் என்கிற நிறுவனத்தையும் உண்டாக்கினார்கள்.

மத்திய அரசிடம் கொடுத்த திட்டம் போன இடம் தெரியவில்லை. இதற்கிடையில் 1999ல் டெலிகாம் அமைச்சராக இருந்த ராம் விலாஸ் பாஸ்வான் ஏதோ வேலையாக ஆப்பிரிக்காவுக்குப் போக, அங்குள்ள கிராமப் புறங்களில், இதே தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி மக்கள் விரல் நுனியில் உலகத்தோடு வைத்திருந்த தொடர்பைப் பார்த்து ஆச்சரியப்பட்டுப் போனார். திரும்பி வந்தவர் 'என்ன இது அநியாயமா இருக்கு? பின்தங்கிய ஆப்பிரிக்காவிலேயே இந்த வசதியை பயன்படுத்த முடிகிறது என்றால் நமக்கு என்ன ஆயிற்று?" என்று அதிகாரிகளை குடைந்தெடுத்தார். அதன் பின்னர்தான் என்லாக் நிறுவனம் கொடுத்திருந்த திட்டம் தூசி தட்டி எடுக்கப்பட்டு உயிர் கொடுக்கப்பட்டது.

**தி**ட்டம் எப்படிச் செயல்படுகிறது? பரீட்சார்த்தமாக மேலூர் தாலுக்காவில் 38 கிராமங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டன. ஏற்கெனவே கிராமங்களில் இருக்கும் சுய உதவிக் குழுக்கள் மூலமாக இண்டர்நெட் இல்லம் நடத்த ஆர்வமாயிருப்பவர்களைத் தேடினார்கள். பத்தாவது அல்லது ப்ளஸ் டூ படித்திருந்தால் போதும். அவர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு கம்யூட்டர் பயிற்சி கொடுத்து இண்டர்யூனிட் அமைத்துக் கொடுத்து விடுவது என்பது ஏற்பாடு. இப்படி அமைத்துக் கொடுக்க ஐம்பதாயிரம் ரூபாய் வரை செலவாகும். இந்த முதலீட்டை நிறுவனமே ஏற்றுக் கொள்ளும். பின்னர் மாதம் இவ்வளவு என்று சுபலமான தவணைகளில் முதலீட்டைத் திருப்பிக் கொடுக்கலாம். மாற்று வசதியாக இந்த முதலீட்டுக்கான தொகையை, கடனாகப் பெற்றுத் தருவதற்கும் ஏற்பாடு செய்யப்படுகிறது.

மாதா மாதம் என்லாக் நிறுவனத்தின் வலைச் சேவையை பயன்படுத்த 750 ரூபாய் கொடுத்துவிடவேண்டும். அந்த அளவுக்குப் பணத்தைத் திருப்பிச் செலுத்த வருமானம் கிடைக்குமா?

"எனக்கு தினசரி ஐம்பது ரூபாய் வருமானம் கிடைக்கிறதே" என்கிறார் உலக பிச்சன்பட்டி சுகன்யா. ப்ளஸ் டூ படித்த பிறகு கணிதத்தில் பட்டப்படிப்பு படிக்க வேண்டுமென்று ஆர்வம் கொண்டிருந்தவரை தடுத்து விட்டார் அவர் தந்தை. "பெண்ணை எப்படி டவுனுக்கு அனுப்பிப் படிக்க வைப்பது?" என்பது அவர் கவலை. கல்லூரிப் படிப்பு கைகூடவில்லை" என்ற கவலையில் இருந்த சுகன்யாவுக்குத் தித்திப்பான செய்தியாக வந்ததுதான் இந்த இண்டர்நெட் இல்ல விவகாரம். இப்போது காலை எட்டு மணி முதல் இரவு எட்டு மணி வரை 'நெட்'டில் பிஸியாக இருக்கிறார் சுகன்யா. உள்ளூர்ப் பள்ளிகளில் படிக்கும் மாணவ, மாணவிகளுக்கு கம்ப்யூட்டர் கல்வியும் சொல்லிக் கொடுக்கிறார். இவருக்குக் குடும்பத்தினர் மிகவும் உதவியாக இருக்கின்றனர். கிராமத்தின் எல்லா வீடுகளுக்கும் அவ்வப்போது விஸிட் செய்து அவர்கள் பிரச்னைகள் எதுவாக இருந்தாலும் தெரிந்து கொண்டு அவற்றிற்கு இண்டர்நெட் வசதி மூலம் தீர்வு காண முயலகிறார் சுகன்யா. "இப்படிப்பட்ட மார்க்கெட்டிங் மூலம் வருமானம் கூடுகிறது" என்கிறார் அவர்.

"பேஸ் ஸ்டேஷனில் நாங்கள் மானிட்டர் செய்யும்போது உலக பிச்சன்பட்டி ஸிஸ்டம் எப்போதுமே பிஸியாக இருப்பதைத் தெரிந்து கொள்கிறோம். இந்தக் கிராமத்தைவிட, மாதம் 5000 ரூபாய் வரை சம்பாதிக்கும் 'இல்ல'ங்களும் உண்டு என்கிறார் என்லாக் மார்க்கெட்டிங் அதிகாரி ராஜேஷ் சிவனேசன். உதாரணமாக பதினெட்டாங் குடியில் இண்டர்நெட் இல்லம் நடத்தும் பொறுப்பை எடுத்துக் கொண்டிருப்

---

"கட்சி வேறு நான் வேறு கிடையாதுன்னு தலைவர் அடிக்கடிச் சொல்ல ஆரம்பித்திருக்கிறாரே... ஏன்?"

"நிதி திரட்டியதுல கட்சிக்குன்னு சொந்தமா மூணு கோடி ரூபாய் சேர்ந்திருக்காம்."

- தஞ்சை ரவி



பவர் பழனிச்சாமி. ஆனால் அதில் வேலை செய்பவர் ரோஸி. தபாலில் பட்டப்படிப்பு படிக்கும் ரோஸிக்கு, இரண்டு பேர் கொண்ட குடும்பத்தைப் பார்த்துக் கொள்ளவும் படிப் பதற்கும் வருமானம் கிடைக்கிறது.

"ஒரு நபர் மேலூர் தாசில்தார் அலுவலகத் துக்குச் சென்று வந்தால் எட்டு ரூபாய் செலவாகும். அது தவிர அங்கே சென்றால், சினிமா, ஹோட்டல் என்று செல்லத் தோன் றும். பல சமயங்களில் பேச்சு மோதல்கள் தீப் பொறியைக் கிளப்பி ஜாதி மோதல்களுக்கும் வழி வகுக்கும். இவற்றையெல்லாம் தவிர்க்கும் விதமாக, உங்கள் கிராமத்தில், உங்கள் வீட்டி லிருந்தே தேவைகளை குறைந்த செலவில் நிறைவேற்றிக் கொள்ள முடிகிற தென்றால்... இதுதான் மக்களை மிகவும் கவர்ந்துவிட்டது" என்கிறார் ராஜேஷ். எதாவது சான்றிதழ் வேண்டி மனு செய்தவுடன் இரண்டு அல்லது மூன்று நாட்களுக்குப் பிறகு தாசில்தார் அலுவலகத்தில் இருந்து பதில் வந்து விடுகிறது: 'சம்பந்தப்பட்ட நபரை அனுப்பவும், சான்றிதழ் தயாராக இருக்கிறது. செலுத்த வேண்டிய கட்டணம் இவ்வளவு' என்று தகவல் வர, ஒரு நடை சென்று வாங்கி வந்து விடுகிறார்கள்.

"இந்தத் தகவல் சேவை புரட்சி மாபெரும் வெற்றி பெறக் காரணம் மாவட்ட ஆட்சி யாளர் மற்றும் அவர் கீழ் பணியாற்றும் தாசில் தார், அதிகாரிகள்தான்" என்று நன்றியுடன் சொல்கிறார்கள் என்லாக் அதிகாரிகள். அதே போல அரவிந்த் கண் மருத்துவமனை, கால் நடை மருத்துவக் கல்லூரி, விவசாயப் பல்கலை கழகம் ஆகிய அமைப்புகளும் உற்சாகமாய் உதவுகின்றன.

தாசில்தார் அலுவலகத்தின் பல சான்றிதழ் களுக்கு மேஜைக்கு அடியில் வெட்ட வேண்டி யிருக்குமே? அப்படியிருக்க, இப்படிப்பட்ட சேவை மூலம் அந்த வருமானம் போய் விடுமே?" நீங்கள் சொல்வது தவறு. இந்தத் திட் டம் வெற்றிபெற முழு மனத்துடன் உழைக் கிறார்கள் எங்கள் ஊழியர்கள்" என்கிறார் மேலூர் தாசில்தார் இல.நாகராஜன். "அவர் கள் உதவி செய்வதால் தான் மக்களுக்கு விரை வாகப் பயன் கிடைக்கிறது. இதன் மூலம் கிராமங்களிலிருந்து மக்கள் இந்த அலுவலகத் துக்கு வருவது கொஞ்சம் குறைந்திருக்கிறது. இருந்தாலும், இந்த இண்டர்நெட் சேவையை கல்விப் பயன்பாட்டுக்கும் கூடுதலாக உப யோகிக்க முடிந்தால் கிராம மக்கள் மகிழ்ச்சி யடைவார்கள்" என்கிறார் நாகராஜன்.

இந்தப் பரீட்சார்த்த திட்டம் வெற்றி யடைந்ததின் அடிப்படையில் தமிழ்நாட்டில் பத்து மாவட்டங்களில், ஒவ்வொரு மாவட்டத் திலும் 150 கிராமங்களுக்கு இந்த வசதியை எடுத்துச் செல்ல திட்டம் போட்டுச் செயல் படுகிறது என்லாக் நிறுவனம். "மேலூரில் இதை அறிமுகப்படுத்தியதற்குக் காரணம், இந்தப் பகுதி பிற்பட்ட பகுதியாக இருப்பது தான். இந்தப் பகுதியிலேயே திட்டம் வெற்றி யடையும்போது மற்ற இடங்களில் சுலபமாகச் செயல்படுத்த முடியும்" என்கிறார் என்லாக் தலைமை நிர்வாக அதிகாரி பொன்னப்பா. தமிழ்நாட்டைத் தவிர ஆந்திரா, ராஜஸ்தான், மகாராஷ்ட்ரா ஆகிய மாநிலங்களில் உள்ள சில தாலுக்காக்களிலும் இந்தத் திட்டம் சிறப் பாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது.

கிராமங்களில் இண்டர்நெட் இல்லம் அமைக்க அடிப்படைக் கட்டுமான வசதி களை உருவாக்கித் தருவதைத் தவிர, தொழில் அதிபர்கள் யாரேனும் முன் வந்தால், தாலுக்கா அளவில் ஸ்டேஷனை அமைத்துக் கொடுத்து, திட்டத்தை அமுல்படுத்தும் முழுப் பொறுப்பையும் வழங்க முன்வருகிறது இந்த நிறுவனம்.

மேலூர் வட்டாரத்தில் இந்த இண்டர்நெட் இல்லங்களைக் கண்டு கொஞ்சம் மிரளத் துவங்கியிருக்கிறார்கள் லோக்கல் பஞ்சாயத்து தலைவர்களும் ஆளும் கட்சி அரசியல்வாதி களும். தினசரி அங்கு சென்று இன்றைக்குப் பொது மக்கள் புகார் ஏதாவது அனுப்பப்பட் டிருக்கிறதா? என்பதை அவர்கள் தெரிந்து கொண்டு போகிறார்களாம்! சாதாரணமாக இண்டர்நெட் கனைக்ஷன் இருந்தால் அதில் தொலைபேசி வசதி செய்ய முடியாது. ஆனால் என்லாக் தொழில் நுட்பத்தில் 'நெட்'டோடு தொலைபேசி வசதியும் உண்டாம். "டெலிகாம் அனுமதி கொடுத்தால், டெலிபோன் சேவை யும் துவங்கி விடும்" என்கிறார் ராஜேஷ் சிவசேனன்.

— ப்ரியன்

படங்கள் : ராஜன்



**"தலைவரோட பதவி ஏற்பு விழாவில் ஜனாதிபதியே ஆடிப் போயிட்டார்?"**

**"ஏன்?"**

**"ரகசிய காப்பு பிரமாணம்னு சொல்றீங் களே, 'காப்பு எங்கே'ன்னு கேட்டுட்டார்!"**

**- ஆர்.சி. முத்துக்கண்ணு**



கதாசிரியர். அருமை.
**இராஜபாளையம்,** **வே.ஈஸ்வரன்**

✉ புதுமைக்கு வரவேற்பு தருவதில் நம் ரசிகர்கள் என்றுமே பின் வாங்கியதில்லை. சோதனை முயற்சியான 'நிலைக்கண்ணாடி' சாதனை படைக்கும்.
**ஸ்ரீரங்கம்,** **எஸ்.கௌரிலக்ஷ்மி**

✉ ஆயுர்வேதத்தின் சிறப்பு, உடற்கூறுகளின் இயற்கை அமைப்பு, உபாதைகளுக்கான காரணம், நோய்மூலம் நாடி சிகிச்சை போன்ற பல அரிய தகவல்களைத் தரும் பெட்டகமாக உள்ளது 'தேவ மருந்து' தொடர்.
**மதுரை,** **பாலு**

## அருமையான யோசனை!




✉ 'காஸ்ட்லி' கனவோ, 'சீப்'பான கனவோ, அது வேறு விஷயம். ஆனால் கனவு காண எல்லோருக்கும் உரிமை உண்டு என ஜெயலலிதா ஏற்கெனவே கூறி உள்ளார் என்பதை மறந்துவிட வேண்டாம்.
**திருவனந்தபுரம்,** **எஸ்.எஸ்.மணி**

✉ மனித நேயமே மக்கிப் போய்விட்ட காலத்தில் தமது பெற்றோர்கள், உறவினர்களால் கைவிடப்பட்டு சமூகத்தில் அனாதையாகி நிற்பவர்களுக்குக் கை கொடுக்கும் 'உதவும் கரங்களின்' சேவை மெய்சிலிர்க்க வைத்தது.
**திருவாரூர்,** **எஸ்.பாலசந்தர்**

✉ தலையங்கம் படித்தேன். 'பிரதமராக வேறு ஒருவரை முன்மொழிந்துவிட்டு, சோனியா பிரச்னைக்கு முற்றுப் புள்ளி வைக்க வேண்டுமென எழுதப்பட்டிருந்தது. நீங்கள் சொல்லும் யோசனைப்படி நடந்தால் -

● சோனியா கிட்டத்தட்ட காமராஜர் அளவிற்குப் போற்றப்படுவார்

● பத்தோடு பதினொரு பிரதமர் என்ற முறையில் இல்லாமல் நவீன இந்திய வரலாற்றின் பக்கங்களில் மக்கள் மனத்தினில் உன்னதமான இடம் சோனியாவுக்குக் கிடைக்கும். அது பிரதமர் - குடியரசுத் தலைவர் போன்ற பதவிகள் தராத இடத்தை அவருக்குக் கொடுக்கும்.

● இந்த மாதிரியான ஒரு அஸ்திரத்தை பா.ஜ.கவினால் தாக்குப் பிடிக்க முடியாது.

● அரசியல் கட்சி அனைத்தும் சோனியாவைப் பின்பற்றி நாட்டு நலனே முக்கியம் என்ற பாதையைத் திரும்பியாவது பார்ப்பார்கள். நல்ல முன்னுதாரணமாகத் தெரிவார்.

● இதற்கு வேண்டிய தெளிவு, நேர்மை பரந்த நோக்கம் நிச்சயம் (வெளிநாட்டுக்காரராக இருப்பதால்!) அவருக்கு இருக்க வாய்ப்புள்ளது!
**பாண்டிச்சேரி,** **எஸ்.இளங்கோவன்**

✉ 'கானல்நதி' கவிதை வரிகள் மனத்தில் அழுந்தத் தடம் பதித்தன. சோகத்தில் ஆழ்த்தும் 'காவிரி' பற்றிய இறுதி வரிகள் நினைவிற் கொள்ளத் தக்கவை.
**போடி,**
**எஸ்.எம்.பாலசுப்ரமணியன்**

✉ ஜாதிவெறிக்கு ஒரு சவுக்கடி. சோரம் போன கணவன்மார்களுக்கு ஒரு சவுக்கடி. குடிவெறியால் பிதற்றித் திரியும் பித்தர்களுக்கு ஒரு சவுக்கடி. 'வீரலட்சுமி' கதை மூலம் விளாசிவிட்டார்

# இப்படியொரு விதியா?

● விஜய் டி.வியில் "அபூர்வ ராகங்கள்" பகுதியின் அரையிறுதிச் சுற்று. நடுவராக நித்யஶ்ரீ. ஹாரிஸ் ஜெயராஜ் இசையமைப்பில் விக்ரம் நடித்த ஒரு படத்திற்காகத் தான் பாடிய ஒரு பாடலை பாடிக் காண்பித்தார். நித்யஶ்ரீக்கு அந்தப் பாடல் எடுபடவில்லை. நிகழ்ச்சியின் இணைப்பாளரான ஜேம்ஸ் வசந்தன் "இந்தப் பாடலை ஒலிநாடாவில் கேட்டபோது உங்களுக்கு எப்படி இருந்தது?" என்று கேட்க, சட்டென்று நாணயமான பதில் வந்தது. 'வேடிக்கையாய் இருந்தது.'


• அனுராதா ஶ்ரீராம்


• ஜேம்ஸ் வசந்தன்

● டென்ஸ்போர்ட்டில் WWF என்ற நிகழ்ச்சி. செட்டப் குத்துச்சண்டைதான், ஆனால் குத்துச் சண்டை மேடையைவிட்டுக் கீழே இறங்கியும், அடித்துக் கொள்வதும், நாற்காலியையெல்லாம் எதிராளியின் மீது போட்டுத்தாக்குவதும் பயங்கரம். பார்க்கும் சிறுவர்களின் மனத்தில் வன்முறை விதைகள் உருவாகும் வாய்ப்பு அதிகம். "இந்தப் போட்டியில் ஒன்று தோல்வியை ஒத்துக் கொள்ளவேண்டும். அல்லது இறந்துவிட வேண்டும்" என்பதுதான் விதியாம்! இப்படி யொரு விதியா!


• நித்யஶ்ரீ

● அரிகிரியின் கலாய்க்கும் கேள்விகளை நடிகை வினோதினி நன்றாகவே சமாளித்தார். நீங்கள் பிறந்தது சென்ற நூற்றாண்டிலா?' என்றதற்கு நீங்கதான் என் ஸ்கூல் நண்பராச்சே' உங்களுக்குத் தெரிஞ்சதுதானே' என்றார். 'உங்கள் முகத்தில் தமிழ்க்களையே இல்லை. ஏதோ குஜராத்திப் பொண்ணு மாதிரி இருக்கு' என்றதற்கு 'இன்னொரு தடவை சொல்லுங்க. எனக்கு கதாநாயகி சான்ஸ் மறுபடியும் கிடைக்கும். வட இந்திய நடிகைகளுக்குதானே இப்ப சான்ஸ்' என்றார் பளிச்சென்று.

● கங்கா யமுனா சரஸ்வதி என்று ஒரு தொடர் வந்தது. அதைத் தொடர்ந்து அந்த நதிகளுடன் 'சங்கமம்' என்ற வார்த்தையை ஒட்ட வைத்து இன்னொரு தொடர். இப்போது 'அச்சம் மடம் நாணம்' என்ற தொடருக்கு அடுத்து அதே பெயருடன் 'பிருந்தாவனம்' என்ற வார்த்தையை ஒட்டவைத்து இன்னொரு தொடராம்! இந்த ரேட்டில் நாலு வருடங்கள் கழித்து வெளிவரும் மெகாதொடர்களின் பெயர்கள் இந்திப் படப் பெயர்களின் நீளத்தையும் தாண்டிவிடுமென்று நம்பலாம்.

● பாடகி அனுராதா ஶ்ரீராம் ஒவ்வொரு கேள்விக்கும் அர்த்தத்தோடு, ஆனால் வெகுநீண்ட பதிலளித்தார் சன் டி.வி. பேட்டியில். எழுத்தாளர் சிவசங்கரியின் நினைவு வந்தது. 'இப்படி ஒரு அற்புதமான பாடலைப் பாடும் வாய்ப்பு எல்லோருக்கும் கிடைத்துவிடாது' என்று அனுராதா குறிப்பிட்டது மின்சாரக் கனவு படத்தில் அவர் பாடிய 'அன்பென்னும் மழையிலே'.

— சேனல் பாய்



# ஸ்ரீ ஸரஸ்வதி பூஜை மற்றும் ஸ்தோத்திரங்கள்

நல்ல வாக்கு வன்மையையும், நல்ல ஞானத்தையும் கொடுக்கும் தெய்வமாக ஸ்ரீ ஸரஸ்வதி தேவி கருதப்படுகிறார். குறிப்பாக ஸரஸ்வதி பூஜையன்று, நாடு முழுவதும் உள்ள அனைத்து கல்வி நிலையங்களிலும், அறிவு மற்றும் ஆன்மீக வளர்ச்சிக்காகவும் ஸ்ரீ ஸரஸ்வதி தேவி பூஜிக்கப் படுகிறார். நுண்ணறிவு, புத்திசாலித்தனம், மற்றும் எல்லா விஞ்ஞான, கலை வளர்ச்சிக்கும் தேவதையான ஸ்ரீ ஸரஸ்வதி மனிதனின் புத்தி சம்பந்தப்பட்ட, பேச்சு வல்லமைக்கும், தேவதையாக கருதப்படுகிறார். தனிமனிதனின் குணாதிசயங்களைக் குறிக்கும் ஞானம், மனம், அறிவு, புத்தி ஆகியவற்றை நான்கு கரங்களாகக் கொண்டு, வெள்ளைத் தாமரையில் வீற்றிருக்கும் சத்வ குணத்தை உடைய ஸ்ரீ ஸரஸ்வதி தேவியை, சரஸ்வதி பூஜையன்று, துதிப்பதற்காக சூப்பர் டேப் & டிஸ்க்ஸ் பிரைவேட் லிமிடெட், ஸ்ரீ ஸரஸ்வதி பூஜை ஒலிநாடாவை வழங்குகிறது.

இதில் ஸரஸ்வதி காயத்ரி, விக்னேஸ்வர பூஜை, ஸரஸ்வதி நக்ஷத்ரமாலா, ஸரஸ்வதி ஸ்தோத்ரம் த்வத்ரிம ஸ்தோத்ரம், ஸரஸ்வதி தோத்ரம் (அகஸ்தியர்) ஸரஸ்வதி அஷ்டகம், ஸரஸ்வதி தசஸ்லோகீ ஸ்தோத்ரம், ஸரஸ்வதி ஸ்துதி (யாக்ஞவல்கியர்), மற்றும் ஸரஸ்வதி மங்களம் ஆகியவை உள்ளன. கலைமகளின் அருளாசிகளை அனைவரும் அடைய வேண்டும் என்று ப்ரார்த்திக்கிறோம்.

*இந்த ஒலித்தட்டை வெளியிடுவதில் **Super Tape & Discs (P) Ltd.,** பெருமை கொள்கிறது.*



## SUPER TAPE & DISCS (P) LTD.

**713, ANNA SALAI, CHENNAI - 600 006.**
**INDIA. E-mail-super tape @yahoo.com**
**Available at Singapore - Mustafa Centre 393 3511 (Moorthy / Asif)**
**USA - Mr. Anil Prabhu Ph : 7326611700 Mobile : 7328417777**

**For Audio Cassettes Contact : Phone : 858 7009, 7140067 & 68.**



# S.V. முதியோர் இல்லம்



இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப் படுகிறது. படுத்த படுக்கை யில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

எல்லா வயது உட்பட்ட அதிக பட்ச மனநோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

***முதியோர் சேவை பெரியது!***

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

## S.V. HOME FOR AGED

# 50 / 88, Panchali Amman Kovil Street, (Near Arumbakkam Post Office)
Arumbakkam, Chennai - 600 106
Tel. Off: 475 5700, 475 1356, 475 5799
Cell No. : 98400 84363
Email: svhome1rediffmail.com

# சிவகாமியின் சபதம்

## எட்டாம் அத்தியாயம்

## யோக மண்டபம்

நீண்ட காலத்திற்குப் பிறகு நாம் மறுபடியும் கண்ணபிரானுடைய வீட்டுக்குள் பிரவேசிக்கும்போது, அங்கே 'குவா குவா' என்ற சப்தத்தைக் கேட்டு திடுக்கிடுகிறோம்.

வாசற்படியில் சிறிது தயங்கி நின்றுவிட்டு உள்ளே சென்றோமானால், அஸ்தமன வேளையின் மங்கிய வெளிச்சத்தில் அங்கே ஓர் அபூர்வமான காட்சியைக் காண்கிறோம்.

விபூதி ருத்ராட்சமணிந்து கனிந்த சிவப்பழமாய்த் தோற்றமளித்த ஒரு சைவப் பெரியார் நிற்கிறார். அவருடைய நீட்டிய இரு கரங்களிலும் ஒரு பச்சைக் குழந்தை - ஆறு மாதத்துக் குழந்தை காணப்படுகிறது. மூக்கும் முழியுமாக வெண்ணெய் தின்ற கண்ணனைப் போல் கிண்ணென்றிருந்த அந்தக் குழந்தைதான் 'குவா குவா' என்று அழுகிறது. அந்தச் சைவப் பெரியாருக்கு எதிரில் கண்ணபிரானும், கமலியும் நின்று புன்னகை புரிந்துகொண்டிருக்கிறார்கள்.

பெரியவர், குழந்தையைக் கமலியின் கைகளில் விட்டுவிடப் பார்க்கிறார். கமலி குழந்தையை வாங்கிக் கொள்ள மறுத்துப் பின்வாங்குகிறாள். "நான் என்ன செய்வேன்? பாட்டனைக் கண்டால் பேரனுக்கு அவ்வளவு ஆசை, என்னிடம் வர மாட்டேனென்கிறான்" என்று சொல்கிறாள் கமலி. இதையெல்லாம் பார்த்துக் கண்ணபிரான் சந்தோஷப்பட்டுக் கொண்டே நிற்கிறான்.

குழந்தை 'குவா குவா' என்று கத்திக்

அமரர் கல்கி

கொண்டே காலையும் கையையும் உதைத்துக்கொள்கிறது. கிழவர்... "கமலி! உன்னுடைய பொல்லாத்தனம் உன் குழந்தையிடமும் இருக்கிறது!" என்கிறார்.

அச் சமயம், வீட்டின் கொல்லைப் புறத்திலிருந்து அதாவது அரண்மனைத் தோட்டத்திலிருந்து மணி அடிக்கும் சப்தம் கேட்கிறது. பெரியவர் அதைக் கேட்டதும் அதிக பரபரப்பை அடைகிறார். அப்பால் இப்பால் பார்க்கிறார். குழந்தையைத் திடீரென்று தரையில் விட்டு விட்டுத் தோட்டத்தைப் பார்க்க ஓட்டம் பிடிக்கிறார்.

கமலி தன் கண்களில் தீப்பொறி பறக்க, "பார்த்தாயா, உன் தகப்பன் சாமர்த்தியத்தை? பச்சைக் குழந்தையைத் தரையிலே போட்டு விட்டு ஓட எப்படித்தான் மனம் வந்ததோ?" என்றாள்.

"கமலி! அப்பாவின் பேரில் குற்றம் இல்லை. நாதப் பிரம்மம் நேரிலே வந்து கூப்பிடும்போது அவர் என்ன செய்வார்?"

"நாதப் பிரம்மமும் ஆச்சு! நாசமாய்ப் போனதும் ஆச்சு! வெறும் ஆஷாடபூதி. அவ்வளவு வைராக்கிய புருஷராயிருந்தால், காட்டுக்குத் தபசு செய்யப் போவதுதானே? அரண்மனைத் தோட்டத்தில் சிங்கார மண்டபத்தில் என்ன வேலை? சமாதி கட்டிக் கொள்ள இங்கேதானா இடம் அகப்பட்டது? அது போகட்டும். என் பொல்லாத்தனமெல்லாம் என் குழந்தைக்கும் வந்திருக்கிறதாமே! கிழவரின் வாய்த் துடுக்கைப் பார்த்தாயா? இவருடைய மகன் மட்டும் ரொம்பச் சாதுவாம்! பார்! நான் போய் விடுகிறேன். என் தங்கை சிவகாமியைப் பார்க்க வேண்டுமென்று எனக்குக் கூட ஆசையாய் இருக்கிறது. கோட்டைக் கதவு திறந்ததும் இந்தப் பொல்லாத பிள்ளையையும் அழைத்துக் கொண்டு போய் விடுகிறேன்! இந்த அரண்மனைச் சிறையில் யார் இருப்பார்கள்?"

ப்படி கமலி மூச்சு விடாமல் பேசிக் கொண்டே தரையில் கிடந்த குழந்தையை எடுக்கப்போனாள். கண்ணனும் அதேசமயத்தில் குழந்தையை எடுப்பதற்காகக் கீழே குனிந்தான். இருவருடைய தலைகளும் மோதிக்கொண்டன. "இந்தப் பொல்லாதவனை நீ ஒன்றும் எடுக்க வேண்டாம்!" என்றாள் கமலி. "அப்படித்தான் எடுப்பேன்; நீ என்ன சொல்கிறது?" என்றான் கண்ணன். இப்படி இவர்கள் குழந்தையைத் தரையிலிருந்து யார் எடுப்பது என்று சண்டை போட்டுக் கொண்டிருக்கும்போதே, வாசலில் குதிரைச் சப்தம் கேட்டது. சற்று நேரத்துக்கெல்லாம் யாரோ உள்ளே வந்தார்கள். யார் என்று திரும்பிப் பார்த்த கண்ணபிரானும் கமலியும் அப்படியே பார்த்தது பார்த்தபடி பிரமித்து நின்றார்கள்.

ஏனெனில், அவ்விதம் திடீரென்று வந்தவர் சாக்ஷாத், மகேந்திர பல்லவ சக்கரவர்த்திதான்!

"ஓஹோ! இங்கேயும் ஒரு யுத்தமா? நாட்டிலே யுத்தம் நின்றுவிடும் போல் இருக்கிறது. ஆனால், உங்கள் வீட்டு யுத்தம் மட்டும் நிற்கவே நிற்காது போலிருக்கிறதே!" என்று சக்கரவர்த்தி கூறியதும் தம்பதிகள் இருவரும் பெரிதும் வெட்கமடைந்து மறுமொழி சொல்ல முடியாமல் நின்றார்கள்.

பிறகு மகேந்திர பல்லவர், "கமலி! உன் குழந்தை சௌக்கியமாயிருக்கிறதா?" என்று கேட்டுக்கொண்டே அருகில் வந்து குழந்தையின் முகத்தைப் பார்த்துவிட்டு, "கண்ணனை அப்படியே உரித்து வைத்திருக்கிறது! சின்னக் கண்ணன் என்றே பெயர் வைத்து விடலாம். மாமல்லனுக்கும் கலியாணமாகி இந்த மாதிரி ஒரு குழந்தை பிறந்தால், அரண்மனை கலகலவென்று இருக்கும். அரண்மனையில் குழந்தை அழுகைச் சப்தம் கேட்டு வெகுகாலம் ஆயிற்று!" என்று தமக்குத்

தாமே பேசிக் கொள்கிறவர் போல் சொல்லிவிட்டு, "கண்ணா! உன் தகப்பனார் எங்கே?" என்று கேட்டார்.

"இப்போதுதான் வசந்த மண்டபத்துக்குப் போனார், பிரபு!" என்றான் கண்ணன்.

"ஆ! மகரிஷி யோக சாதனைக்குப் போய் விட்டாரா!" என்று மகேந்திரர் கேட்டபோது, கமலி இலேசாகச் சிரித்தாள்.

"கமலி சிரிக்கிறாள்! உங்களைப் போல் இளம் வயதாயிருப்பவர்களுக்கு யோகம், சமாதி என்றால் சிரிப்பாய்த்தான் இருக்கும். வயதாகி உலகத்தில் விரக்தி ஏற்பட்டால் அப்புறம் நீங்களும் போகும் வழிக்குக் கதி தேடலாமென்று யோசிப்பீர்கள். போகட்டும்; உங்களுடைய யுத்தத்தைத் தொடர்ந்து நடத்துங்கள். நான் யோகியைப் பார்த்து விட்டுப் போகிறேன்" என்று சொல்லிக் கொல்லைப்பக்கம் நோக்கிச் சென்றவர், வாசற்படியண்டை சற்று நின்று, "கமலி! உன் சிநேகிதி சிவகாமியைக் கூடிய சீக்கிரத்தில் நீ பார்க்கலாம்!" என்று கூறிவிட்டு மேலே நடந்தார்.

சக்கரவர்த்தி மறைந்ததும், கமலி, "கண்ணா! இதென்ன சக்கரவர்த்தி திடீரென்று வந்து நம் மானத்தை வாங்கிவிட்டார்! சிவகாமி கூடிய சீக்கிரம் வருவாள் என்று அவர் சொன்னதைக் கேட்டாயா, கண்ணா? யுத்தம் சீக்கிரத்தில் முடிந்து விடப் போகிறதா? சளுக்கர்கள் தோற்று ஓடிப் போய் விட்டார்களா?" என்று ஏதேதோ கேட்டாள்.

அந்தக் கேள்விகளையெல்லாம் காதில் வாங்கிக் கொள்ளாதவனாய்க் கண்ணபிரான் ஏதோ யோசித்துக் கொண்டிருந்தவன், சட்டென்று யோசனையை நிறுத்தி, "கமலி! கொஞ்ச நாளாகவே எனக்கு ஒரு மாதிரி சந்தேகம் இருந்தது. அது இன்றைக்கு ஊர்ஜிதமாயிற்று!" என்றான்.

"என் பேரில் சந்தேகம் வந்துவிட்டதா? அது என்ன சந்தேகம்?"

"உன் பேரில் எனக்கு யாதொரு சந்தேகமும் இல்லை. சந்தேகம் என் தகப்பனார் பேரில்தான். அவர் ஏதோ யோகம், தியானம் நாதப்பிரம்ம உபாசனை என்றெல்லாம் சொல்லிக் கொண்டு நந்தவன மண்டபத்துக்குப் போய் இரவு பகலாய் உட்கார்ந்திருக்கிறாரே, அதில் ஏதோ அந்தரங்கம் இருக்க வேண்டுமென்று சந்தேகித்தேன். அந்தச் சந்தேகம் ஊர்ஜிதமாயிற்று இன்று."

"என்ன சந்தேகம்? எப்படி ஊர்ஜிதமாயிற்று?"

"கிட்ட வா, சொல்கிறேன். ரொம்ப ரொம்ப அந்தரங்கமான விஷயம். இந்தப் பயலின் காதிலேகூட விழக்கூடாது! கமலி, அப்பாவின் யோக மண்டபத்தில் ஒரு சுரங்க வழி இருக்கிறது. அது கோட்டைக்கு வெளியே போகிறது. சக்கரவர்த்தியின் ஒற்றர்கள் அதன் வழியாக அடிக்கடி வந்து போய்க் கொண்டிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். பார்த்தாயா? இந்தப் பயல் நான் சொல்வதை எப்படி ஒற்றுக் கேட்டுக் கொண்டிருக்கிறான்...!" என்று கண்ணபிரான் சொல்லிக் குழந்தையின் கன்னத்தை இலேசாகக் கிள்ள, குழந்தை வீர் என்று கத்த ஆரம்பிக்க, கமலி கண்ணபிரானைச் சண்டை பிடிக்க, கண்ணபிரான், 'அவனும் என் கன்னத்தை வேணுமானால் கிள்ளட்டும்!" என்று கூற, கமலி குழந்தையைப் பார்த்து, 'என் கண்ணே!' என்று அதற்கு முத்தம் கொடுக்கப் போக, குறுக்கே கண்ணபிரான் கன்னத்தை நீட்ட, கமலி அவனைச் சண்டை பிடிக்க, இப்படி ஏகப் பூசலாகிவிட்டது.



தற்கிடையில் மகேந்திர சக்கரவர்த்தி அரண்மனைத் தோட்டத்திற்குள் புகுந்து வசந்த மண்டபத்துக்குச்

சென்றார். காலடிச் சப்தத்தைக் கேட்டதும், சிவனடியாராக விளங்கிய அசுவபாலர் வெளியில் தலையை நீட்டி, "பிரபு, தாங்கள்தானே? நல்ல சமயத்தில் வந்தீர்கள். இப்போதுதான் மணி அடித்தது!" என்று கூறி, மண்டபத்தின் நடுமத்தியில் இருந்த சிவலிங்கத்தை அப்பால் நகர்த்தவும், சிவலிங்கம் இருந்த இடத்தில் ஒரு பள்ளமும் அதற்குள் மங்கிய இலேசான வெளிச்சமும் தெரிந்தன. சில விநாடிகளுக்கெல்லாம் அந்தப் பள்ளத்திலிருந்து சத்ருக்னனுடைய தலை எழுந்தது. பிறகு சத்ருக்னனின் முழு உருவமும் வெளியில் வந்தது.

"சத்ருக்னா? உனக்காகக் காத்திருந்து காத்திருந்து போதும் போதும் என்று ஆகிவிட்டது. ஏன் இவ்வளவு தாமதம்? போன காரியம் என்ன? காயா? பழமா?" என்று மகேந்திர பல்லவர் கேட்டார்.

"பல்லவேந்திரர் எடுத்த காரியம் ஏதாவது காயாவது உண்டா? பழந்தான். சுவாமி! எல்லாம் தாங்கள் போட்ட திட்டப்படி நடந்தது. வேங்கித் தூதனுடன் போன சளுக்க வீரர்களிடம் குண்டோதரன் அகப்பட்டுக் கொண்டான். இருவரும் கொள்ளிடக் கரையில் புலிகேசியின் முன்னிலைக்குக் கொண்டு போகப்பட்டார்கள்."

"குண்டோதரனை அப்புறம் பார்த்தாயா? அல்லது அவனிடமிருந்து ஏதேனும் செய்தி உண்டா?"

"அதுதான் இல்லை. அவனுக்காகத்தான் இத்தனை நேரம் காத்துப் பார்த்தேன். புலிகேசி மகா மூர்க்கன் என்று கேள்வியாச்சே, சுவாமி! குண்டோதரனுடைய கதி என்ன ஆயிற்றோ என்று சிறிது கவலையாயிருக்கிறது."

"குண்டோதரனுக்கு ஒன்றும் நேர்ந்திராது, சத்ருக்னா!"

"எப்படிச் சொல்லுகிறீர்கள்? பிரபு?"

"நம்முடைய யுக்தி நாம் எதிர்பார்த்ததைக் காட்டிலும் மகத்தான பலனை அளித்துவிட்டது. கேள், சத்ருக்னா! புலிகேசி சமாதானத் தூது அனுப்பியிருக்கிறான்! இந்த நேரம் அவனுடைய தூதர்கள் என் மறுமொழிக்காகத் தெற்குக் கோட்டை வாசலில் காத்திருக்கிறார்கள். நான் உன்னைச் சந்தித்து விட்டுப் பிறகு முடிவாக மறுமொழி சொல்லலாம் என்றெண்ணி அவசரமாக இங்கே வந்தேன்."

"பிரபு! புலிகேசியை நம்பலாமா? மகா வஞ்சகன் என்று சொல்லுகிறார்களே?" என்றான் சத்ருக்னன்.

"அவநம்பிக்கை கொள்வதற்கு இடமேயில்லை, சத்ருக்னா! ஆனாலும், குண்டோதரன் திரும்பி வந்தால் அவனைச் சில விஷயம் கேட்டு உறுதிப்படுத்திக் கொள்ளலாம் என்று நினைத்தேன்."

இவ்விதம் மகேந்திரர் சொல்லிக் கொண்டிருந்தபோதே சத்ருக்னன் எந்தப் பள்ளத்திலேயிருந்து வெளி வந்தானோ, அந்தப் பள்ளத்திற்குள் இருமல் சப்தம் கேட்டது. பேசிக் கொண்டிருந்த இருவரும் திடுக்கிட்டார்கள். அடுத்த விநாடி அந்தப் பள்ளத்தில் குண்டோதரனுடைய தலை தெரியவே, அளவிறந்த வியப்போடு ஓரளவு அமைதியும் அடைந்தார்கள்.

"குண்டோதரா! உனக்கு நூறு ஆயுசு! இப்போதுதான் உன்னைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். நீ எப்படித் திடீரென்று முளைத்தாய்?" என்று சக்கரவர்த்தி கேட்க, "பிரபு! தாங்கள் அடிக்கடி 'சத்ருக்னரைப் பின்பற்றி நட! சத்ருக்னரைப் பின்பற்றி நட!' என்று சொல்லுவீர்களே, அது மிகக் கடினமான காரியம். இந்த இருட்டுச் சுரங்க வழியில் இவரைப் பின்பற்ற முயன்று நான் ஓடோடி வந்தும் இவரைப் பிடிக்க முடியவில்லை!" என்றான் குண்டோதரன்.

"உன் வேடிக்கையெல்லாம் அப்

புறம் ஆகட்டும். நீ போன இடத்தில் என்ன நடந்ததென்று விவரமாகச் சொல்லு'' என்று மகேந்திர சக்கரவர்த்தி கேட்க, குண்டோதரனும், நாம் முன்னமே அறிந்த அவன் வரலாற்றை விவரமாகக் கூறி முடித்தான்.

## ஒன்பதாம் அத்தியாயம்

# யுத்த நிறுத்தம்



அன்றிரவு இரண்டாம் ஜாமத்தில் மந்திராலோசனை சபை மறுபடியும் கூடிய போது, சபையில் கூடியிருந்த எல்லோருடைய முகத்திலும் பரபரப்புக் காணப்பட்டது. வாதாபி வீரர்கள் இருவரும் வெள்ளைக் கொடி பிடித்துக்கொண்டு தெற்குக் கோட்டை வாசலில் வந்து நின்றதாகவும், அவர்கள் கொண்டு வந்த ஓலை மகேந்திரச் சக்கரவர்த்தியிடம் சேர்க்கப்பட்டதாகவும் நகரம் முழுவதும் வதந்தி பரவிவிட்டது. ஓலையில் என்ன எழுதியிருந்தது, மகேந்திர பல்லவர் என்ன மறுஓலை அனுப்பப் போகிறார் என்று அறிந்து கொள்ள அவ்வளவு பேரும் ஆவலாக இருந்தார்கள். முக்கியமாக, நரசிம்ம வர்மரின் முகத்திலே எள்ளும் கொள்ளும் வெடித்தன. அவருடைய கண்களில் பளிச் பளிச்சென்று மின்னல் தோன்றி மறைந்தன. தம் பக்கத்தில் நின்ற பரஞ்சோதியுடன் அடிக்கடி சமிக்ஞா பாஷையினால் அவர் ஏதோ பேசிக் கொண்டிருந்தார். அவருடைய மார்பு புயலால் தாக்குண்ட கடலைப் போல் மேலே பொங்குவதும் கீழே அடங்குவதுமாக இருந்தது.

சக்கரவர்த்தி வழக்கத்தைவிட மிடுக்கான நடையுடன் வந்து சிம்மாசனத்தில் அமர்ந்தார். அவர் கையிலிருந்த ஓலை மீது எல்லாருடைய கண்களும் கவனமும் சென்றன.

''சபையோர்களே! இன்று மாலை சபை கலையும் சமயத்தில் முக்கியமான செய்தியை எதிர்பார்ப்பதாகச் சொன்னேன். நான் எதிர்பார்த்ததைக் காட்டிலும் மிகவும் முக்கியமான ஆச்சரியமான செய்தி வந்திருக்கிறது. மந்திரிகளே! அமைச்சர்களே! தளபதிகளே! அனைவரும் கேளுங்கள்! வாதாபிச் சக்கரவர்த்தி யுத்தத்தை நிறுத்திவிட்டார். சமாதானத்தையும் சிநேகத்தையும் வேண்டி ஓலை அனுப்பியிருக்கிறார்!'' என்று சொல்லி மகேந்திர பல்லவர் தம் கையிலிருந்த ஓலையைத் தூக்கிக் காட்டியதும் சபையில் ஏற்பட்ட 'ஹா ஹா'காரத்தையும் மற்றும் பல வியப்பொலிகளையும், குதூகல சப்தங்களையும் வர்ணிக்க முடியாது. இவ்வளவுக்கிடையில் 'ஹூம்' என்ற ஆட்சேபிக்கும் குரல் ஒன்றும் கிளம்பியது. அது மாமல்லர் இருந்த இடத்திலிருந்து வந்ததென்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

''மந்திரிகளே! அமைச்சர்களே! உங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். துங்கபத்ரா நதியிலிருந்து நர்மதை நதிவரையிலும் உள்ள மத்திய பாரத தேசத்தின் ஏக சக்கராதிபதி நம்முடைய சிநேகத்தைக் கோருகிறார். நம்முடன் சமாதானத்தை நாடுகிறார். அவருக்கு நான் என்ன மறுமொழி அனுப்பப்படட்டும்? யுத்தத்தை நிறுத்த முடியாது; போர் நடத்தியே தீருவோம்'

## அருள்வாக்கு

'காமம் குரோதம்' என்று சேர்த்துச் சொல்வது வழக்கம். காமம் என்பது ஆசை. குரோதம் என்பதுதான் கோபம், ஆத்திரம், துவேஷம் இவை எல்லாமாகும். மனிதனைப் பாபத்தில் தள்ளுபவை காமமும், குரோதமுமே என்று கிருஷ்ண பரமாத்மா கீதையில் சொல்லியிருக்கிறார்.



ஒரு வஸ்துவிடம் ஆசை உண்டாகி விட்டால் அதைத் தவறான வழியிலாவது அடைய முயல்கிறோம். இப்படியாகக் காமம் என்பது நம்மைப் பாவத்தில் தள்ளுகிறது. அது நமக்குப் பெரிய சத்ரு. அதே போன்ற இன்னொரு சத்ருவே கோபம். நாம் ஆசைப்படுகிற வஸ்து கிடைக்காத பொழுது, அதற்குத் தடையாக இருந்தவர்கள் மீது அல்லது தடை என்று நாம் நினைத்தவர்கள் மீது கோபம் வருகிறது. அதாவது நிறைவேறாத காமமே கோபம் என்று பெயர் கொள்கிறது.

ரப்பர் பந்தைச் சுவரில் எறிகிறோம். அது எதிர்த்துக்கொண்டு நம்மிடமே திரும்பி வருகிறது. எறியப்படும் பந்து காமம். அதே பந்து திரும்பி வரும்போது கோபமாகிறது. திரும்பி வருகிற பந்து நம்மையே தாக்குகிறது. அப்படியேதான், நம்முடைய கோபத்தால் பிறரைத் தாக்குவதாக நினைத்தாலும், அது நம்மையேதான் அதிகம் தாக்குகிறது. கோபத்தில் நம் உடம்பெல்லாம் ஆடிப் போகிறது. நம் தேகம், மனசு இரண்டுக்கும் கோபத்தினால் பெரிய கிலேசம் உண்டாக்கிக் கொள்கிறோம். நாம் ரௌத்ராகாரமாகச் சத்தம் போடும்போது, நம்மை யாரேனும் போட்டோ பிடித்து அப்புறம் நம்மிடம் காட்டினால் போதும், கோபாவேசத்தில் நம்மை நாமே எத்தனை கோரமாக்கிக் கொள்கிறோம் என்று புரிந்து கொண்டு வெட்கப்படுவோம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

என்று சொல்லியனுப்பட்டுமா? அல்லது பல்லவ குலத்தின் பரம்பரைத் தர்மத்தை அநுசரித்து, சிநேகத்தைக் கோருகிற வாதாபிச் சக்கரவர்த்தியிடம் நாமும் சிநேகத்தைக் கைக்கொள்ளலாமா? சபையோர்களே! நன்றாக யோசித்துச் சொல்லுங்கள். பதினையாயிரம் யானைப்படையையும், ஐந்து இலட்சம் காலாட் படையையும் உடைய வாதாபிப் புலிகேசி மன்னர், யுத்தத்தை நிறுத்திவிட்டு நமது விருந்தினராகக் காஞ்சி நகருக்குள் பிரவேசிக்க விரும்புகிறார். சில தினங்கள் இங்கே தங்கி இம் மாநகரின் சிறப்புக்களைப் பார்த்துக் களித்துவிட்டுப் போக ஆசைப்படுகிறார். அவரை மரியாதையுடன் வரவேற்று உபசரிப்போமா அல்லது கோட்டைக் கதவுகளுக்கு இன்னும் சில தாழ்களைப் போட்டு அடைப்போமா? உங்களுக்குள்ளே கலந்து யோசித்துக் கொண்டு ஏகமனதாக அபிப்பிராயத்தை எனக்குத் தெரியப்படுத்துங்கள்'' என்றார் சக்கரவர்த்தி.

பிறகு சற்று நேரம் சபையில் ஒரே கலகலப்பாய் இருந்தது. மந்திரிகளும், அமைச்சர்களும் ஒருவரோடொருவர் உற்சாகமாய்ப் பேசிக்கொண்டார்கள். கடைசியாக, பிரதம மந்திரி சாரங்கதேவ பட்டர் பேசுவதற்கு எழுந்து நின்றபோது, சபையில் நிச்சப்தம் குடி கொண்டிருந்தது.

''பல்லவேந்திரா! தங்களுடைய இராஜ தந்திரத்திலும் தீர்க்காலோசனையிலும் இச் சபையோர் அனைவருக்கும் பூரண நம்பிக்கை இருக்கிறது. எந்தக் காரியத்தை எந்தக் காலத்தில் எப்படிச் செய்ய வேண்டுமோ, அப்படித் தாங்கள் செய்து முடிப்பீர்கள் என்று எல்லாரும் உறுதி கொண்டிருக்கிறோம். ஆகவே, முதலில் தங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ள விரும்புகிறோம்'' என்

றார்.

அப்போது சக்கரவர்த்தி, "பட்டரே! என் அபிப்பிராயத்தைக் கேட்கவும் வேண்டுமா? அவசியத்துக்கு மேலே ஒரு விநாடியும் யுத்தத்தை நடத்துவதில் எனக்குப் பிரியமில்லை. ஓர் உயிரேனும் வீணாகச் சேதம் அடைவதில் எனக்கு விருப்பமில்லை. இந்தக் கோட்டைக்குள் இருக்கும் நாமெல்லோரும் கூடியவரையில் ஒரு குறையும் இல்லாமல் சௌகரியமாயிருக்கிறோம். ஆனால், கோட்டைக்கு வெளியே கிராமங்களிலும் பட்டணங்களிலும் உள்ள பல்லவ நாட்டுப் பிரஜைகள் பெருங்கஷ்டங்களுக்கு ஆளாகியிருக்கிறார்கள். தொண்டை மண்டலத்தில் இந்தக் கோடை காலத்தில் பயிர்த் தொழிலே நடக்கவில்லை. இன்னும் சில மாத காலத்தில் பல்லவ நாட்டுப் பிரஜைகளைப் பெரும் பஞ்சம் பீடிக்கக் கூடும். இப்பேர்ப்பட்ட நிலைமையில், அநாவசியமாக யுத்தத்தை வளர்த்துவதற்கு எனக்குச் சம்மதமில்லை. மேலும், உத்தராபத ஹர்ஷவர்த்தன சக்கரவர்த்தியைப் போர்க்களத்தில் புறங்காட்டச் செய்த வீராதி வீரரான புலிகேசி மன்னர் யுத்தத்தைத் தாமே நிறுத்திவிட்டு வலிய வந்து சமாதானத்தைக் கோரும்போது நாம் அதை எதற்காக நிராகரிக்க வேண்டும்? என்னுடைய அபிப்பிராயம் அவருடைய கோரிக்கையை ஒப்புக்கொண்டு சமாதானத்தை நிலைநாட்ட வேண்டுமென்பதுதான்" என்றார்.

இவ்விதம் சக்கரவர்த்தி கூறி நிறுத்தியதும், சாரங்கதேவ பட்டர், "பல்லவேந்திரா! தாங்கள் இப்பொழுது கூறிய விஷயங்கள் எல்லாம் மந்திரி மண்டலத்தைச் சேர்ந்த அனைவருக்கும் உடன்பாடுதான். ஆனால், ஒரே ஒரு விஷயத்தைப் பற்றி எங்களிலே சிலருக்கு ஓர் ஐயப்பாடு இருக்கிறது. வாதாபிச் சக்கரவர்த்தியைக் காஞ்சி நகருக்குள் விருந்தினராக வரவேற்பது பற்றித் தாங்கள் சொன்னீர்கள். அது உசிதமான காரியமா என்றுதான் சந்தேகப்படுகிறோம். வாதாபி மன்னர் பழி பாவங்களுக்கு அஞ்சாத வஞ்சகர் என்றும், அசுர குணம் படைத்தவர் என்றும் கேள்விப்பட்டிருக்கிறோம். காஞ்சியைப் பார்க்க வருவதாக அவர் சொல்லுவதில் ஏதேனும் அந்தரங்க சூழ்ச்சி இருக்கக் கூடுமல்லவா?" என்றார்.

மகேந்திர பல்லவர் புன்னகையுடன் கூறினார்: "சாரங்க தேவரே! முன் ஜாக்கிரதையுள்ள மதி மந்திரிகள் சொல்ல வேண்டியதைத்தான் நீங்கள் சொன்னீர்கள். யோசிக்க வேண்டிய காரியந்தான். ஆனால் வாதாபி அரசர் கேட்டிருப்பதில் ஒருவிதமான சூழ்ச்சியும் இருக்க நியாயமில்லை. அவருடைய யானைப்படை, காலாட் படை எல்லாவற்றையும் காஞ்சிக்கு இரண்டு காத தூரத்துக்கப்பால் அனுப்பி விடச் சம்மதிக்கிறார். அவருடைய முக்கிய மந்திரிப் பிரதானிகள் பத்துப் பதினைந்து பேருடன் நிராயுதபாணியாகக் காஞ்சிக்குள் பிரவேசிக்கச் சித்தமாயிருக்கிறார். சபையோர்களே! நம்மிடம் இவ்வளவு பூரண நம்பிக்கை வைத்துச் செய்தி அனுப்பியுள்ளவரிடம் நாம் எவ்விதத்தில் சந்தேகம் கொள்வது? ஆகவே, யுத்தமா, சமாதானமா என்பதைப் பற்றித்தான் உங்களுடைய அபிப்பிராயம் வேண்டும்!"

மறுபடியும் மந்திரிமார்களும் அமைச்சர்களும் ஒருவரோடொருவர் கலந்து, ஆலோசித்தார்கள். கடைசியில், சாரங்க தேவபட்டர் எழுந்து, "பல்லவேந்திரா! மந்திரி மண்டலத்தார் சமாதானத்தையே விரும்புகிறார்கள். வாதாபிச் சக்கரவர்த்தியைக் காஞ்சிக்குள் வரவேற்கும் விஷயத்தில் தங்களுடைய கருத்து எதுவோ அதன்படி செய்யலாமென்று அபிப்பிராயப்படுகிறார்கள்" என்றார்.

(தொடரும்)

■ விஷுவல்தாசன் ■

# சினிமா வாரிசுங்க!

• சிபிராஜ் அப்பாவுடன்



**வா**ரிசுகள் படையெடுப்பு விவகாரத்தில், கோடம்பாக்கத்திற்கு முன்னால் தமிழக அரசியல் எல்லாம் ஒன்றுமேயில்லை என்றாகி விட்டது. 'ஸ்டூடண்ட் நம்பர் ஒன்' படத்தின் மூலம் நாயகனாக அறிமுகமாகும் சிபிராஜ், அப்பா சத்யராஜைவிட, உயரத்தில் இரண்டு அங்குலம் அதிகம். அதாவது ஆறடி இரண்டு அங்குலம். லயோலா கல்லூரியில் பி.காம். முடித்த கையோடு நடிகராகிவிட்ட இவருக்குப் பிடித்த ஹீரோ யாராம்...? "சந்தேகமே வேண்டாம் சத்யராஜ்தான்'' என்று பிழைக்கத் தெரிந்த பிள்ளையாகப் பேசுகிறார். "அப்பா ஏதாவது அட்வைஸ் தந்தாரா?'' என்றால் ''படப்பிடிப்பு அட்மாஸ்பியரில் ஆயிரம் பேர் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாலும், அந்த உணர்வே இல்லாமல் நடிக்கப் பழகு'' என்றாராம். 'ஸ்டூடண்ட் நம்பர் ஒன்', ஜுனியர் என்.டி.ஆர். நடித்து தெலுங்கில் சூப்பர் ஹிட்டான படம். அதை அப்படியே சிபிராஜுக்காக தமிழில் ரீமேக் செய்கிறார் இயக்குனர் செல்வா.

• ஆர்யன் ராஜேஷ்





• ரகுவண்ணன்

'மாறன்' படத்தில் சத்யராஜின் மகனாக அறிமுகமாகியிருக்கும் ரகுவண்ணன், மணிவண்ணனின் மகன்! கம்ப்யூட்டர் கிராபிக்ஸ் படித்துக் கொண்டிருந்த ரகுவை நடிகனாக்க வேண்டும் என்ற விருப்பம் மணிவண்ணனுக்கு இல்லை. ஆனால் ரகு நடிகனாகியே தீருவேன் என்று அடம் பிடித்தால் அவர் என்ன செய்வார்? மாறன் படத்தில் ராகிங் மூலம் கொலை செய்யப் பட்ட நாவரசுவை நினைவுபடுத்தும் பாத்திரத்தில் நடித்திருக்கிறார் ரகுவண்ணன். "நல்ல மெசேஜ் கொண்ட படத்தில் அறிமுகமாகிறேன் என்று நினைக்கும் போது பெருமையாக இருக்கிறது. இயல்பாகப் பண்ணியிருக்கிறேன் என்று பார்க்கிற எல்லோரும் பாராட்டுகிறார்கள்" என்று சந்தோஷப்படுகிறார் இந்த ஆவின் ஹீரோ.

'ஆல்பம்' பட நாயகன் ஆர்யன் ராஜேஷ் பிறந்தது, வளர்ந்தது படித்ததெல்லாம் சென்னையில்தானாம். ஆனால் தெலுங்கு சினிமாவில் அறிமுகமாகி, முதல் படத்தை அங்கே சூப்பர் ஹிட்டாக்கிவிட்டு சென்னை வந்து விட்டார். "தமிழ்தான் எனக்குப் பிடிக்கும். தமிழ்ப் படங்களில் நடிக்கவே முக்கியத்துவம் தருவேன். எனக்குத் தாய்மொழி தெலுங்கு என்றாலும், ஹைதராபாத்தில் இருந்தால்கூட தமிழில்தான் பேசிக் கொண்டிருப்பேன். என்னைத் தமிழன் என்று சொல்லிக் கொள்ளவே பிரியப்படுகிறேன்" என்கிறார். இவருக்கு இத்தனைத் தமிழ் வெறி பிடிக்க என்ன காரணமாக இருக்கும்? ''எனக்குத் திருமணம் ஆகிவிட்டது. கல்லூரியில் படிக்கும்போதே காதல். மனைவிக்குச் சென்னைதான். இதை நான் மறைக்க விரும்பவில்லை'' என்ற ராஜேஷ், பிரபல தெலுங்குப்பட இயக்குனர் ஈ.வி.வி. சத்தியநாராயணாவின் மகன்.



• அருண்

'காலாட்படையில் வில்லனாக அறிமுகமாகும் அருண், நடிகர் கரணின் உறவினர். லண்டனில் பிஸினஸ் ஸ்டடிஸ் படித்துக் கொண்டிருந்தபோது வகுப்புகளைக் கட் அடித்துவிட்டு, தமிழ்ப் படங்களைப் பார்க்கப் போய் நடிப்பின்மீது வெறி வந்துவிட்டதாம்.








நல்ல தமிழ் எழுத வேண்டுமா?




# புக்பேங்க்

**தமிழில் விமர்சனத் துறை : சில போக்குகள் - தி.க.சிவ சங்கரன்**

'ரசனையே விமர்சனத்தின் அடிப்படை என்றாலும் ரசனையுடன் தத்துவார்த்தச் சிந்தனை இணைகிறபோதுதான் விமர்சனம் சரியானதாக அமையும்' என்ற கருத்தை வலியுறுத்தியவர்கள் தொ.மு.சி.யும், தி.க.சி.யும். பல்வேறு பத்திரிகைகளில் தி.க.சி. எழுதிய முப்பத்தெட்டு கட்டுரைகளின் தொகுப்பு இந்நூல். புதுமைப்பித்தன், உள்ளிட்ட பலர் பற்றிய கட்டுரைகள் விவாதத்துக்குரியன.

**பத்மா பதிப்பகம், 21, லோகநாதன் நகர் இரண்டாம் தெரு, சூளைமேடு, சென்னை 94. விலை ரூ.90.**

**சுத்துக்குட்டி - திருமயம் அழகுராஜன்**

கவிதைகள். மனக முழுக்க மண்வாசனையுடன் அழிந்துபோன கிராமத்தின் நினைவுகளை இக்கவிதைகளில் தந்துள்ளார் ஆசிரியர். பணியாரக் குழவி, தலையணை, கருப்பர் உள்ளிட்ட பல்வேறு கவிதைகளில் புதிய விஷயங்கள் பொதிந்து கிடக்கின்றன. அழகான புகைப்படங்களுடனும் வடிவமைப்புடனும் வந்துள்ளது புத்தகம்.

**பத்மா பதிப்பகம், 17/1, நாவலர் நெடுஞ்சாலை, தசரதபுரம், சாலிகிராமம், சென்னை - 93. விலை ரூ.100**

**அப்பச்சி - ஏவி.எம். வாழ்க்கை வரலாறு - ராணிமைந்தன்**

ஏவி.மெய்யப்பச் செட்டியாரின் வாழ்க்கை வரலாறு. நம்பிக்கையையும் புதுமைச் சிந்தனையையும் கொண்டு ஏவி.எம் எப்படி வெற்றி பெற்றார் என்பதைப் படிக்கும்போது உத்வேகம் தோன்றுகிறது. அழகான வடிவமைப்புடன் வந்துள்ள இப்புத்தகத்தில் பல்வேறு அரிய சினிமா தகவல்களும் இருக்கின்றன.

**வானதி பதிப்பகம், 23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17 விலை ரூ.100**

**அன்பு அன்னை சாரதாதேவி - பேரா. ஏ. சுப்பிரமணியம்**

இராமகிருஷ்ணரின் வாழ்க்கைத் துணைவியான சாரதாதேவியின் வரலாறு இப்புத்தகம். ஆங்காங்கே வாழ்வுக்குத் தேவையான வழிமுறைகளையும் சுட்டிக் காட்டியிருப்பது சிறப்பாக உள்ளது.

**அன்னை சாரதா பதிப்பகம், 1பி, சுவாகத் அபார்ட்மென்ட்ஸ், 3, பசுமர்த்தி தெரு, ரங்கராஜபுரம், சென்னை - 24. விலை ரூ.50.**

**நல்ல தமிழ் எழுத வேண்டுமா? அ.கி. பரந்தாமனார்.**

நல்ல தமிழில் எழுதுவதற்கான சில அடிப்படை இலக்கணங்களையும் பிழையின்றி எழுதும் முறையையும் தெளிவாக எளிமையாக விளக்குகிறது இந்நூல். தமிழ் படிப்பவர்கள், எழுதுகிறவர்கள், மாணவர்கள் அவசியம் வாசிக்க வேண்டிய நூல்.

**அல்லி நிலையம், 28 (19), முத்துமுதலி தெரு, வேப்பேரி அஞ்சல், சென்னை - 7 விலை ரூ.100.**

— கார்க்கி

முன்னோர்களுக்கு திதி கொடுக்கும் வழக்கத்தை விட்டவர்களுக்கும் - மறந்தவர்களுக்கும் தம்மை நினைவுகூறும் குடும்பத்தாருக்கு மஹாளயபக்ஷ காலத்தில் பிதுர்க்கள் பூமிக்கு வந்து நல்லாசி வழங்குகின்றனர்.



# புண்ணியக்ஷேத்ரம் இராமேஸ்வரத்தில் மஹாளயபக்ஷ அமாவாஸை திதியில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

அன்புடையீர், புரட்டாசி மாத மாளயபக்ஷ அமாவாசையன்று, சர்வ கோடி லோகங்களிலுமுள்ள மஹரிஷிகள் உட்பட அனைத்து ஜீவன்கள், தேவதைகள் அனைவரும் பூலோகத்திற்கு வந்து புண்ணிய நதிக்கரைகளிலும், சமுத்திரங்களிலும், இராமேஸ்வரம் போன்ற புனிதத் தலங்களிலும் தர்ப்பண பூஜையை மேற்கொள்கின்றனர். வசு, ருத்ர, ஆதித்ய, பித்ரு தேவர்களே இந்நாளில் தர்ப்பணம் இடுகின்றனர் என்றால் மாளயபக்ஷ மஹிமை பெரிதன்றோ? நம் மூதாதையர்களான பித்ருக்கள், தாம் நினைத்தபடி யெல்லாம் பூலோகத்திற்கு வர இயலாது. ஆனால், அமாவாஸை, இறந்த திதி, மாதப் பிறப்பு, மாளயபக்ஷ நாட்கள் போன்ற நாட்களில்தான் அவர்கள் பூலோகத்திற்கு வர அனுமதிக்கப்படுகிறார்கள். எனவே அவர்கள் சூட்சும தேகத்தில் பூலோகத்திற்கு வருகின்ற நாட்களில், நாம் பித்ரு தர்ப்பண பூஜைகளை நிறைவேற்றிட, அவர்கள் அவற்றை இங்கு நேரடியாகப் பெற்று ஆசியளிக்கின்றனர்.

மஹாளயபக்ஷ அமாவாஸை திதியில் அன்னதானம் செய்வது வெகு விசேஷமான தொன்றாகும். அது, தர்ப்பணப் பலன்களைப் பன்மடங்காக நமக்குப் பெற்றுத்தரும் என்பதில் எவ்வித ஐயப்பாடும் வேண்டாம். இராமேஸ்வரத்தில் அமாவாஸை தினத்தில் அன்னதானம் செய்தால் மனித குலம் மாபெரும் புண்ணியத்தை பெறும். புத்திரப்பேறு உண்டாகும். நாகதோஷம் முதலியன நீங்கும். அனைவரும் நலம் பெறுவர்.

★ தடைபட்ட திருமணம், புத்திர பாக்யம் இவை உண்டாகும் ★ வறுமை அகல ★ கொடிய நோய்கள் நீங்க ★ தொழில் மந்தம் நீங்கி முன்னேற்றம் காண ★ பிரிந்தவர்கள் ஒன்றுசேர ★ நீண்ட ஆயுள், கடன் தொல்லையிலிருந்து விடுதலை ★ மனநிம்மதி பெற ★ பெற்றோர், மூதாதையர் நினைவு நாளில் ★ ஆக நீங்கள் நினைத்த காரியம் நிறைவேற நாங்கள் உங்கள் சார்பாக அன்னதானமளித்து, பிரஸாதம் அனுப்பி வைக்கிறோம்.

★ சிறியதொகை மற்றும் அரிசி போன்ற உணவு பொருட்களும் ஏற்றுக் கொள்ளப்படும்.
★ ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கந்தபுராணம் அல்லது பகவத்கீதை புத்தகம் அனுப்பி வைக்கப்படும். ரூ. 5,000 அளிக்கும் அன்பர்களுக்கு கவி-ந்யாய-மீமாம்ஸ சிரோமணி ஸ்ரீமான் திருவெண்காடு டி.கே. முத்துஸ்வாமி சாஸ்திரிகளால் தயாரிக்கப்பட்டு பூஜையில் வைத்த யந்திரம் அன்பர்களின் விருப்பத்திற்கேற்ப எந்த யந்திரம் தேவையோ அந்த யந்திரம் இலவசமாக வழங்கப்படும். ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்திக்கு அணில் செய்த ஸேவை போல் இந்த லோகக்ஷேமத்திற்கு நம்மால் இயன்றளவில் உபகாரம் செய்திடுவோம். நேரில் கலந்து கொள்ள அன்புடன் அழைக்கிறோம்.

நன்கொடை அனுப்பும் அன்பர்கள் **GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI-41** என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். புனித ஸேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது மேலான ஒத்துழைப்பை என்றென்றும் நாடுகிறோம்.

*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*

## கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை
## GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST

**M-11/F-4, TNHB FLATS, I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR, THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA**

☎: 4900303, 4900603 Fax: (044)4916316 E-mail: gopuradarisanam@yahoo.com

★ நீங்கள் தேடும் மனநிம்மதி அன்னதானத்தில் கிடைக்கிறது ★ ஸர்வேஜனா: - ஸுகினோபவந்து

# நீங்கள் கேட்டவை—தராசு

● அ. ராஜா ரஹ்மான், கம்பம்.
*?'இளங்கோவனை மனநோய் மருத்துவ மனைக்கு அனுப்புவதா சிறைச்சாலைக்கு அனுப்புவதா' என்று யோசித்து வருவதாக அவருடைய அம்மா சுலோசனா சம்பத் அறிக்கை விட்டிருப்பதை கவனித்தீரா?*
! பதவி ஆசை காரணமான அரசியல் அநாகரிகம் எந்த அளவுக்குப் போகும் என்பதற்கு எடுத்துக்காட்டு. இளங்கோவன் பதிலேதும் கூறாது அமைதி காப்பாராக.

❑ ரூ. 100/- பரிசு பெறுபவர்:
ஜி. மோகன்ராம்,
3/620, ஒன்பதாவது தெரு,
சத்தியா நகர்,
கோவிலம்பாக்கம், சென்னை.

* ரூ. 50/- பரிசு பெறுபவர்:
எல். ராமச்சந்திரன்,
1, ஆரிமுத்து மேஸ்திரி தெரு,
சென்னை - 5.

## தமிழ் தெரியாத ஆண்டவனுக்கு வேலை இல்லை என்கிறாரே கலைஞர்?

● கே. கணேசன், சென்னை - 5.
*? அதிக வருவாய்க் கணக்கைச் சமர்ப்பித்து வருமானவரி செலுத்தி விருது பெற்ற ப. சிதம்பரம், நடிகர் சிரஞ்சீவி குறித்து..?*
! அரசியலிலும் சினிமாவிலும் நேர்மையானவர்கள் இருக்கிறார்கள் என்பதற்கு இருவரும் உதாரணம். அது சரி, ஒழுங்காக வரி செலுத்துவது கடமையாயிற்றே; அதற்கு எதற்கு விருது? கொஞ்சமாக வரி செலுத்தினாலும் நேர்மையாகச் செலுத்தும் ஒவ்வொருவருமே பாராட்டுக்குரியவர்கள்தானே! விருது தருவதென்றால் அவர்கள் அத்தனை பேருக்கும் தரவேண்டும் தானே!

● ஆ. அருண்ராஜ், தாரமங்கலம்.
*? கலைஞர் ஆட்சி, ஜெ. ஆட்சி – எதில் மக்களுக்கு நன்மை அதிகம்?*
! 'ஜெ. ஆட்சியில்தான்! இதுக்கும் மேலே என்ன ஆனா என்ன?' என்று பற்றற்று ஞானிகளாகிவிடுவதால்.

● ஜி. ராமமூர்த்தி, அரசவனங்காடு.
*? செம்மங்குடி சீனிவாச அய்யருடைய வாழ்க்கை வரலாற்றை, தகுந்த எழுத்தாளர் மூலம் எழுதி வெளியிடுவேன் என்று கலைஞர் உறுதிமொழி அளித்தாரே, என்ன ஆயிற்று?*
! எழுதும் பணி முடிந்து அரசிடம் தரப்பட்டு விட்டது. வெளியிடும் நோக்கமோ வசதியோ இல்லாவிட்டால் அதைத் தனியாரிடம் ஒப்படைத்துவிடலாம். ஊறுகாய் போடுவதால் யாருக்கும் பலனில்லை.

● ஜி. மோகன்ராம், சென்னை - 17. ❑
*? எதிர்காலத்தில் இந்தியா 'சோமாலியாவாக' மாறாமல் இருக்க, தற்போதைய மத்திய அரசு என்ன நடவடிக்கை எடுக்கப்போகிறது?*
! இந்திய நதிகள் – கால்வாய்கள் சுமந்து செல்லும் நீரில் எழுபது சதவிகிதம், பயன்படுத்துவோரை அடையாமலே வீணாகிவிடுகிறது என்கிற செய்தியை, சமீபத்தில் 'தி எகானமிஸ்ட்' இதழில் படித்தேன். இந்த ஒரு பிரச்னை ஓரளவு தீர்க்கப்பட்டாலேகூட இந்தியா சோமாலியா வழியில் போகாமல் காப்பாற்றிவிடலாம்.

● ஆர். அப்துல்சலாம், திருச்சி - 21.
*? பெட்ரோல் நிறுவனங்களை விற்க மத்திய அரசின் முடிவுக்கு பாரதிய ஜனதா மற்றும் கூட்டணி கட்சியைச் சேர்ந்த அமைச்சர்களே எதிர்ப்பு தெரிவிப்பது எதைக் காட்டுகிறது?*
! தில்லி அமைச்சரவை, எண்ணித் துணியாமல் துணிந்தபின் எண்ணுகிறது என்பதை.

● என். சண்முகம், திருவண்ணாமலை.
*? 'நம்முடைய மொழி தெரியாத ஆண்டவனுக்கு நம்மிடத்திலே என்ன வேலை!'*

***என்று கலைஞர் பேசியிருப்பது குறித்து...?***

! மொழி – இறையுணர்வு இரண்டுமே உணர்வுத் தளத்தைச் சேர்ந்தவை என்பதால் தெரிந்த மொழியில் இறைவனிடம் பேசும் சுகம் தனிதான். அறிவுத் தளத்திலிருந்து இதை உணர்ந்து கூறியிருக்கும் கலைஞருக்கு 'ஜே' போட முடியாதபடிக்கு இந்தக் கருத்தை அவர் வெளியிடும் முறை தடுத்துவிடுகிறது; எதிர்ப்பையும் தோற்றுவிக்கிறது. இருதரப்பு வாதங்களையும் நுணுகிப் பார்த்தால் இரு தரப்பிலும் அடிப்படை ஒற்றுமை இருப்பது புலப்படுகிறது.

● எல். மாறன், மேல்பட்டி.

***? காங்கிரஸ் ஜனநாயகப் பேரவை காங்கிரஸில் இணையாது என்கிறாரே ப.சி.?***

! அது பழசு; மூன்றாவது கூட்டணிக்குத் தலைமை ஏற்க 'ஒருத்தர்' வருகிறாராமே, அது புதுசு!

● ஆர். மாதவராமன், கிருஷ்ணகிரி.

***? ஜனநாயகம் பற்றி இந்தியாவுக்குப் பாடம் நடத்த முஷாரஃப்புக்குத் தகுதியில்லை என்கிறாரே வாஜ்பாய்?***

! ராணுவ ஆட்சியை நீட்டிக்க கண் துடைப்புத் தேர்தல் நடத்தி வென்ற ருத்ராட்ச பூனையார்தானே முஷாரஃப் என்பதால் பேசியுள்ளார் வாஜ்பாய். ஆனால், முஷாரஃபிடம் இல்லாவிட்டாலும் வேறு நல்ல ஜனநாயகவாதிகளிடம் சில பாடங்களைக் கேட்டுக் கொள்ளும் நிலைமையில்தான் இருக்கிறோம்.

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.

***? 'கல்வியில் மதத்தைப் புகுத்தியதில் தவறில்லை' என்று சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு கூறியுள்ளதே?***

! ம்ஹூம்! சுப்ரீம் கோர்ட் அவ்வாறு கூறவில்லை. 'மதம் பற்றிய தகவல் பாடத்திட்டத்தில் சேர்க்கப்பட்டுள்ளது தவறாகாது. – அவை பண்பாடுகளையும் மதிப்பீடுகளையும் வளர்க்குமாயின்' என்கிறது. மாறாக, வழிபாட்டு முறைகளையும் சடங்குகளையும் அவை திணித்து மத வேற்றுமைகளையும் வளர்க்குமானால், கண்டனத்துக்குரியதாகி விடும். எனவே பாடத் திட்டத்தைக் காட்டிலும் அதனை அமலுக்குக் கொண்டு வருவதன் நோக்கம் கவனத்துக்குரியது. அதை சுப்ரீம் கோர்ட் ஊகத்தின் அடிப்படையில் கூற முடியாது. மக்கள்தான் விழிப்புடன் இருக்க வேண்டும்.

● எல். ராமச்சந்திரன், சென்னை - 5 ●

***? காவேரிப் பிரச்னை தீர முதலமைச்சர்கள், அதிகாரிகள் பேசுவதைவிட நான்கு மாநில விவசாயிகளின் பிரதிநிதிகள் கூடிப் பேசினால் என்ன..?***

! மிக நல்ல யோசனை. ஆனால் ஆட்சியில் இருப்பவர்கள் தங்கள் முக்கியத்துவத்தை இழக்க விரும்பாததால் இதற்கு ஆதரவு தரவே மாட்டார்கள்!

● ஏ. சுகுமார், காட்டுக்காணூர்.

• ஆட்சியும்...

***? பிள்ளையார் சிலையைக் கொடுமைப் படுத்துவதாக கலைஞர் குற்றம் சாட்டுகின்றாரே...?***

! நூற்றுக்கு நூறு சரி என்பதை, சிலை கரைத்த மறுதினம் தினமணியில் வெளியான மெரினா கடற்கரைப் படத்தைப் பார்த்தவர்கள் ஒப்புக்கொள்வார்கள். புதுவை துறைமுக இயக்குனர் பிள்ளையார் கரைப்பைத் தடை செய்துள்ளதும் கவனத்துக்குரியது.



• வாயும் வயிறும்...



• ...வேறடா!



• ...ஆதாயமும்!



• புதுசு!

# எதிர்கால சூப்பர் ஸ்டார்!

சமூக விழிப்புணர்வைப் பெருக்கும் 'தீம்' பிள்ளையார்கள்தான் இப்போதெல்லாம் பிரபலம்! செப்டெம்பர் 11 அட்டாக், பார்லிமெண்ட் தாக்குதல், கோத்ரா கோரம் என்று உலகளாவிய, நாடளாவிய விஷயங்களிலிருந்து, ரயிலில் மைனர் பெண் பாலியல் பலாத்காரம் வரை ஒன்றையும் விட்டு வைக்கவில்லை; தார்தேவிலுள்ள 'நானா சௌக் சித்தி விநாயக் மண்டல்' லேட்டஸ்டான 'பாபா பெங்காலி'கள் பிரச்னைகளைப் போட்டு அசத்திவிட்டார்கள். ஒரு பெண்மணி, தன் குழந்தையின் நோயைத் தீர்க்க, டாக்டரை அணுகாமல் ஒரு பாபா பெங்காலியிடம் மாட்டிக் கொண்டு, தன் ஆட்டைக் காவு கொடுக்கும் பரிதாபத்தைத் தத்ரூபமாகச் சித்திரித்திருந்தனர்! பரேலின் 'தர்த்தி கல்லி' பிள்ளை யார், மஸ்ஜித் அருகே அழகாக அமர்ந்து கொண்டு, முஸ்லிம் பக்தர்கள் ஸ்பான் சர்ஷிப்பை வாரி வழங்க, மத நல்லிணக்கத்தை அருமையாகப் பறைசாற்றிக் கொண்டிருந்தார். இங்கே வேற்றுமையில் ஒற்றுமை என்றால், ஒற்றுமையில் வேற்றுமையைப் பிரதிபலிக்கவும் சில விநாயகர்கள் அவதரித்திருந்தார்கள். காங்கிரஸ்காரர்களிடையே உட்கட்சிப் பூசல், பிள்ளையார் வரை எட்டிவிட்டது. புனாவில் முதல்வர் தேஷ் முக்கின் பிள்ளையாருக்கும், எம்.பி. சுரேஷ் கல்மாடியின் கணேசருக்குமிடையே போட்டா போட்டி! முன்னவர் லாலூஜியை அழைத்தால் பின்னவர் மனோகர் ஜோஷியை முதல் நாள் விழாவுக்கு அழைக்கிறார். இருவரும் விழா நடத்த ஒரே திடல்தான் வேண்டும் என அடம் பிடிக்கிறார்கள்! அப்பப்பா... முனிசிபாலிடிகாரர்களுக்கு



• ட்விங்கிள்



• அக்ஷய்

இவர்கள் சண்டையைத் தீர்ப்பதற்குள் 'போதுமடா சாமி' என்றாகி விட்டது!

'போதுமடா சாமி' என்று பெரிய கும்பிடாகப் போட்டு விட்டனர் பாலா சாஹேப் தாக்கரேவும் சிவசேனைக்காரர்களும். கொய்ராலா_ நாயர் விவகாரத்துக்கு இவரிடமும் அடைக்கலம் புகுந்து, கோர்ட்டிலும் நீதி கேட்டு, ஊரில் இருக்கும் மகளிர் மன்றங்களின் கதவை எல்லாம் தட்டி, சுஷ்மா சுவராஜ் வரை போய்... இப்படியா கலக்குவது? 'என்மீது நம்பிக்கையில்லாமல் நீதி மன்றத்திடம் போனாயா?' என்று நல்லவேளையாக தாக்கரே சண்டைக்குப் போகவில்லை, ஆனால் கோர்ட் முந்திக் கொண்டு விட்டதே? 'என்னிடம் விவகாரத்தை ஒப்படைத்த பின் ஊரெல்லாம் சென்று முறையிடுவது என்னை அவமதிப்பது போலாகிறதே?' என்று சிலிர்த்துக் கொண்டிருக்கிறது! இதற்கிடையே, சோகூஸி லவ் ஸ்டோரியைப் பார்க்கும் பாக்கியம் பெற்ற கிரிட்டிக்குகளில் ஒரு சிலர் குமைவது எதைப் பற்றி என்றால், 'படத்தில் டூப் போட்ட நிர்வாணக் காட்சிகளைக் காட்டிலும் அதிக ஆபாசமாக ஏகக் காட்சிகள் உள்ளனவே? அதற்கே பச்சைக் கொடி காட்டிய கொய்ராலா, இதற்கு சிவப்புக் கொடி தூக்குவது ஏன்?' என்பதைப் பற்றித்தான். ஆக மொத்தம், அவர்களைப் பொறுத்தவரை இந்த விவகாரத்துக்கு ஒரே விடை, "முழுப் படத்திற்கும் தடை!"

தடையின்றி மகிழ்ச்சி வெள்ளம் பொங்கிப் பெருகுகிறது பழைய இந்தி சூப்பர் ஸ்டார் குடும்பத்தில் – ஆம்! ராஜேஷ் கன்னா தாத்தாவாகிவிட்டாரே? மகள் ட்விங்கிளுக்கும் மாப்பிள்ளை அக்ஷய் குமாருக்கும் பிறந்திருக்கும் குட்டியைப் பார்த்து, 'எதிர்கால சூப்பர் ஸ்டார்' என்று குதூகலிக்கிறாரே? "ஹேய்... நான் பாட்டியாயிட்டேனே" என்று சந்தோஷச் சிறகடிப்பது சீனியர் ஹீரோயினாக 'தில் சாதா ஹை'யில் சக்கைபோடு போட்ட டிம்பிள் கபாடியா! மனைவியின் பிரசவத்தின் போது அருகிலேயே இருந்து வலியில் துடித்த அக்ஷய் குமாரும், தான் தந்தையாகி விட்ட குஷியில் ஆனந்தக் கண்ணீர் வடிக்கிறார். ஆக, ஒட்டு மொத்தக் குடும்பமும் 'ட்விங்கிள் ட்விங்கிள் லிட்டில் ஸ்டார்?' என்று குழந்தையைப் பாடாய்ப் படுத்துகிறது.

பாடாய்ப் படுத்துபவர்களே, ஒரு மாறுதலுக்கு, பாடுபடுபவர்களாய் மாறினால் எப்படி இருப்பர்? எங்கள் ஜெய்வந்தி பெஹன் மேத்தாவைப் போல் தானிருப்பர். மும்பையிலிருந்து மூன்று முறை எம்.பி.யாக தேர்ந்தெடுக்கப்பட்டு, யூனியன் மினிஸ்டராகவும் இருக்கும் எங்களூர் மங்கை, தன் காரியதரிசியான ஐ.ஏ.எஸ். அதிகாரி பாணிக்கிரஹிக்கென்று செய்யும் பணிவிடைகளைப் பார்த்தால், யார் காரியதரிசி, யார் எம்.பி. என்றே புரியாது. பாணிக்கிரஹிக்கு வயிற்றில் கான்சர் என்பது தெரிந்ததும், அவரைத் தன் வீட்டிலேயே தங்க வைத்து, வேளா வேளைக்கு மருந்தும் சத்துணவும்



• போட்டி பிள்ளையார்

அளித்து, தன் மேற்பார்வையிலேயே அலோபதி டாக்டர்களையும், காஸ்மிக் ஹீலிங் நிபுணர்களையும் வரவழைத்து மருத்துவம் பார்த்து, குடும்பத்தினருக்கும் ஆறுதல் சொல்லி, படிப்படியாக குணப்படுத்தி, வீட்டிலிருந்தபடியே ஆபீஸ் வேலைகளை கவனிக்குமளவுக்கு முன்னேற்றமடைய வைத்து விட்டாரே? யார் சொன்னார்கள் அரசியல்வாதிகளை இதயமற்றவர்களென்று?

இதயமற்றவர்களென்று நாம் நினைக்கும் அண்டர்வார்ல்ட் டான்களே சில சமயம் இரக்க சுபாவமுள்ளவர்களாக இருக்கிறார்கள். அருண் காவ்லி தன் அடியாட்கள் இறந்தபின்னும், அவர்கள் குடும்பத்துக்கு பென்ஷன் கொடுப்பதுண்டாம். அவனது கையாளான அஷோக் ஜோஷி மரித்தபின், அவர்கள் குடும்பத்துக்கு வழங்கப்படும் மாதாந்திர பென்ஷன் _ மூச்சைப் பிடித்துக் கொள்ளுங்கள் _ ரூ. 15,000/-

— ஜெய்ஸ்ரீ ராஜ்

■ சிவகுமார் முத்தய்யா ■

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட வைட்டமின் சிறுகதை - 4

# வேர்கள்

மார்கழி என்றால் சட்டென்று ஞாபகத்துக்கு வருவது குளிர்தான். காலை எட்டு மணிவரைக்கும் குளிர் வீசிக் கொண்டே இருக்கிறது. உடலில் ஒருவகையான உலர் தன்மையையும் ஏற்படுத்தி விடுகிறது.

தூக்கம் என்றால்கூட இந்த மாதத்துத் தூக்கம் அலாதியானது. படுத்தால் சீக்கிரமே விடிந்து விட்டதே என்று தோன்றும். போர்வையோ, கம்பளியோ இல்லையென்றால் நாய் பாடுதான். தெருவில் அனேகர்களுக்கு அதில் நாலைந்து பேர்களுக்குத்தான் போர்வை பயன்படுத்தும் பாக்கியம் வாய்த்திருக்கிறது.



அனேகர்களுக்கு நிவாரண வேட்டியும் புடவையும்தான். 'அது குளிருக்காச்சும் பயன் படுதே' - இப்படிப் பேசிக் கொள்ளத் தவறுவது இல்லை அவர்கள்.

மார்கழிக் குளிரில் காலை ஏழு மணி வரைக்கும் எழுந்திருக்க மனமில்லாமல் கிடந்த பொன்னுசாமியை உலுக்கினாள் மருதாயி.

''உன்னோடுத்த ஆம்பளயெல்லாம் டீக் கடைக்கு பெயிட்டு... டீ வாங்கிட்டு வார்றாவோ.. நீயொரு ஆம்பள கணக்கா''

அவளின் பேச்சு திடீர்க் கோபத்தை உண்டாக்கினாலும், சிரிப்பையும் உண்டாக்கியது. சோம்பல் முறித்து, போர்த்திய வேட்டியை எடுக்க மனமின்றி தெருவைப் பார்த்தான். வாசல் எங்கும் கோலம் போட்டிருந்தார்கள். அந்தக் கோலங்களின் மீது பரங்கிப்பூ, தும்பைப் பூ.. அருகம்புல்... அதன் வகை நீண்டிருந்தது.

மனசுக்குள் சிலிர்ப்பு ஏற்பட்டு.. ஆழ்ந்த சோகத்தை உண்டாக்கியது. இந்நேரம் ஒரு

மகனிருந்தால்...!

மனைவி மருதாயிகூட கோலம் போட்டிருந்தாள்.

"மார்கழி மாசத்துல மக்கள விக்கிற பஞ்சம்" அப்படித்தான் ஆகிப்போனது பொன்னுசாமியின் வாழ்வும்... ஊரில் அனேகரின் வாழ்வும்கூட.

புரட்டாசி, ஐப்பசி மாதம் வரைக்கும் தான் வயல்வேலை. அப்புறம் வேலையில்லாமல் கிடக்க வேண்டியதுதான்.

குறுவை சாகுபடி பம்புசெட், வைத்திருக்கும் சிலர்தான் செய்கிறார்கள். மற்றபடி சம்பா ஒரே போகம்தான். ஒரு காலத்தில் குறுவை அறுவடைக்கு ஆட்கள் கிடைக்கமாட்டார்கள். வெளியூரிலிருந்து ஆட்கள் வந்து தங்கி, அறுவடை செய்வார்கள். தற்பொழுது நிலைமை தலைகீழ்.

மனசு வலித்தது பொன்னுசாமிக்கு. நல்ல விடியலை நோக்கி, சிறகு பறந்தது.

பொன்னுசாமி போர்த்தியிருந்த வேட்டியை வெடுக்கென்று பிடுங்கி மருதாயி கொடியில் போட்டான்.

கையில் கூஜாவைத் திணித்து "மசமசன்னு நிக்காம வெரசா பெயிட்டு வா, தலையை வலிக்குது" என்றான்.

நடந்தான். டீக்கடையை நோக்கி. குளிர் மெல்ல வீசிக் கொண்டிருந்தது.

டீக் கடையில் உட்கார்ந்திருக்கும் ஆட்களின் முகமெங்கும் கவலையின் கோடுகள் விரவியிருந்தன. "இன்னும் தை மாசம் பொறக்க இருவது நாளிருக்கு" என்று இரண்டு பேர் பேசிக் கொண்டார்கள்.

ஆவி பறந்தது. ஊதி ஊதி உள்ளுக்குள் இறக்கினான். சுவைக்குள் மனசு இல்லை. பிழைப்புக்கு வழி தேடச் சொல்லி அரித்தது.

டீக்கடைக்காரச் சாமு ஒரு வாரத்துக்கு முன் விறகு வேண்டும் என்று கேட்டிருந்தார்.



அது ஞாபகத்துக்கு வந்தது. "ஒரு தடவை கேட்டுப் பார்க்கலாம்."

"வெறவு வேணுங்களா."

"கொண்டாயேன்."

"என்ன வெறவு?"

"காட்டுக்கருவ வேருங்க."

"ம்"

பேச்சை வெட்டிக் கொண்டு மறுவினாடியே வியாபாரத்தில் புகுந்து கொண்டார்.

"அய்யாவுக்கு என்ன இம்புட்டு வேகம்" இவனின் வேகமான நடையைப் பார்த்து மருதாயி கேட்டாள்.

"வேலைக்கு எங்கனாச்சும் போறியா?" அவன் பதிலே பேசவில்லை. எதாவது வேலைக்குப் போக வேண்டுமானால்தான் இது மாதிரி வேகமாய் நடையிருக்கும். இல்லையென்றால் அளந்து நடப்பது போல நடை அமையும். இதை வைத்தே, "ஆள் இன்னக்கி வேலைக்குப் போவுல... வேலையிருந்தா தானே போவும்." - மருதாயி புரிந்து கொள்வாள். அந்தப் புரிதலின் அடிப்படையில்தான் கேட்டாள்.

முட்ட சாம்பலை எடுத்து, பல் தேய்த்தான் திருவாரூரிலிருந்து ஒன்பது மணிச் சங்கு ஊதியது.

"சோறு போடு."

"அதுக்குள்ள என்ன?"

"வேர் பறிக்க போவணும்."

"ம்" போட்டு ஏதோ முணுமுணுத்தவளாய்ப் பழைய சோற்றைப் பித்தளைக் குண்டில் போட்டு ஊறுகாய் மிளகாயையும் ராத்திரி வைத்த குழம்பையும் கிண்ணத்தில் வைத்தான்.

சோறு ஜில்லென இருந்தது என்றாலும் சாப்பிட சாப்பிட அதன் குளுமை இதமாய் இருந்தது.

**து**ண்டை எடுத்துத் தலையில் கட்டினான். இடது தோளில் மண் வெட்டி. இடுப்பில் அரிவாள் சொருகி, தெருவின் மேற்கே போனவனை நிற்கச் செய்தது ஒரு கரகரப்பான குரல்.

"பொன்னுசாமி, எங்கே கிளம்பிட்டே?"

"வேர் பறிக்கப் போறேன்."

"சரி பெயிட்டு வா."

இத்தோடு ஜெகநாதன் மாமா பேச்சை நிறுத்திக் கொண்டார். ஒரு காலத்தில் இவரைப் பார்த்து வட்டாரமே நடுங்கியிருக்கிறது. பண்ணையார்கள் கூட வாடா போடா, தவிர்த்து, வாப்பா போப்பா என்று மரியாதை செய்திருக்கிறார்கள்.

சிவப்புக் கட்சியை ஊரில் கொண்டு நிறுவியதில் முக்கியமானவர். வலிவலம், கீழ் வெண்மணி, கேக்கரை, போன்ற ஊர்களில் பிரச்னை இருந்த கால கட்டங்களில் கட்சியில் தீவிரமாக இருந்தவர்.

போக்கிரி என்று தொடை தட்டிக் கொண்டு வந்த தெற்கத்திய ஆட்களை எல்லாம் மண்ணைக் கவ்வ வைத்தவர்.

ஆனால் இப்பொழுது நோயிலும் முதுமையிலும் தளர்ந்து போய்விட்டார்.

பொன்னுசாமி மீது இவருக்கு அதிகமான பிரியம் உண்டு. சிறு குழந்தையாக இருக்கும் பொழுதிலிருந்து இவனைத் தூக்கிக் கொஞ்சுவார். டவுனுக்குப் போய்விட்டு வரும்பொழுது "ரஸ்க்" வாங்கித் தருவார்.

பொன்னுசாமியின் அப்பா இறந்த பிறகு இவனுக்கு, இவர்தான் துணையாக நின்று கல்யாணம் நடத்தினார்.

"ஆனாலும் இந்தப் பதினைந்து வருஷத்தில் இன்னும் புள்ளையோ, குட்டியோ இல்லையென்பதுதான் இவருக்குப் பொன்னுசாமி மீது இரக்கமாய் இருந்தது.

பட்டக்கால் கடந்து வதிக்கரை நோக்கி நடந்தான். வெறுமையாய்க் கிடந்தது வதிக்கரைத் திடல். வளர்ந்திருந்த காட்டுக், கருவையையெல்லாம் ஆடி மாதமே ஆண்களும், பெண்களுமாய் அடுப்புக்கு வெட்டி வந்து விட்டார்கள். வேர் மட்டும் தான் பாக்கி. அது கூட ஒரு சில இடங்களில் படர்ந்திருக்கிறது. வேர் மட்டும் இருந்த இடத்தில் சில தளிர்கள் வளர்ந்திருக்கிறது. அதைப் பறித்து எடுத்து விற்கத்தான் போர் வீரனாய் நடக்கிறான்.

கம்பீரமாய் நடக்கும் பொன்னுசாமிக்குத் திடலின்மீது பார்வை பதிந்தது. வெறுமையாகக் கிடக்கும் திடலைப் பார்க்கும் பொழுது சோர்வு தட்டியது.

**த**ண்டலை வாய்க்காலிலிருந்து இறங்கி திடலுக்குள் புகுந்தான். வதிக்கரைத் திடல் தீவு மாதிரி தான் இருக்கிறது. மேற்குப் புறமாய் திடலைப் பிரித்து சிங்களாஞ்சேரி வாய்க்காலுக்கு வடக்கே கொஞ்சம் தள்ளி பாசனக் கண்ணி. சிங்களாஞ்சேரி வாய்க்காலையும் தண்டலை வாய்க்காலையும் இணைப்பது மாதிரி வடக்குப் புறமாய் தான் தண்டலை வாய்க்கால். தூரத்தில் நின்று பார்த்தால் அந்தரமாய் அதன் காட்சி. அருகில் மூங்கில்

"நான் நல்லா வேலை செய்யறதா மானேஜரிடம் நீங்க ஒரு வார்த்தை சொல்லக் கூடாதா ஹெட்கிளார்க் ஸார்!"

"முடியாதுப்பா! தவறான தகவல் கொடுத்ததுக்காக என்னை சஸ்பெண்ட் செய்தாலும் செய்துருவாரு!"

- உ. ராஜாஜி

காடு பச்சையற்று.

காலை வெயில் ஊமையாக எரித்தது. நாக்கு வறண்டு விட்டது. "இன்னும் ஒரு வேரு கூட பறிக்கல. அதுக்குள்ள" - அவனே சொல்லிக் கொண்டான்.

வெட்டத் தொடங்கினான். மண்ணை வாரி எடுத்தான். மண்ணுக்குள் பல வேர் முடிச்சுக்கள் ஆழமாய்ப் புதைந்திருந்தது. மண்ணை எடுத்து விடவேண்டும். அப்பொழுது தான் வேரை எளிதாக வெட்ட முடியும். மண் வாசம் பிறிட்டது.

வெட்ட வெட்ட பக்கவேர் தென்பட்டது. வெட்டினான். ஆணி வேரினைக் கண்டால் தான் எளிதாக வேரினை மேல் வெட்டி எடுக்க முடியும். வேரினைச் சுற்றி நாலா பக்கமும் வெட்டி அந்தரமாக்கியாகிவிட்டது. ஆணிவேரினை, 'சலாக் சலாக்' என அரிவாளால் போட்டான், அறுந்து போனது.

நாலைந்து வேர் பறித்தாயிற்று. மணி பன்னிரண்டுக்கு மேல் ஆகிவிட்டது. வயிறு பசிப்பது போல இருந்தது. வியர்வையில் உடம்பு நனைந்து பிசுபிசுத்தது.

வெயில் மறைந்து திடீர் இருட்டு நிலவியது. காற்றின் ஈரப்பதம் உடம்புக்கு இதமளித்தது.

துண்டால் முகத்தைத் துடைத்து உட்கார்ந்து கொண்டான்.

அந்தக் காற்றின் ஈரமும் குளுமையும் என்னவோ செய்தது. பழைய நினைவுகள் உயிர்ப்பித்தன.

பதினைந்து வருடத்துக்கு முன்பு இந்த வதிக்கரைத் திடல்... சிறப்பாக எல்லோராலும் கருதப்பட்டது. இந்தத் திடலில் இலந்தை மரம், நுணா மரம், அதிகமாய் இருக்கும். பனை, வேம்பு, விளா போன்றவையும் காணப்பட்டது. துளசியில் நாலைந்து வகை கூட இங்கிருந்ததாக ஞாபகம். இன்னும் மருந்து செடிகள்கூட வளர்ந்து செழித்த ஒரு தோட்டமாய் இருந்தது.

இலந்தை மரங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகை, நத்தை காய்ச்சி, மண்ணெய்க் காய்ச்சி, நன்னி காய்ச்சி புளிப்புக் காய்ச்சி, கார காய்ச்சி... இப்படி பத்துக்கும் மேற்பட்ட மரங்கள் இப்பொழுது நினைத்தாலும் எச்சில் சுரக்கிறது.




ஊரில் இவ்வளவு ஜனக்கட்டு இல்லை. ஆனால் இன்று எவ்வளவு வளர்ச்சி, எல்லாவற்றிலும் தாராளமயம். புகுந்து விளையாடுகிறது.

இங்கு இலந்தைப் பழம் பொறுக்க வந்த பொழுதுதான்..

அம்மாசி மகள் தனத்துக்கும் இவனுக்கும் தொடர்பு ஏற்பட்டது. அடிக்கடியானச் சந்திப்பு கூட இங்குதான் நிகழ்ந்தது.

இரண்டு பேரையும் தலையாரி பார்த்து விட, வீட்டுக்குச் செய்தி போனது. ஊரில் கூட கிசுகிசுத்துக் கொண்டார்கள். அம்மாசி, மறு பதினைந்து நாளிலேயே வட பாதியில் அக்கா மகனுக்கு தனத்தை திருமணம் செய்து விட்டார்.

இப்படியொரு காதல் நிறைவேறாமல் போனதற்குக் காரணம் இருந்தது. இருவரும் ஒரே சமூகம்தான், என்றாலும் சாதிப்பிரச்னை இருந்தது.

வடக்குத் தெருக்காரர்களும், தெற்குத் தெருக்காரர்களும் ஒரே வர்க்கமாய் நின்றாலும் சாதி சிமிழ்க்குள் அடைபட்டுக் கிடந்தார்கள்.

செத்த மாட்டை தூக்குற பயல்வோகிட்ட கொடுக்கல் வாங்கல் வச்சுக்க முடியுமா? என்று வடக்குத் தெருக்காரர்கள் கறாராக இருந்தார்கள்.

தெற்குத் தெருக்காரர்களும் ''அந்த பயல்வோ பேசுற அளவுக்கு வெச்சிக்கக் கூடாது'' என்பதில் அக்கறை காட்டினார்கள்.

அது மட்டுமின்றி பொன்னுசாமி குடும்பம் ஊரில் பட்டம் பெற்றது. இதனால் ஜெகநாதன் மாமா அறிவுரை கூறி காதலுக்கு முழுக்குப் போட வைத்தார்.

ஒரே சமூகத்தில் சண்டை சச்சரவு என்றிருந்தால் மற்ற பேருக்குத் துளிர்விட்டுப் போகும் என்று ஜெகநாதன் தீர்க்கமாய் நம்பினார்.

நினைவுக்குள் மூழ்கிக் கிடந்தவனை உலுக்கினாள் மருதாயி. கையில் தூக்கு வாளி. சில கணங்களுக்குள் நினைவுக்குள்ளிருந்து மீண்டான்.

அவளின் வரவு அவனுக்கு நம்பிக்கையையும் புத்துணர்ச்சியையும் அளித்தது.

தூக்கு வாளியைத் திறந்தான்.

பழைய சோறு, கஞ்சி, வெங்காயம் மிதந்தது. சோற்றை அள்ளி உள்ளுக்குள் ஒவ்வொரு கை சோற்றுக்கும் ஒவ்வொரு வெங்காயம். அமுதாய் இறங்கி குடல் பையை நிரப்பியது.

பறித்து கிடந்த வேரினைப் பார்த்தான் "இதுதானா?" என்று கேட்டாள்.

"ம்" என்று தலையாட்டினான்.

அவள் கேட்டதிலிருந்த வெவண்டை அவன் உணர்ந்தாலும் பதில் சொல்ல

விரும்பவில்லை.

ஓரளவுக்கு வேர் பறித்தாயிற்று. வாய்க்காலில் படர்ந்து செழித்து இருந்த கோரையை அறுத்து நகக்கி, சிறிது நேரம் உலர்த்தினான். அறுந்து போகாத பக்குவம் வந்ததும்... கட்டாகக் கட்டி தலையில் சுமந்து கொண்டான். முழுவேராக இருந்தது.

அவன் அந்த ஆயுதங்களோடு நடக்க, தெருவில் உள்ளவர்கள் பார்த்தார்கள். பீலியில் நின்ற இரண்டு பெண்கள் கண்களால் ஜாடை பேசிக் கொண்டார்கள்.

கிற்று முடைந்து கொண்டிருந்த குன்னுரா, "வெறவு அடுப்புக்கா?" என்றாள். மருதாயி பதில் பேசவில்லை. "அவ ஒரு தொன்னை செறுக்கி. நம்ம ஒண்ணு சொன்னா அவ ஒண்ணு சொல்வா."

வாசலில் வேரினைப் போட்டான். மாரியப்பன் வீட்டில் இரவல் கோடரி வாங்கி வந்தாள் மருதாயி. ஒரே இணைப்பில் இருந்த வேரினை எல்லாம் 'அக்குவேறாய்'ப் பிரித்துப் போட்டான். ஓரளவு தேறியதில் மனசு குதியம் போட்டது.

தலைச் சுமையாகத் தூக்கிக் கொண்டு போனவனைப் பார்த்து சாம்பசிவம் கேட்டார். "விக்கிறத்துக்கா?"

"ஆமா..." சுமை கனத்தது.

"நம்ம வீட்டுல போடு."

"நாளக்கி கொண்டாரேன், இது டீக்கடைக்கு." அவருக்குக் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை.

டீக்கடையில் அவ்வளவு கூட்டமில்லை. நாலைந்து பேர்கள் மட்டுமே உட்கார்ந்திருந்தார்கள். வசதியாகப் போய்விட்டது. விறகினை போட்டான். கல்லாவில் உட்கார்ந்திருந்தவர் ஏறிட்டுப் பார்த்தார். அளந்து பார்ப்பது போல பார்வை...

விறகினைப் போட்டவன். "வாங்க" என்றான். "பார்த்தார். ஒரு கணம் யோசித்தவராய்...

"இருவத்தஞ்சி வாங்கிக்க."

"அம்பது ரூவா பெரும்" பதறிப்போய் கெஞ்சும் தொனியில் கேட்டான்.

"இஷ்டம் இன்னா தா, இல்லாட்டி தூக்கிட்டுப் போ", அறுத்துப் பேசினார்.

கோபம் சுருக்கென்று வந்தது என்றாலும் வெளிக்காட்ட முடியவில்லை.

"சரி முப்பது தாங்க."

பதிலே பேசவில்லை அவர்.

டீயைக் குடித்தான்.

அவர் இரண்டு பத்து ரூபாய் நோட்டுகளை நீட்டினார்.

ஒரு கணம் வாங்க யோசித்தான்.

"நாளக்கி வாங்கிக்க."

நடக்கவே திராணியற்றது போல ஒரே வலி. தொண்டைக்குள் காந்தல். நடந்தான்.

சூரியன் நாலு மணியிலிருந்தே இல்லை. பொழுது மெல்ல இருட்டத் தொடங்கியது.

வெளித் திண்ணையில் உட்கார்ந்திருந்தான். மருதாயி மண்ணெண்ணெய் விளக்கை ஏற்றினாள்.

பூவரசு மரத்துக்கு நார்த்தைக் குருவிகள் திரும்பிக் கொண்டிருந்தன. வீடு திரும்பல் என்ற நிகழ்வினையும் அவை எழுப்பிய ஓசையையும் கேட்டுக் கொண்டிருந்தான்.

மருதாயி உள்ளே வேலைகளில் ஈடுபட்டிருந்தாள். சின்னையன் வீட்டுக்காரி சின்னப் பொண்ணு, "அக்கா" என்று குரல் எழுப்பிக் கொண்டு வந்தவள், இவனைக் கண்டதும் சற்றுத் தயங்கி உள்ளே நுழைந்தாள். உள்ளே காதோடு காதாக பேசிக் கொண்டார்கள் இருவரும்.

நார்த்தைக் குருவிகளின் கூட்டத்தோடு காகம் ஒன்று கலந்து குரல் எழுப்பியது.

மருதாயி இவனிடம் வந்து ஒரு சிரிப்பு சிரித்தாள்.

"என்ன?" பார்வையில் கேட்டான்.

"சின்னப் பொண்ணு வூட்டுல ராத்திரியிலிருந்து பட்னியாம்."

மருதாயின் குரல் தேய்ந்து ஒலித்தது.

இடுப்பு வேட்டியிலிருந்து உருவி எடுத்து மருதாயியிடம் நீட்டினான்.

சின்னப் பொண்ணு செருமுவது தெளிவாய்க் கேட்டது.

காகம் கரைந்து கொண்டே பறந்தது. ●

## வீட்டில் மருத்துவமனை!



உங்கள் உறவினர் யாரேனும் மருத்துவமனையில் இருக்கிறாரா? அவரைப் பார்க்க வேண்டுமா? மருத்துவர் அனுமதித்தால் அவர் அறையில் சிறிய கேமராவைப் பொருத்தி, இன்டர்நெட் ஈமெயில் மூலம் அவரை உங்கள் கம்ப்யூட்டரில் பார்த்துக் கொள்ளலாம். இந்த வசதி மேல்நாடுகளில் பல மருத்துவமனைகளில் நடைமுறையில் உள்ளது!

- பாரீஸ் பார்த்தசாரதி

# அஞ்சாதே, இதயமே!



• கிறிஸ்டர்சன்

தினமும் காலை வேளையில் கார் பார்க்கிலிருந்து கனஜோராக நடந்து காப்பி கிளப்புக்குள் நுழைந்து தன் சக தாத்தாக்களோடு அளவளாவுகிறாரே டாம் கிறிஸ்டர்சன்; அவருக்கு வயது எழுபத்தொன்று. அடுத்த மாதம் அவரது மண வாழ்வின் 55வது ஆண்டு நிறைவு வேறு வருகிறது. படு உற்சாகமாகத் தெரியும் இவர் 'சென்கக்கி'யின் 'சென்ட்ரல் சிட்டி'யைச் சேர்ந்தவர்.

இதில் என்ன விசேஷம் என்கிறீர்களா? இருக்கிறது. டாம் கிறிஸ்டர்சன்னுக்கு இதயமே கிடையாது! அதாவது சாதாரண மனிதரைப் போல சதையும், இரத்தமும் நரம்புகளுமான இதயம் கிடையாது...! பின்னே...?

அவருக்கு 'அபியோகார்' (ABIOCOR) என்னும் பிளாஸ்டிக்கும் டைட்டானியத்திலுமான செயற்கை இதயம் பொருத்தப்பட்டு ஓராண்டு நிறைவடையப் போகிறது. அதைக் கொண்டாட இருக்கிறார் அவர்.




• இப்படித்தான்...

"மிஞ்சிப் போனால் ஆறு மாதம் வரைதான் தாங்கும் என்று எதிர்பார்த்தேன். இத்தனை காலம் வரும் என நினைக்கவில்லை' என்கிறார் டாம் கிறிஸ்டர்சன் மகிழ்ச்சியுடன்.

'போன செப்டம்பர் 13ம் தேதி பொருத்தப்பட்ட பின்பு ஒரு 'லப்-டப்'பைக் கூடத் தவறவிடவில்லை இந்த 'அபியோகார்' என்கிறார்கள் அதன் தயாரிப்பாளர்களான 'அபியோமெட் இங்க், டான்வர்'.

இதுவரை செயற்கை இதயம் பொருத்தப்பட்ட எழுவரில் அதிக நாட்கள் (620 நாட்கள்) இருந்தவர் வில்லியம் ஸ்க்ரோடர். இவருக்குப் பொருத்தப்பட்டது ஜார்விக் - 7 என்னும் கருவி.



• அபியோகார்

'பழைய மெக்கானிக்கல் இதயமான ஜார்விக்.7ஐ விட அபியோகார் மேம்பட்டது. ஒயர்களோ, டியூப்களோ இன்றி பாட்டரியின் சக்தியில் இயங்கும் அபியோகார், இந்தத் துறையில் ஒரு மைல்கல். டாம்கிறிஸ்டர்சன்னின் இந்த ஓராண்டு ஆரோக்கிய வாழ்வு 'அபியோகார் சாதனத்தின் மகத்தான வெற்றி' என்கிறார் அபியோமெட் நிறுவனத்தின் தலைவர் டாக்டர் டேவிட் லெடர்மேன்.

ஆரம்பத்தில் அபியோகார் பொருத்தப்பட்ட முதல் நோயாளி ஆபரேஷன் மேஜையிலேயே இறந்தார். மூன்றாவது முயற்சியில் ஜேம்ஸ் குவின் 10 மாதங்கள் வரை நன்றாகவே வாழ்ந்தார்.

அனேகமாக 2004ல் விற்பனைக்கு வரத் தொடங்கும் என்கிறார் அபியோமெட் கம்பனியின் எட்வர்ட் வெர்ஜர்.

இன்னும் சில ஆண்டுகளில் இதய நோயாளிகள் அச்சப்படவே தேவையில்லை என்ற நிலை வந்துவிடும் என்று உறுதியாகக் கூறுகிறது மருத்துவ விஞ்ஞானம்.

- விஷ்வக்ஸேனன்

## காதில் விழுந்தவை :

# வெற்றிவேலின் அறிவாலய கலாட்டா!

? அ.தி.மு.க.வில் 'மாநகராட்சி' வெற்றிவேல் இணைந்த போது அவருடன் காங்கிரஸ் கவுன்சிலர்கள் தவிர இரண்டு தி.மு.க. கவுன்சிலர்களும் அம்மாவோடு இணைந்தார்கள். அவர்கள் இணைந்த ஒன்றிரண்டு மணி நேரத்தில், புரசைப் பகுதி தி.மு.க. பிரமுகர்கள் அந்தக் கவுன்சிலர்களை "அன்புடன்" அறிவாலயத்துக்கு அழைத்து வந்து விட்டனர். இதைக் கேள்விப்பட்ட வெற்றிவேல், "உடனடியாக அந்த கவுன்சிலர்களை விடாவிட்டால் முந்நூறு பேருடன்,



அறிவாலயத்தின் முன் திரளப் போவதாகச் சொல்ல, தி.மு.க. பிரமுகர்கள் மேலிட ஆலோசனையின் பேரில் அந்தக் கவுன்சிலர்களை உடனே விட்டு விட்டனராம்.



? சில நாட்களுக்கு முன்னர் பா.ஜ.க. தலைவர் கிருபாநிதி, நெசவாளர் பிரச்னை தொடர்பாகக் காஞ்சிபுரம் சென்ற போது அப்படியே ஜயேந்திரரையும் நமஸ்கரித்து மரியாதை செலுத்தச் சென்றார். அவர் அறைக்குள் நுழைந்தவுடன் "தலைவர் வந்திருக்கிறாரே... என்ன விசேஷம்" என்று ஜயேந்திரர் சிரித்துக் கொண்டே கேட்க, கொஞ்சம் வெட்கப்பட்டுக் கொண்டே அவரை நமஸ்கரித்து எழுந்தார் கிருபாநிதி. அதற்கு முதல் நாள் காதி விற்பனை நிலைய நிகழ்ச்சியில் கலந்து கொண்ட ஜயேந்திரர், கதர், மற்றும் கைத்தறித் துணி அணிய வேண்டியதன் அவசியத்தைப் பற்றி ஒரு குட்டிப் பிரசங்கமே நிகழ்த்தினார். "கருணாநிதி ஒரு பச்சைத் தமிழர்... எனக்குத் தெரிந்து கைத்தறி வேட்டி சட்டை தவிர வேறெதுவும் அவர் அணிந்ததில்லை. அதுபோன்று எல்லோரும் அணியத் துவங்கினால் நெசவாளர்கள் அவதிப்பட வேண்டிய அவசியமேயில்லை" என்றார் ஜயேந்திரர்.

? சுப்ரீம் கோர்ட்டில் தற்சமயம் நடந்து வரும் டான்ஸி மேல்முறையீடு வழக்கில் மிகவும் நம்பிக்கையோடு காத்திருக்கிறது தி.மு.க. அதன் சட்டத்துறை செயலாளர் ஆர்.எஸ். பாரதி, ராஜ்யசபா உறுப்பினர் சண்முகசுந்தரம், கிரிமினல் வழக்கறிஞர் நடராஜன் ஆகியோர் தினசரி சந்தித்து இரண்டு மணி நேரம் விவாதித்து, வாதங்களைத் தொகுத்தனர். அவ்வப்போது கலைஞரின் ஆலோசனையும் பெறப்பட்டது. பா.ஜ.க. செயலாளர் அருண் ஜெட்லியும் சில சட்ட நுணுக்கங்களைத் தெரிவித்தாராம். இதற்கிடையில் தில்லியில் தமிழ்நாடு அரசின் சிறப்புப் பிரதிநிதியாய் இருக்கும் வி.பி. ராஜனை எடுத்துவிட்டு அந்தப் பொறுப்புக்கு ஓர் அரசியல்வாதியை (மைத்ரேயன்?) போட அம்மா முடிவு செய்திருக்கிறாராம்!

- சஞ்சயன்

வாஸந்தி

# 25

# பொய்யில் பூத்த நிஜம்

உள்ளே அப்பாவும் அம்மாவும் ஏதோ தர்க்கம் செய்து கொண்டிருந்தார்கள். சரளைக் கற்கள் உருளுவதுபோல என்ன வார்த்தைகள் என்று புரியாத அளவுக்கு அடிக்குரலில் பேசுவது அவனுக்கு விநோதமாக இருந்தது. ஆயாசத்தை ஏற்படுத்திற்று. அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்று தெரிந்து கொள்வதில் அவனுக்கு ஆர்வமில்லை. முன்பெல்லாம் அக்கம் பக்கத்துக்குக் கேட்டு விடுமோ என்று அவன் பயப்படுவான். அந்த அளவுக்கு அப்பா பெருங்குரலில் சண்டை போடுவார். அம்மா பதிலுக்குக் கத்துவாள். ஆறு கிரவுண்டுக்கு மத்தியில் கட்டப்பட்டிருந்த பெரிய வீடு என்பதால் அவர்களது சண்டை அக்கம் பக்கத்துக்குக் கேட்காது என்று அவர்கள் நினைத்திருக்கலாம். ஆனால் அவனுக்குக் கூசும். டிரைவருக்குக் கேட்கும். சமையல்காரிக்கும் கேட்கும் – வேலைக்காரார்களுக்கும் கேட்கும். அவர்கள் சண்டை போடும்போது தோட்டக்காரன் மாணிக்கம் அலுப்புடன் தலையசைத்துக் கொண்டு ஏதோ முணுமுணுத்தபடி வேலை பார்ப்பதை அவன் கவனித்திருக்கிறான். ஆனால் வேலை பார்ப்பவர்கள் எல்லாம் சம்பளம் வாங்கும் கடனுக்காக வாயை மூடிக் கொண்டு அது காதிலேயே விழாததுபோல நடந்து கொள்வார்கள். அல்லது கணவன் மனைவி சண்டை போடுவது வீட்டுக்கு வீடு நடப்பதுதான் என்று நினைத்திருப்பார்கள். இப்பொழுது பெரிய குரலில் தர்க்கம் செய்வது குறைந்திருப்பது சில சமயங்களில் அவனுக்கு வியப்பை ஏற்படுத்துகிறது. அவனிடம் அப்பா முன்பு கோபத்தைக் காண்பிப்பாரே தவிர, பாசத்தைக் காண்பித்ததே இல்லை, ஒரு தகப்பன் மகனிடம் அப்படித்தான் நடந்து கொள்ள வேண்டும் என்று நினைத்தவர் போல. அம்மா அதற்கு சேர்த்து வைத்து அவன் மேல் பாசத்தைப் பொழிவாள். புருஷனிடம் கிடைக்காத பிரியத்துக்கு ஈடுகட்டப் பார்த்ததுபோல. இப்போது அப்பா அவனைப் பார்க்கும்போது ஒரு மென்மை கண்களில் தெரிகிறது. சாப்பிட்டியா தூங்கினியா என்று கேட்கையில் குரல் கனிந்து போகிறது. ஆனால் அம்மாவிடம் இன்னமும் அவர் நெருக்கத்தைக் காண்பிக்கவில்லை. அம்மாவும் அவருக்குப் பழக்க தோஷத்தாலேயே பணிவிடை செய்வது போலிருந்தது. இதைவிட பொருத்தமற்ற ஜோடி இருக்க முடியாது. ஆனாலும் சேர்ந்து வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

இதைப் பற்றி வெளியில் பேச அவனுக்கு எப்பவுமே கூச்சம். ஒரு நாள் அவனுடன் கூடப் பள்ளியில் படித்த கோபாலன், 'வீட்டிலே நிம்மதியா படிக்கவே முடியறதில்லே. அப்பாவும் அம்மாவும் போடற சண்டையிலே!' என்று அலுத்துக் கொண்டபோது இது சகஜமானது என்று

மற்றவர்கள் ஆமோதித்தார்கள். தியாகு என்ற பையன், தன் வீட்டில் அப்படிப்பட்ட சண்டையைப் பார்த்ததேயில்லை என்று சொன்னபோது, அவன் பொய் சொல்கிறான் அல்லது அது அபூர்வ கேஸ் என்று முடிவு கட்டினார்கள்.

அவன் எழுந்தான். இப்போது பேச்சுக் குரல் அடங்கியிருந்தது. போர் நிறுத்தக் காலமாக இருக்க வேண்டும். அவனுக்குச் சிரிப்பு வந்தது. பல் தேய்த்து முகம் கழுவி நிமிரும்போது எதிர்பாராமல் அன்று சுதாகர் வீட்டில் கண்ட காட்சி நினைவுக்கு வந்தது. அது வெகு நேரத்துக்கு அன்று மனத்தை உலுக்கிற்று. அவர்கள் எல்லோருடனும் அமர்ந்து ஏதோ ஒரு மூன்றாந்தர சினிமா பார்த்தபோது, இடையிடையில் மீரா அளித்த விமர்சனத்துக்குச் சிரித்தபோது, பிறகு அவர்களுடன் ஓட்டலுக்குச் சென்று சாப்பிடும்போது, காட்சி கூடக் கூட வந்தது. தான் ஒரு குழந்தைக்குப் பவுடர் போடுவது போன்ற பிம்பம் உள்ளே தோன்றும் போதெல்லாம் மனசு விம்மிற்று. ஆர்ப்பரித்தது. காரணம் புரியாமல். அவன் ஊடுருவிப் பார்க்க முனைந்தான், வேறு ஏதாவது நினைவு வருமா என்று. கண்ணாமூச்சி விளையாட்டுப்போலத் தொட்டுவிட்டு அது ஓடிவிட்டது. ஒரு துப்பு துலக்குபவன் போல அதைப் பின்தொடருவது எப்படி என்கிற தவிப்பு அவனை சதா வருத்தியது. மீண்டும் அதே காட்சியைப் பார்த்தால் நினைவுக்கு வருமோ? அதற்கு ஆசைப்படுவது அபத்தம். குழந்தைக்குக் குளிப்பாட்டும் நேரம் பார்த்து எப்படி சுதாகர் வீட்டுக்குச் செல்வது?

காப்பி குடிக்க அவன் சாப்பாட்டு அறைக்குச் சென்றபோது, அதை அடுத்த ரேழியில் இருந்த ஊஞ்சலில் யாரோ உட்கார்ந்திருந்தார்கள். அம்மா அவருடன் ஏதோ தீவிரமாகப் பேசிக் கொண்டிருந்தாள். அவர்களைத் தவிர்ப்பதற்காக சமையல்கார அம்மாள் கொடுத்த காப்பியை வாங்கிக்



கொண்டு அவன் ஓசைப்படுத்தாமல் தன் அறைக்குத் திரும்புகையில், வந்தவர் சொல்லிக் கொண்டிருந்தார்.

"எல்லாம் ஆண்டவன் சித்தம்னு வெச்சுக் குங்க. போன முறை வந்தப்ப அண்ணன் போட்ட சப்தத்தைப் பார்த்து பயந்து போனேன்.. எத்தனைக் கடுமையா என் மகன் செத்தாச்சுன்னாரு."

"உஷ், மெள்ள பேசுங்க. அவன் காதிலே விழப் போகுது" என்றாள் அம்மா.

அவன் நின்றான்.

"அண்ணன் இப்ப சமாதானமாயிட் டாங்களா?"

"கோபப்பட வேண்டியவன் அவன். அவனே மறந்துட்டபோது இவருடைய வீம்பு எத்தனை நாளைக்கு இருக்கும்?"

அவன் தன் அறைக்குச் சென்றான்.

சகுந்தலாவை மறந்ததைவிட இந்தப் புதிர் அவனை அதிகமாகத் துன்புறுத்திற்று. ஏதோ ஒரு தணுத்துப் போன எரிமலையின் மீது உட் கார்ந்தது போல. அது என்று வேண்டுமா னாலும் வெடிக்கலாம் என்று அச்சமேற்பட் டது. கோபப்பட வேண்டியவன் அவன். வீட்டை விட்டு வெளியேறும் அளவுக்கு – மகன் செத்தாச்சு என்று சொல்லுமளவுக்கு. அப்பாவா அப்படிச் சொன்னார்? சுத்தமாக நம்ப முடியவில்லை. அவனுக்குச் சுறுசுறு வென்று மண்டையில் ரத்தம் ஏறுவது போலி ருந்தது. அவன் தலையைப் பிடித்துக் கொண்டு நாற்காலியில் அமர்ந்தான். செத்திருந்தால் நிம்மதியாக இருந்திருக்கும் என்று தோன்றிற்று. அவன் இறந்துபோன துக்கம் ஒன்றோடு சகுந் தலா சமாதானமாகியிருப்பாள். இப்படி இரண்டும் கெட்டான் மறதியுடன், அது விளைவித்த குற்ற உணர்வுடன் அவன் சொச்ச வாழ்வைக் கழித்திருக்க வேண்டியதில்லை.

"என்னடா ராஜா, உடம்பு சரியில்லையா என்ன?"

காமாட்சியின் குரல் கேட்டு அவன் நிமிர்ந் தான்.

"ஒண்ணுமில்லையே" என்றான்.

"காப்பி குடிச்சியா?"

"குடிச்சேன்."

"நீ காப்பி குடிக்க வந்ததியே நா கவனிக்க வில்லை."

"நீங்க யார்கிட்டயோ சுவாரஸ்யமா பேசிக் கிட்டிருந்தீங்க."

காமாட்சி ஒரு விநாடி அவனை உற்றுப் பார்த்தாள். பிறகு தன்னைச் சமாளித்துக் கொண்டு "நம்ம மணியக்கார் ஜம்புலிங்கம்டா அது. நீ வந்திருக்கேன்னு கேள்விப்பட்டு கிரா மத்திலேந்து வந்திருக்காரு. சித்த வர்றியா?"

அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"போர்ஷன்ல குடி வர்றவங்ககிட்ட வீட்டுக்காரங்க என்னென்னதான் கேக்கற துன்னு ஒரு வரைமுறையே இல்லாமல் போச்சுங்க."

"உங்ககிட்ட என்னதான் அப்படிக் கேட் டாங்க?"

"தினமும் குளிப்பீங்களான்னு கேக்கறாரு சார்!"

– சீர்காழி வி. ரேவதி

"அம்மா, ப்ளீஸ் காலை நேரத்திலே என்னைத் தொந்திரவு செய்யாதீங்க. எனக்கு ஆபீசுக்குத்தயாராகணும்" என்றான் அவன் இலேசான எரிச்சலுடன்.

குடும்ப விஷயத்தையெல்லாம் ஒரு கிராமத்து ஆளுடன் பேசுகிறாள் என்பது மெல்லிய கோபத்தை ஏற்படுத்தியது.

"என்னடா இது. நம்ம குடும்பத்துக்கு எத் தனை வருஷமா பழக்கம். உன்னைப் பாக் கணும்னே வந்திருக்காரு. ரெண்டு நிமிஷம் பார்த்திட்டுப் போயேன்."

அவன் செல்லாவிட்டால் தனக்குத் தோல்வியாக அவள் சங்கடப்படுவாள் என்ற நினைப்புடன் அவன் தயங்குகையில், சமையல் கார அம்மாள் வாயிற்படியில் நின்றிருந்தாள்.

"என்ன வேணும்?" என்று காமாட்சி அவளை அதட்டினாள்.

"மணியக்காரரைச் சாயங்காலமா வரச் சொல்லி அனுப்பிச்சுட்டதா ஐயா சொல்லச் சொன்னாங்க."

"ஓ, சரிதான் நீ போ" என்றாள் காமாட்சி விறைப்புடன்.

"அப்பா வாழ்க!" என்று அவன் சிரித்தான்.

காமாட்சியின் முகம் மாறிற்று. "ஜம்புலிங் கத்தை உக்காத்தி வெச்சுப் பேசினாலே அவருக் குப் பத்திக்கிட்டு வரும். சரி நீ தயாராகு போ."

"அம்மா!" என்றான் அவன்.

"என்ன?"

"அந்த ஆள் சொன்னதை நா கேட்டேன்."

காமாட்சியின் முகத்தில் மெல்லிய கலவரம் படர்ந்தது.

"என்ன கேட்டே?"

"என் மகன் செத்தாச்சுன்னு அப்பா சொல்ற அளவுக்கு என்ன நடந்தது?"

காமாட்சிக்கு உடனடியாகக் கண்களில் நீர் நிறைந்தது. அருகில் வந்து அவன் கன்னத்தை வருடினாள்.

"நா பண்ணின பாவம்டா, உங்கப் பாவுடைய கோபத்தைப் பத்தித் தெரியாதா? நாக்கிலே நரம்பில்லாம வார்த்தை வரும். இப்ப அதெல்லாம்தான் பழங்கதையாப் போச்சே? அதை ஏன் கிளர்றே? அது ஞாபகம் வராத




தாலே ஒண்ணும் நஷ்டமில்லே. நல்லதுன்னு நினைச்சுக்க. இப்ப காலை வேளையிலே என் மனசைக் கலங்கடிக்காதே ராஜா."

அம்மா அவன் பதிலுக்குக் காத்திராமல் வெளியே சென்றாள். அவன் யோசனையுடன் எழுந்தான். எதற்காகவா இருந்தாலும் அது ஒரு அசிங்கமான சண்டையாகப் பரிணமித்திருக்க வேண்டும். உறவு முறியும் அளவுக்கு. அது ஒரு அபத்தமான காரணமாகவும் இருந்திருக்கலாம். அம்மா சொல்வதுபோல அதைத் தெரிந்து கொள்வதில் இப்போது அர்த்தமில்லை என்று அவன் உணர்ந்தான். ஆனால் அதற்கும் அதற்குப் பிறகு தில்லியில் தான் வாழ்ந்த வாழ்விற்கும் தொடர்பு இருக்க வேண்டும். கணப்பொழுது ஞாபகச் சிலிர்ப்பில் அறுபட்ட இழைகள் ஒன்று சேரக் கூடும்.

அவன் குளிக்கும்போது டெலிபோன் ஒலித்தது. அவன் அறையிலிருந்த கார்ட்லெஸ் ஃபோனை எடுத்து காமாட்சி பேசுவது கேட்டது. 'அவன் குளிச்சிட்டிருக்கான். அப்புறமா பண்ணுங்க. இப்ப ஆபீஸ் போகிற அவசரத்திலே இருக்கான்.' அம்மாவின் குரல் சிநேகிதமில்லாமல் ஒலித்தது. குளித்து முடித்து அவன் உடையணிந்தபின் அறைக்கு வெளியே வந்து 'யாரும்மா ஃபோன்?' என்றான்.

"ஃபோனா எந்த ஃபோன்?" என்றாள் காமாட்சி.

"நா குளிச்சுக்கிட்டிருக்கேன்னு யார்கிட்டேயோ சொல்லல்லே?"

"ஓ அதுவா?" என்றபடி காமாட்சி அருகில் வந்தாள். "யாரோ மீராவாம்."

"ஓ, ஏன் சொல்லல்லே?"

"மறந்து போச்சு. யாரு அது?"

"என் ஃபிரெண்டோட தங்கச்சி."

"சரிதான்."

காமாட்சியின் கண்களில் சந்தேகம் நிழலாடுவதைக் கண்டு அவன் தனக்குள் சிரித்துக் கொண்டான். அறைக்குச் சென்று சுதாகரின் வீட்டு நம்பரைச் சுழற்றினான். மீராவே எடுத்தாள்.

"ஹலோ! நீங்க ஆபீசுக்கு அவசரமாக் கிளம்பறதா சொன்னாங்க உங்க அம்மா!"

"யார்கிட்ட எந்த பதிலைச் சொல்லணும்னு எங்கம்மாவுக்குத் தெரியாது" என்றான் அவன். "காலங்கார்த்தாலே கிராமத்திலேந்து ஒரு வழக்கைத் தலை மணியக்காரர் வந்திருந்தார். அவரைப் பார்க்க நேரமில்லே, ஆபீசுக்குப் போற அவசரத்திலேன்னேன். அம்மா உங்களையும் அவரோடு சேத்துட்டாங்க!"

அவள் பெரிதாகச் சிரித்தாள். "தொந்திரவு பண்ணறவளா என்னை நினைச்சாங்க போல இருந்தது!"

"நா அப்படி நினைச்சாத்தான் நீங்க கவலைப்படணும். என்ன விஷயம் சொல்லுங்க."

"இன்னிக்கு லஞ்ச் சாப்பிடப் போகலாமா? இன்னிக்குக் கானிமரா லைப்ரரிக்குப் போகணும் காலையிலே. அங்கே ஒரு மணி வரைக்கும் இருப்பேன். பக்கத்திலேதானே இருக்கு உங்க ஆபீஸ்? சுதாகரைக் கூப்பிட்டேன், அவன் வேற ஏதோ லஞ்சுக்குப் போகணுமாம். நீங்க ஃப்ரீயா?"

"ஃப்ரீதான். ஆனா நீங்க அவன் வராததுக்கு பதிலா என்னைக் கூப்பிடறதுதான் உதைக்குது."

அவள் மீண்டும் கிண்கிணிச் சிரிப்பு சிரித்தாள். "சாரி, அப்படியா சொன்னேன்? உங்களுக்காகவே கூப்பிடறேன். வர்றீங்களா?"

'வித் ப்ளெஷர், தாங்க்ஸ்' என்றான் அவன். "ஒண்ணரை மணிக்குள்ளே வந்துருவீங்களா?"

"ஒண்ணேகால்!" என்றாள் அவள். ஃபோனைக் கீழே வைத்தபோது அதரங்களில் புன்னகை அமர்ந்திருந்தது. வீட்டில் அம்மா அப்பாவுடன் அதிகம் பகிர்ந்து கொள்ள முடியாத இறுக்கத்தில் இளமை துள்ளும் மீராவுடன் பேசுவது உற்சாகத்தை ஏற்படுத்தியது. இரண்டு மூன்று முறை அவள் கானிமரா லைப்ரரிக்கு வந்த சமயத்தில் அலுவலகத்துக்கு வந்து சுதாகருடனும் அவனுடனும் அரட்டை அடித்து விட்டுப் போவாள். அவள் வரும்போதெல்லாம் புதிய காற்று வீசுவது போல, விடாத மழைக்கு நடுவில் அடிக்கும் பளீர் வெய்யிலைப் போல அவனுக்குத் தோன்றும். அதென்ன உற்சாகம். அதென்ன சிரிப்பு. இன்னும் பத்து நாட்களில் ஊருக்குக் கிளம்பிவிடுவாள் என்று சுதாகர் நேற்று சொன்னான். மெல்லிய ஏமாற்றம் ஏற்பட்டது. மதியத்துக்குச் சாப்பாடு கட்டித் தரவேண்டாம் என்று அம்மாவிடம் சொன்னபோது, வெளியே சாப்பாடா என்றாள் அவள். 'ஆமாம்' என்றான் அவன் சுருக்கமாக, அவள் பார்வையில் நிழலாடிய சந்தேகத்தை கவனிக்காமல்.

அலுவலகத்தில் வேலை விஷயமாக ஏதோ பேச சுதாகர் அவனைப் பார்க்க அவனது கேபினுக்கு வந்திருந்தான். கிளம்பும் முன் ஞாபகம் வந்தவன் போல் கேட்டான்.

"மீரா உன்னை லஞ்சுக்குக் கூப்பிட்டிருக் காளாமே?"

"ஆமாம்" என்று ராஜா புன்னகைத்தான். 'நீ வரல்லேன்னியாம். உனக்குப் பதிலா நான், அவங்களுக்குப் பேச ஆள் தேவைன்னு நினைக்கிறேன்!"

"கரெக்ட்! என்று சுதாகர் சிரித்தான். "பேசியே நம்பளைக் கொன்னுடுவா!"

"அத்தனை உற்சாகமான பொண்ணை நா பார்த்ததில்லே. அவங்களோடு உற்சாகம் தொத்திக்கிற உற்சாகம்."

சுதாகர் ஏதோ யோசனையுடன் தலை யசைத்தான். 'ஆமாம் அவ ஒரு அதிசயமான பெண்' என்றான். 'வெல், ஆல் தி பெஸ்ட்!' என்று புன்னகைத்துவிட்டுச் சென்றான்.

ராஜா அவசரமாக வேலையை முடித்து விட்டு மீராவுக்காகக் காத்திருந்தான். அவள் சொன்னபடிக்கு ஒன்று அடித்துப் பதினைந்து நிமிஷத்துக்கு வந்து நின்றாள், பிரகாசமான அகலப் புன்னகையுடன். இன்று ஸ்கர்டும் ப்ளவுசும் அணிந்து சின்னப் பெண்ணைப் போல இருந்தாள்.

"கரெக்டா வந்துட்டீங்களே!" என்று அவன் பாராட்டினான். அவள் சிரித்தாள்.

"வயத்திலே மணி அடிக்குதாக்கும். வாங்க போகலாம்."

"எங்கே போகலாம்?"

"உங்ககிட்ட வண்டியிருந்தா அதிக சந்தடி யில்லாத ஒரு இடத்துக்குப் போகலாம்."

"இருக்கே, வாங்க."

அவனுக்குப் பரிச்சயமில்லாத ஒரு புதிய ஓட்டலின் பெயரைச் சொல்லி வழியையும் தெரிவிக்க, பழனி அங்கு அழைத்துச் சென் றான். "உங்களுக்குப் பஞ்சாபி சாப்பாடு பிடிக் குமா?" என்றாள் அவள்.

"பிடிக்கும்' என்றான் ராஜா. "இங்கே நல்ல அசல் பஞ்சாபி சாப்பாடு கிடைக்கும் - மக்கய்கி ரோட்டி, ஸர்ஸூங்கா ஸாக், டாபா ஸ்டைல்!"

அவன் சலனமில்லாமல் "எதுவாயிருந் தாலும் எனக்கு சரிதான். சாப்பாட்டை விடப் பேச்சுத்தான் முக்கியம்" என்றான்.

அவள் சிரித்தாள். "நா பேச ஆரம்பிச்சதும் அபிப்பிராயத்தை மாத்திப்பீங்க."

அவன் பதில் பேசாமல் புன்னகையுடன் அவளைத் தொடர்ந்தான். எளிமையான உள் அலங்காரத்துடன் ஒரு வீட்டை உணவகமாக மாற்றியிருந்தார்கள். வட இந்திய இளைஞர்கள் சமையற்கட்டில் சமையலில் ஈடுபட்டிருந் தார்கள். உள்ளே அதிகக் கூட்டமில்லை. ஒரு ஒதுக்குப்புறமான மேஜைக்குச் சென்று இரு வரும் அமர்ந்தார்கள். அவனுடைய ஒப்புத லையும் கேட்டுக் கொண்டு அவள் சோள ரொட்டிக்கும், கடுகுக் கீரை மசியலுக்கும், தயிர்ப் பச்சடிக்கும் ஆர்டர் கொடுத்தாள். தாகம் தணிக்க முதலில் வந்த ஜல்ஜீரா பானத்தை சுவைத்தபடி அவள் புன்னகை யுடன்,

"எப்படியிருக்கீங்க?" என்றாள். 'அஞ்சு வருஷ ஞாபக நஷ்டத்துக்குப் பழகிட்டீங்களா?"

"பழகிட்டு வரேன்" என்றான் அவன் மெல்ல.

"கொஞ்சம்கூட ஞாபகம் வர்றதில்லையா?"

அவன் சிறிது தயக்கத்திற்குப் பின் "இல்லே" என்றான்.

"எனக்கு அந்த மாதிரி ஒரு மறதி வந்தா சந்தோஷப்படுவேன்!" என்றாள் அவள் மெலி தாகப் புன்னகைத்து.

## ஃபோட்டோ ஷாட்!

பிரஸ் இன்ஸ்டிடியூட் ஆஃப் இந்தியா நடத்திய கடந்த ஆண்டுக்கான செய்தித்தாள் புகைப் படப் போட்டியில் பரிசு பெற்ற மற்றும் பங்கேற்ற புகைப்படக் கண்காட்சி தரமணி செய்தித்தாள் மேம் பாட்டுக்கான ஆராய்ச்சிக் கழகத்தில் நடந்தது.



'இந்து' நாளிதழின் ஆசிரியர் ரவி துவக்கி வைத்த இக் கண்காட்சியில் பல புகைப்படங்கள் மயிர்க்கூச்செரிய வைத்தன. இந்தியா முழுவதுமிருந்த



அவன் திடுக்கிட்டு அவளைப் பார்த்தான். "வாட் டு யூ மீன்?" அவள் முகத்தில் வழக்க மான உற்சாகம் இல்லை. ஆனால் அதரங்களில் புன்னகை மறையவில்லை. அவள் சாதாரண மாகப் பேசும்போது புன்னகையுடனேயே பேசி னாள். டிரைவருடன், உணவகத்து பேரருடன், – அவளுடைய அதரங்களின் அமைப்பே அப்படி என்று தோன்றிற்று.

"உங்களைப் பார்த்தா எப்பவும் உற்சாகமா இருக்கீங்க!"

அவள் சிரித்தாள். 'உற்சாகமா இருக்கிறது ஒரு தெரபி!'

"அப்ப நடிக்கிறீங்களா?"

"சேச்சே. நடிப்பு இல்லே அது. பழக்கம்."

"பழக்கப்படுத்திக்கிட்டா உற்சாகம்

வரும்ங்கிறீங்க."

"கண்டிப்பா" என்று அவள் உற்சாகமாகச் சிரித்தாள்.

"பின்னே எதுக்கு இப்ப மறதி வந்தா தேவலேன்னு நினைக்கிறீங்க?"

"குற்ற உணர்வு இல்லாம இருக்கும். உற்சாகம் என்கிற பழக்கம் நிஜமாக மாறும்."

அவன் வியப்புடன் அவளைப் பார்த்தான். மறந்ததாலேயே தனக்குக் குற்ற உணர்வு ஏற்படுவது, இவளுக்குப் புரியாது.

"ஏன் குற்ற உணர்வு?"

"ஏன்னா," என்றாள் அவள் நிதானமாக, புன்னகையுடனேயே. 'ரெண்டு வருஷத்துக்கு முந்தி நா ரொம்ப விரும்பிய என் சினேகிதன் காணாம போயிட்டான். அதுக்காக நான் துக்கம் காக்காம எப்படி உற்சாகமா இருக்கலாம்?"

"காணாம போயிட்டானா? அப்படீன்னா?"

"ஒரு நாள் வேலைக்குப் போனவன் திரும்பி வரல்லே. எங்கே போனான், அவனுக்கு என்ன ஆச்சு, ஒரு விவரமும் இன்னி வரைத் தெரியல்லே."

"என்ன வேலை?"

பம்பாயிலே ஒரு பெரிய இங்கிலீஷ் தினசரியின் பெயரைக் குறிப்பிட்டு அதில் அவன் தலைமை நிருபராக இருந்ததாகச் சொன்னாள்.

"ரொம்பத் துணிச்சலா எழுதுவான். அரசியல்வாதிகள் செய்யற தப்பு தெரிஞ்சா கொதறி எடுத்துடுவான். மேனேஜ்மெண்டுடைய சப்போர்ட் அவனுக்கு இருந்தது. ஏன்னா அவனாலே அவங்களுக்கு விளம்பரம். ஒரு முறை அவன் புனே ஃபிலிம் இன்ஸ்டிட்யூட்டைப் பத்தி எழுத வந்தப்பதான் எனக்கும் அவனுக்கும் சினேகமாச்சு."

"காணாம போனதுக்கு என்ன காரணம்னு நினைக்கிறீங்க?"

"அரசியல்தான் காரணம். வேற என்ன?" ரொம்ப செல்வாக்குள்ள ஒரு தலைவரின் பெயரை அவள் குறிப்பிட்டாள்.

"அவரை அவன் ஆதாரத்தோடு ரொம்பக் கடுமையா அப்பத்தான் அட்டாக் செஞ்சு எழுதியிருந்தான். அதைப் படிச்சு நா கவலைப் பட்டேன். புனேயிலிருந்து போன் பண்ணி ஜாக்கிரதையா இருன்னேன். அந்தக் கட்சிக்கு நிழல் உலக தாதாக்கள் எல்லாம் ரொம்ப நெருக்கம்னேன். நானே பெரிய தாதான்னு அவன் சிரிச்சான். அதுதான் நா கடைசியா அவனோடு பேசினது."

அவள் புன்னகை மாறாமல் இந்தச் செய்தியைச் சொன்னது ராஜாவுக்கு வினோதமாக இருந்தது.

"போலீஸ் ஒண்ணும் செய்யல்லியா?"

அவள் அழகாக உதட்டைப் பிதுக்கினாள்.

"எஃப் ஐ ஆர் ஃபைல் பண்ணினோம். ஏதோ தேடற மாதிரி பாவனை செஞ்சு, கடைசியிலே ஃபைலை க்ளோஸ் பண்ணிட்டாங்க."

"எமர்ஜென்ஸிம்போது இப்படி ஆன ஒரு கேஸ் எனக்குத் தெரியும். இப்பவும் அப்படி நடக்குதா என்ன?"

மீரா வாய்விட்டுச் சிரித்தாள்.

"நீங்க சரியான அப்பாவின்னு நினைக்கிறேன். இப்பல்லாம் எமர்ஜென்ஸி பிரகடனப் படுத்தத் தேவையே இல்லே. ஜனநாயகப் போர்வை போர்த்திக்கிட்டே என்ன வேணா செய்வாங்க. அரசியல் செல்வாக்கோட, போலீஸையும் கைக்குள்ள போட்டுக்கிட்ட பிறகு யாருக்கு பயப்படணும்? இதுக்கெல்லாம் கோபப்படறவங்களைக் கண்டு அவங்களுக்கு பயமில்லே. அவங்களுடைய ஓட்டு வங்கி வேறே."

"என்னாலே நம்ப முடியல்லே மீரா!"

அவள் மீண்டும் சிரித்தாள்.

"ஆனா, இது கதையில்லே, நிஜம்! ஆனா பாருங்க எதுக்கும் எதுவும் ஸ்தம்பிச்சுப் போறதில்லே – உலகம் உருளுது. வாழ்க்கை ஓடுது! ஓடணும், நிக்கக் கூடாது."

அவர்கள் ஆர்டர் செய்தது மேஜைக்கு வந்தது. மக்கய்கி ரோட்டி, ஸர்ஸோங்கா ஸாக்.

அவன் அதையே பார்த்தபடி எங்கோ நழுவும் மனசை அதன் போக்கில் விட்டுவிட்டு அமர்ந்திருந்தான். ரொட்டியை விண்டு கீரையில் அதை முக்கி எடுத்து வாயில் போட்டு மென்றபோது ஓர் இரவு ஓர் இளம் பெண்ணின் எதிரில் அமர்ந்து இதே போல மக்கய் கீ ரோட்டி சாப்பிட்ட பிம்பம் எதிரில் நின்றது.

(தொடரும்)

தொண்ணூற்று ஏழு புகைப்படக்காரர்கள் அனுப்பிய முந்நூற்று எழுபத்தியோரு புகைப்படங்கள் போட்டியில் கலந்து கொண்டன.



அசோசியேட் பிரஸ்ஸின் மனிஸ் ஸ்வாரப் (முதல் பரிசு) டைம்ஸ் ஆஃப் இந்தியாவின் ஹரிஷ் தியாகி (இரண்டாம் பரிசு) இந்துஸ்தான் டைம்ஸின் அஜய் அகர்வால் (மூன்றாம் பரிசு) ஆகியோர் எடுத்த புகைப்படங்களைத்தான் நீங்கள் இங்கே பார்க்கிறீர்கள்.

– அப்பு

# குளிரில் உறையும் புளூட்டோ!

நம்முடைய சூரியக் குடும்பத்தில் கடைசியாக உள்ளது என்று கருதப்படுகிற கிரகம்தான் புளூட்டோ.

இது ஓர் ஒழுங்கற்ற பாதையில்தான் சூரியனைச் சுற்றி வருகிறது. நம்முடைய பூமிக்கணக்கில், புளூட்டோ சூரியனை ஒரு முறை வலம் வருவதற்கு இருநூற்று நாற்பத்தெட்டு ஆண்டுகள் ஆகின்றன. இதற்குச் 'சரோன்' என்கிற பெயரில் ஒரு சந்திரன்கூட உண்டு.

புளூட்டோவும் ஒரு வால் நட்சத்திரமாக ஆகியிருக்க வேண்டியது, தவறிப் போய்ச் சூரியக் குடும்பத்தில் அகப்பட்டுக் கொண்டுவிட்டது என்று சொல்கிறார்கள்.

சமீபத்தில், தொலைதூர நட்சத்திரம் ஒன்றை புளூட்டோ மறைத்து விலகியதைக் கவனித்த விஞ்ஞானிகள், அதனுடைய வெளிப்புற வெப்பம் அதிகமாவதையும், அதைச் சுற்றியுள்ள 'காற்று' மண்டலப் பகுதி குளிர்ந்து வருவதையும் கணித்திருக்கிறார்கள்.

சூரியனிலிருந்து மிக அதிகமான தொலைவில் புளூட்டோ இப்போது சுற்றி வருகிறது. இதன் உறைபனிக் காலம் நூறு ஆண்டுகளுக்கு மேல் நீடிக்கும் என்று சொல்கிறார்கள்.



நான்கு ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு நட்சத்திரத்தை புளூட்டோ மறைத்து விலகிய நிகழ்வு விரைவாக நடந்தது. இந்த ஜூலை நிகழ்வு மிக மெதுவாக நடந்தது என்று சொல்கிறார்கள்.

இதன் விளைவாக ஏற்பட்ட நட்சத்திர ஒளி வேகத்தைக் கவனித்த விஞ்ஞானிகளால், புளூட்டோவின் அடர்த்தி, அழுத்தம், வெப்ப அளவு ஆகியவற்றைக் கணக்கிட முடிந்திருக்கிறது.

அரிஸோனா, மாஸ்ஸசூஸெட்ஸ் ஆய்வகங்களின் விஞ்ஞானிகள் கண்டறிந்துள்ளபடி கடந்த பதினான்கு ஆண்டுகளில் ஒன்றுக்கு மேற்பட்ட முக்கியமான மாற்றங்கள், புளூட்டோவின் சுற்றுப்புறத்தில் நிகழ்ந்திருப்பதாய்ச் சொல்கிறார்கள். இங்கே பூமியில் 'குளோபல் வார்மிங்' என்று அவதிப்படுகிறோம். நேர்மாறாக புளூட்டோவில் 'குளோபல் கூலிங்' என்கிற குளிர் நிலை நிலவுகிறது.

அடுத்த முறை இன்னொரு நட்சத்திரத்தின் குறுக்கே புளூட்டோ வந்து மறைத்து விலகும்போது கூடுதலான தகவல்கள் கிடைக்கும் என்று நம்புகிறார்கள்.

நம்முடைய 'அக்னி சர்மா'க்கள் பின்பற்றுகிற சோதிட முறைகளில், சூரிய மண்டலத்தின் கடைசியில் சுற்றிவருகிற யுரானஸ், நெப்ட்டியூன், புளூட்டோவின் ஆதிக்கம் கணக்கிடப்படுவதில்லை. இவையெல்லாம் 1750, 1846, 1930 ஆம் ஆண்டுகளில்தான் கண்டறியப்பட்டிருக்கின்றன.

- சுப்ர. பாலன்

# மேகத்துக்கு கிளிசரின்!

வீரப்பன், நாகப்பா எல்லாமே மறந்து போன செய்தியாகிவிட்டது. காவிரிதான் கர்நாடக மக்களின் மனத்தில் அலை பாய்ந்து கொண்டிருக்கிறது. கடந்த வாரம் முழு பந்த், லத்தி சார்ஜ், கண்ணீர்ப் புகை.. என கபினி அணை போர்க்களமாக மாறிவிட்டது. பல விவசாயிகளுக்கும் சில காவல் துறையினருக்கும் காயம். பெங்களூர்- மைசூர் நெடுஞ்சாலையில் சாலை மறியல் போராட்டமும் நடந்தது.



• விஷ்ணுவர்த்தன்

தடியடி, பதற்றம், காவிரி நீ பேசுனே பாரோ... என தமிழக மக்கள் ஆரத்தித் தட்டுடன் காத்திருக்கின்றனர், காத்திருந்தனர், காத்திருக்கப் போகிறார்கள்...



• தடியடி...

• டெக்னாலஜியின் மாயத்தால் எதுதான் சாத்தியமில்லை? வறட்சியால் பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கும் விவசாயிகளுக்காக 'பொய் மழை' பெய்ய வைக்கலாமா என அரசு யோசித்துக் கொண்டிருக்கிறது. அமெரிக்கா மற்றும் சீனாவில் இதுபோல் ஆர்டிஃபிஷியல் மழை பல வருடங்களாகவே பெய்கிறதாம். விமானம் மூலமாக மேகங்களில் ரசாயனக் கலவையை ஸ்பிரே செய்தால் பெய்யெனப் பெய்யுமாம் மழை! இதற்கென்றே ஹைதராபாதிலிருந்து ஒரு பைலட் வரவழைக்கப்பட்டு பேச்சுவார்த்தை நடந்து கொண்டிருக்கிறது. மேகத்திற்கும் எப்படி க்ளிசரின் போடலாம் என்று பேசிக் கொண்டிருக்கிறார்கள். இது கதையல்ல நிஜம்!

• அமெரிக்காவில் நர்ஸ் பற்றாக்குறை. இந்திய நர்ஸ்களுக்கு அங்கு ஏக டிமாண்டாம்! சம்பளமும் எக்கச்சக்கம். அங்கிருக்கும் நர்ஸ்கள் திருமணத்திற்குப் பிறகு வேலையை விட்டு விடுகிறார்களாம். 'நர்ஸஸ் எனிடைம்' என்ற அமைப்பு நர்ஸ்களைத் தேடிப் பிடித்து, அவர்களுக்குத் தேவையான பயிற்சியைக் கொடுத்து, ஆங்கிலத்தைச் சரி செய்து அமெரிக்காவில் வேலை வாங்கிக் கொடுக்கிறது. கம்ப்யூட்டர் படித்துத்தான் வெளி நாடு போக வேண்டுமென்பதல்ல, தெர்மா மீட்டரைப் பிடித்தால் கூட விமானமேறி விடலாம்!

• 'சாகச சிம்மம்' என்றழைக்கப்படும் கன்னட ஹீரோ விஷ்ணுவர்த்தனின் 'சிம்ஹாத்ரிய சிம்மா' நூறு நாட்கள் ஓடி வெற்றி விழா கொண்டாடப்பட்டது. 'என் ரசிகர்களுக்கு நன்றி. இன்றைக்கு நான் வெற்றி நாயகனாக இருப்பதற்கு நீங்கள்தான் காரணம்' என விஷ்ணுவர்த்தன் நன்றி கூறினார். 'விஷ்ணுஜியுடன் நடிப்பதற்காகப் பல சந்தர்ப்பங்களை இழந்திருக்கிறேன். இந்தப் படத்தில் அவருடன் சேர்ந்து நடித்த நான் நிஜமாகவே லக்கி" எனப் பேசினார் மான்விழி மீனா. நடிகரும் எம்.பி.யுமான அம்பரீஷ் விஷ்ணுவர்த்தனுக்கு 'பத்ம விபூஷண்' கொடுக்குமாறு மத்திய அரசுக்கு வேண்டுகோள் விடுத்தார். 'பெத்த நாயுடு' என்ற தெலுங்குப் படத்தின் ரீமேக்தான் சிம்ஹாத்ரிய சிம்மா. அந்த 'நாயுடு' படம் நம் 'தமிழ்நாட்டாமை'யின் ரீமேக். எல்லா மொழியிலும் சக்கைப் போடு போட்ட படம்.

— லதா சேகர், பெங்களூர்

■ பாலகுமாரன் ■

# மனம் உருகுதே

"நாடாருக்கு என்ன பண்ற"

சங்கரய்யர் நிதானமாகக் கேட்டார்.

"அவர் பதிமூணு லட்ச ரூபாக்கு பகடி கேட்கறாருங்க. அத்தனைக்கு எங்க போவேன்."

"அப்போ எவ்ளோதான் கொடுக்கறதா இருக்கு."

"நான் அஞ்சு லட்ச ரூபா தந்துடறேன்."

"நாடார் போக மாட்டார்."

"எவ்ளோ தரலாம்னு சொல்றீங்க."

"பத்து கொடு."

"சரி."

"அப்போ ராதாகிருஷ்ணனுக்கு?"

"எதுக்குங்க ராதாகிருஷ்ணனுக்குக் கொடுக்கணும்."

"நாடாருக்குப் பத்து லட்சம் கொடுக்கறியே."

"அவர் காலி பண்றதுக்குக் கேட்கறாரே."

"ராதாகிருஷ்ணனையும் கேட்க வைக்கட்டுமா?"

"ஐயா, எனக்குச் சாதகமா பேச வேண்டிய நீங்க எதுக்கு ராதாகிருஷ்ணனுக்குச் சாதகமா பேசறீங்க?"

"அவர் இந்த வீட்டுப் படியேறி ஐயா அந்த வீட்டுக்காரப் பையன் என்னைக் காலி பண்ணுன்னு மிரட்டறான். ஆள் வச்சு அதட்டறான் அப்படின்னா நான் என்ன பண்ணணும் சொல்லு?"

அவன் மௌனமாக இருந்தான்.

"நாடாருக்குப் பத்து லட்சம்னா, இவருக்கும் நீ காசு கொடுத்துதான் ஆகணும். பகடிங்கறது வாங்கறவன் கொடுப்பான். அவன்கிட்ட ராதாகிருஷ்ணனுக்கு ஏழு லட்சம், நாடாருக்குப் பத்து லட்சம்னு சொல்லு. எவ்வளவு சீக்கிரம் கொடுக்கறியோ அவ்வளவு சீக்கிரம் காலியாகும். நான் காலி பண்ண வைக்கறேன். என்னிக்கு கொடுப்ப?"

"தெரியலைங்கய்யா."

"போய் பேசிட்டு வா."

"இவ்வளவு லட்ச ரூபா ஜாஸ்தின்னு எங்க வீட்ல அபிப்ராயப்படறாங்க."

"அப்படியா. உனக்கு வக்கீல் நோட்டீஸ் ராதாகிருஷ்ணன் அனுப்பினா என்னா பண்ணுவ? உன் மேல கிரிமினல் புகார் பண்ணா என்ன பண்ணுவ? வீட்டுக்குள்ள புகுந்து பெண்களை மிரட்டி என்னையும் அவமானப்படுத்தினான்னு நாடாரை சாட்சி

வச்சுண்டு சொன்னா என்ன செய்வே."

"கஷ்டம்தாங்க."

"முட்டாள்தனமா எதுவும் பண்ணிடாத."

"அவங்க போலீஸுக்குப் போயிட்டாங் களாமே?"

"போகட்டும். நான் பேசி சமாதானப் படுத்திடறேன். நீ காசுக்கு ஒத்துக்கறயா, ஒத்துக்கலையான்னு சொல்லு."

"நான் கேட்டுட்டு வந்து சொல்றேங்க."

"யாரை?"

"என் பொண்டாட்டிய."

"ஏன் உன் பொண்டாட்டிய கேட் கணும்?"

"எல்லாம் அவதான் முடிவு பண்ணணுங் கறாய்யா."

"அப்போ அவளையும் வந்து பேசச் சொல்லு."

"அவ இங்க வர மாட்டேன்றா."

"ஏன்?"

"இந்த ஏரியாவே அவளுக்குப் பிடிக் கலையாம். பெசன்ட் நகர விட்டு வரதுக்கு இஷ்டமில்லையாம்."

"சரி. நான் வேணா அவங்க இடத்துக்கு வரட்டுமா?"

சாதாரணமாக சங்கரர் கேட்க அவன் பதறினான்.

"இல்லைங்கய்யா. வேணாம். நீங்க வர வேணாம்."

"உனக்கு இந்த வேலை முடிய வேண் டாமா. முடிஞ்சுதான் ஆகணும். ஏழு, பத்து இதான் ஃபைனல். நீ பேசினாலும் சரி. உன் பொண்டாட்டி பேசினாலும் சரி. இதான் முடிவு. இந்த முடிவுக்கு நீங்க சம்மதிக் கலைன்னா இந்த விஷயத்தை எந்த வக்கீல் கிட்ட கொடுக்கறது. எப்படி மூவ் பண் றதுன்னு எனக்குத் தெரியும். எனக்கு என்ன தெரியும்னு உனக்குத் தெரியும். சங்கரன் இது வரைக்கும் சாதாரண ஆளா பேசிக்கிட்டிருந் தான். நீ முரண்டு பண்ணா வேறொரு ஆளா பேசுவான்."

"நான் சின்ன வயசுலேர்ந்து உங்க பின்னாடி சுத்திண்டிருக்கேன்யா."

"ஆமாம். இல்லைன்னு சொல்லலை."

"இப்போ வந்த ராதாகிருஷ்ணனை நீங்க ஏன்யா பெருசா பேசறீங்க?"

"முட்டாளே, பதினேழு லட்ச ரூபா



எங்கேயாவது கடன் வாங்கி உடனே ரெண்டு பேருக்கும் கொடுத்து ஒரு மாசத்துல எந்தவித வில்லங்கமும் இல்லாத ஒரு பில்டிங் அப்படின்னு எடுத்துக்க. ஒரு விளம்பரம் பண்ணு. புரோக்கர்கிட்ட சொல்லு. பல பேர் வந்து ஒருத்தர் மேல ஒருத்தர் மேல நிறைய காசு சொல்லி இந்த விஷயத்தை வாங்கறதுக்கு ஆவலா பறக்கறான் பார். அவனுக்கு வித்துடலாம் இந்த வருஷம் விட்டுட்டீன்னா அடுத்த வருஷம் ஜனங்களாண்ட காசு இருக்காது."

"என்னங்கய்யா சொல்றீங்க?"

"அப்போ உலகத்துல சண்டை சச்சரவு ஜாஸ்தி ஆயிடும்டா. அடிதடி, ரகளை ஆயிடும். உலகத்துல அடிதடி ரகளை ஆச்சுன்னா வியாபாரம் ஸ்தம்பிக்கும். வியாபாரம் ஸ்தம்பிச்சா காசு புரளாது. இப்பொழுதே வித்துடு."

"எப்படிங்கய்யா அடுத்த வருஷம் இந்த உலகத்துல சண்டை வரும்னு சொல்றீங்க?"

"செவ்வாய் ஆட்சி. அது மட்டுமில்லை. உள்ளுக்குள்ள ஒரு பட்சியும் சொல்றது. சண்டை வரும்னு சொல்றது."

அங்கே கனத்த ஒரு மௌனம் நிலவியது.

"அப்போ நான் கிளம்பட்டுங்களாய்யா?"

"கிளம்பு."

அவனுக்கு இரண்டு கொத்து திராட்சைப் பழம் எடுத்து கையில் கொடுத்தார். ருக்மணியைப் பார்த்தார். ருக்மணி ஒரு பிளாஸ்டிக் கவரை எடுத்து அவனிடம் நீட்டினாள். அதில் வாங்கிப் போட்டுக் கொண்டான்.

அவரை விழுந்து வணங்கினான். வேகமாக நடந்து போனான்.

அவன் இருக்கும்போதும் பார்க்கவில்லை. போகும்போதும் பார்க்கவில்லை. ராதாகிருஷ்ணனும் ரேவதியும் அந்த ஹாலின் ஒரு மூலையில்தான் நின்று கொண்டிருந்தார்கள். ஆனாலும், அவன் ஏறெடுத்தும் பார்க்காது போனது ஆச்சரியமாக இருந்தது.

பார்த்தானா, பார்க்கவில்லையா என்கிற கேள்வி வந்தது.

"அதுவொரு கண்கட்டு வித்தை. எதிரே இருக்கிற பொருளைப் பார்க்காத பண்ணிடலாம். மனசை வேற பக்கம் திருப்பி வச்சுடலாம். கண்ணா பார்க்கறது? கண் பார்க்கறதுக்குண்டான கருவி. மனசுதான் பார்க்கும். மனசுக்கு வேற விஷயத்தைக் கொடுத்துட்டா அது அலைஞ்சுகிட்டிருக்குமே தவிர எதைப் பார்க்கணுமோ அதைப் பார்க்காது. பார்க்கணும்னு தோணாது. பார்த்தாலும்

**"கட்சியிலேர்ந்து அவரை நீக்கிட்டாங்களே... ஏன்?"**

**"பொதுக்கூட்டத்துலே ஒரு குழந்தைக்குப் பெயர் வைக்கச் சொன்னப்ப 'கோமளவல்லி'னு வச்சுட்டாராம்!"**

**- தஞ்சை தாமு**

பதியாது."

சங்கரன் சொல்லிவிட்டு வாய்விட்டுச் சிரித்தார்.

சங்கரன் மனைவியும் சிரிக்க அங்கொரு மௌனம் மறுபடியும் ஏற்பட்டது.

"நீங்க ரெண்டு பேரும் போயிட்டு இன்னொரு சமயம் வாங்கோ."

சங்கரன் ராதாகிருஷ்ணனையும் ரேவதியையும் நோக்கிக் கைகூப்பினார்.

"நீங்க மந்திர ஜபம் சொல்லித் தரேன்னு சொன்னேளே."

ராதாகிருஷ்ணன் சட்டென்று நினைவு வந்தவராய் சங்கரனை நோக்கிக் கேட்க, சங்கரன் கண்மூடி சிறிது நேரம் அமர்ந்திருந்தார்.

"அப்படியா? சுத்துக்கணும்னு தோணறதா?"

"ஆமாம்."

"போய் வாங்கோ, பார்ப்போம்."

"எப்போ?"

"இப்போ சொல்ல முடியலை. மறுபடியும் நாம சந்திக்க நேரும். அப்போ எப்போ சொல்லித் தரேன்றதச் சொல்றேன்."

"வீடு பத்தி நாங்க ஏதாவது முயற்சி எடுக்கணுமா? அங்க போய் அந்தப் பையன்கிட்ட பேசணுமா?"

"வேண்டாம். அவன் வருவான்."

அவன் மறுபடியும் வந்தான். இந்த முறை மனைவியோடும், மனைவியின் உறவினர்களோடும் வந்தான்.

அவன் மனைவி தன் ஒவ்வொரு அசைவிலும் பணக்காரத்தனத்தை வெளிப்படுத்தினாள். பேச்சில், சிரிப்பில் மிதப்பு காட்டினாள். பணக்காரர்களாக இருப்பதைத் தவிர, பணத்தைச் செலவழிப்பது தவிர தனக்கு எதுவும் தெரியாது என்பது போல் பேசினாள்.

"பழைய பில்டிங் உயரமா கட்டியிருக்காங்க. நியாயத்துக்கு இது மூணாவது ஃப்ளோர் என்று சொல்லி இதோ ஹால்,



இங்க கிச்சன், இங்க ஒரு ரூம், இங்க ஒரு ரூம் என்று புதிதாக உரக்க ப்ளான் போட்டாள். இருக்கின்ற வீட்டை மனத்திற்குள் இடித்துவிட்டு இன்னொரு வீடு கட்டுகிற அவளுடைய அவசரத்தை எண்ணி ரேவதி சிரித்தாள்.

அவன் மனைவியும், மற்ற உறவுகளும் வேறு பக்கம் போக, தனியே நின்று கொண்டிருந்தவனைப் பார்த்து, "இப்போ உடம்பு தேவலாமா?" என்று ரேவதி அன்பொழுகக் கேட்டாள்.

அவன் திகைத்துப் போய் ரேவதியைப் பார்த்தான்.

"நாங்க அடிச்சதா சொன்னேளாமே? நாங்க அடிக்கலையே நாங்க எதுக்கு உங்களைப் போய் அடிக்கப் போறோம்?" என்று சொல்ல, அவன் தலைகுனிந்து கொண்டான்.

"யார் அடிச்சா? எதுக்கு அடிச்சா?"

"அடிச்சது எங்க சகோதரங்க. நான் கொஞ்சம் வேகமா அவங்ககிட்ட பேசிட்டேன். அது தாங்காத இப்படி செய்துட்டாங்க. நீங்க அடிக்கலைன்னு அன்னிக்கு ராத்திரியே தெரிஞ்சு போச்சு. நான் சங்கரய்யாகிட்ட சொல்லிட்டேன். சங்கரய்யா உங்ககிட்ட போய் மன்னிப்பு கேட்கணும்னு சொன்னாரு. வீடு பார்க்கப் போறேன்னு சொன்னபோது இவங்களும் வரேன்னு சொன்னதுனால இவங்களைக் கூட்டிட்டு வரும்படியா ஆயிடுச்சு. அவங்க முன்னாடி மன்னிப்பு கேட்டா ஏன் என்னான்னுவாங்க."

"நீங்க ஒண்ணும் சொல்லலையா, இங்க வந்து போனது."

ரேவதி சாதாரணமாகக் கேட்டாள்.

அவன் வேறு திக்கில் பார்த்தான்.

"சொல்லலைங்க."

"ஏன்?"

"அவங்களுக்கு இன்னும் கேலியாயிடும்."

"ஏன் மனைவியைப் பார்த்து பயப்படறீங்க?"

"பெரிய ஆளுங்க. அவங்கப்பா அரசியல்வாதி. நான் அவரு பொண்ணோட சண்டை போடறேன்னு தெரிஞ்சுதுன்னா விதம் விதமா தண்டிப்பாரு. எங்க அண்ணனை எனக்கு எதிரா தூண்டி விட்டிருக்காரு. அவன்கிட்ட காசு வாங்கி இவர் ஆளை அடிக்கறதுக்கு அனுப்பியிருக்காரு. ஒரு மாதிரியான குடும்பங்க. நான் போய்க் காலி பண்ணி வைக்கறேன்னுதான் கிளம்பினாரு. நான்தான் வேணாம்னு தடுத்துட்டேன். ரொம்ப மோசமான ஆளுங்க. மோசம்னா சொல்ல முடியாத அளவுக்கு மோசம்."

"சங்கரய்யரைக் கெட்டியா பிடிச்சுக்கோங்க. எல்லாம் சரியாயிடும்."

"உங்க ஐயாவை நான் தப்பா நினைச்சுட்டேன். தயவு செய்து ராதாகிருஷ்ணன் ஸார் கிட்ட சொல்லிடுங்க. நாங்க சங்கரய்யர் கிட்ட போய் நீங்கதான் அடிச்சதா சொல்லிட்டோம். சங்கரய்யர் இல்லவே இல்லைன்னாரு. ராதாகிருஷ்ணன் இந்த வேலை செய்யவே மாட்டாரு. முட்டாள்தனமா பேசாதன்னு சொன்னாரு. அவரு சொன்னது சரியாப் போச்சு."

"நாங்க கேட்டுண்டுதான் இருந்தோம்."

"எதை?"

"நீ எங்க மேல குத்தம் சொன்னதை."

"எப்போ?"

"சங்கரய்யர் வீட்டுக்கு ஒருநாள் சாயந்தரம் வந்தபோது."

"நீங்க எங்க இருந்தீங்க? உள்ளயா?"

"இல்லை. உங்களுக்கு நேர்பின்னாடி சுவரோரமா நின்னுட்டிருந்தோம்."

"நான் பார்க்கலையே."

"பார்வைக்குத் தெரியாது. பார்வைக்குத் தெரியாத பண்ணிட முடியும் அப்படின்னு சங்கரய்யர் சொன்னாரு."

"நிஜமாவா?"

"நிஜமாத்தான்."

"ரெண்டு பேரும் நின்னுக்கிட்டிருந்தீங்களா?"

ரெண்டு பேரும் நின்னுண்டிருந்தோம்."

"அப்போ ஏன் நீங்க வந்து சப்தம் போடலை."

"கூடாதுன்னு சொல்லிட்டாரு."

"என்ன கூடாது?"

"உங்களோட எந்த சத்தமும் போடக் கூடாது. எந்தச் சண்டையும் போடக் கூடாது. போய் நின்னு வேடிக்கை பாருங்களுட்டாரு. அவர் நிக்கவச்சதுக்குக் காரணமே பின்னாடிதான் தெரிஞ்சது. நீங்க வரீங்கன்னு தெரிஞ்சு போச்சு போலிருக்கு.



# பதிலில்லா கடிதம்!

உலகத்தில் உள்ள பிரபலமானவர்களுக்குக் கடிதம் எழுதி அவர்களுடைய கையெழுத்திட்டப் புகைப்படங்கள் பெறுவதை, கடந்த 27 வருடங்களாகச் செய்து வருகிறார் குமரி மாவட்டம் திருவட்டாறைச் சேர்ந்த மதி!

ஜார்ஜ் புஷ், ரீகன், பில்கிளிண்டன், பாகிஸ்தான் அதிபர்கள் நவாஸ் ஷெரீப், பெனாசீர் புட்டோ, இங்கிலாந்து பிரதமர்கள் டோனி பிளேரிலிருந்து, ஹாலிவுட் அதிரடி மன்னன் ஜாக்கிசான், ஸ்டீவன் ஸ்பீல்பர்க், பாப் பாடகர்கள் மடோனா, மைக்கேல் ஜாக்சன் என்று பல்வேறு துறைகளைச் சேர்ந்தவர்களிடம் கையெழுத்திட்ட புகைப்படங்கள் வாங்கி வைத்திருக்கிறார் இந்த மனிதர்.

தற்போது இரண்டாயிரம் படங்களுக்கு மேல் சேகரித்து வைத்துள்ள மதி கின்னஸ் சாதனை புத்தகத்தில் இடம் பெற, இன்னும் 500 கையெழுத்திட்ட புகைப்படங்கள் பெற தீவிர முயற்சி செய்து வருகிறார்.



புகைப்பட சேகரிப்பு சமயங்களில் சில ஷாக் சம்பவங்களும் நடந்தது உண்டாம்.

வழக்கமாக பிரபலமானவர்களுக்குக் கையெழுத்திட்ட புகைப்படம் வேண்டி கடிதம் எழுதுவது மாதிரி தமிழக டி.ஜி.பியாக இருந்த ராஜசேகரன் நாயருக்கும் கடிதம் எழுதியிருந்தார். இதை வேறு விதமாக எடுத்துக்கொண்ட டி.ஜி.பி தனிப்பிரிவு எஸ்.பி தலைமையில் 3 போலீஸ் அதிகாரிகளை வீட்டிற்கு அனுப்பி தனி விசாரணையே நடத்தி விட்டாராம்.

படம், தகவல்: **கேசவபுரம் ஆனந்த்**

எங்களை அங்க நில்லுங்க அப்படின்னு சொல்லிட்டுக் காத்துண்டிருந்தார். தடுக்குனு ஓடி வந்தீங்க. உங்களைப் பத்தி பேச ஆரம்பிச்சார். உங்க தலைய வருடி விட்டார்."

"பார்த்தீங்களா?"

"எல்லாம் பார்த்தோம்."

"கடவுளே... ரொம்ப முட்டாள்தனமா பேசிட்டேன்."

"இல்லை. எங்களுக்கு வேற கவலை ஆயிடுத்து."

"என்ன கவலை?"

"ஒருவேளை அடிச்சவன் வேகமாக அடிச்சு, நீங்க ஆஸ்பத்திரிக்குப் போய் அரை நினைப்புல என்னை அடிச்சது ராதாகிருஷ்ணன்னு சொல்லியிருந்தா, நிச்சயமா போலீஸ் வந்து வாரிப் போட்டுண்டு போயிருப்பா. அக்கம் பக்கம் விசாரிச்சா ஆமாம் அவங்களுக்குள்ள சண்டை இருக்கு. அப்படின்னு ஜனங்க சொல்லும். வெளிய வர முடியாதபடி உள்ளுக்குள்ள போட்டிருக்கலாம்."

"ச்சே...ச்சே... அப்படியெல்லாம் ஆகியிருக்காது."

அந்த இளைஞன் வேகமாகச் சொன்னான்.

"ஆகியிருக்கலாம். அப்படின்னுதான் சொல்றேன். எதுவுமே ஆகாம எதுவோ தடுத்து நிறுத்திடுத்து."

"ஆமாம். எனக்குப் புரியுது. அடிச்சவங்க எதனாலேயோ சிதறி ஓடிட்டாங்க. யார் வந்ததுன்னே தெரியலை. கொன்னுடுவாங்கன்னுதான் நினைச்சேன். உயிர் பயத்தோடதான் போராடினேன்."

"இன்னும் வலிக்கறதா?"

ரேவதி மறுபடியும் பாசம் பொங்கக் கேட்க, அவன் முகம் துடைத்துக் கொண்டான்.

"ஆமாம் மாமி, ராத்திரி தூக்கமேயில்லை. நல்லா வலிக்குது."

"தவிடு ஒத்தடம் கொடுத்தா சரியாப் போயிடும்..."

"ச்சு... சரி தவிட்டுக்கெல்லாம் எங்க போறது?"

அவன் அலுப்பாகப் பேசினான்.

"உன் பொண்டாட்டியை அனுப்பிட்டு வந்துடேன். நான் தவிட்டு ஒத்தடம் தரேன்."

ரேவதி பேச, அவன் கை கூப்பினான்.

அவன் கண்களில் நீர் வழிந்தது.

(தொடரும்)

## முந்திரிக்காட்டுக் கொடூரம்





• கொல்லப்பட்ட ஸ்ரீதர், ரமேஷ், ரவிச்சந்திரன்

# 'பார்ட் டைம் ஜாப்'பால் பலியான உயிர்கள்!

தோண்டத் தோண்ட சடலங்கள் வந்து கொண்டிருப்பதில் ஆடிப்போயிருக்கிறது அரியலூர் – பிலாக்குறிச்சி – சீதளவாடி முந்திரிக் காட்டுப் பகுதி. சமீபத்தில் தோண்டியெடுக்கப்பட்ட மூன்று உடல்களும் கார் டிரைவர்களுடையவை..

விருத்தாசலத்தைச் சேர்ந்த டாக்ஸி டிரைவர் ரமேஷ் (22). சீதாராமன் என்பவன் அவரிடம் சென்று, "பிலாக்குறிச்சியிலிருந்து இரண்டு பேர் வெளிநாடு செல்கிறார்கள். அவர்களைச் சென்னை ஏர்போர்ட்டில் கொண்டு போய் விட வேண்டும்" என்று காரை வாடகைக்குப் பேசியிருக்கிறான். ரமேஷ் சம்மதிக்கவே காரில் சீதாராமனுடன் பிலாக்குறிச்சிக்கு வந்துள்ளனர் நண்பர்களுடன். அன்றிரவு சீதாராமன் தன் வீட்டில் இருந்தவர்களை வெளியே அனுப்பிவிட்டு ரமேஷிற்குச் சாப்பாடு போட்டுள்ளான். சாப்பிட்டுக் கொண்டிருந்தபோதே சைக்கிள் செயினால் ரமேஷின் கழுத்தில் கொடூரமாக இறுக்கி கொலை செய்து, சடலத்தை நண்பர்கள் உதவியுடன் பிலாக்குறிச்சி முந்திரிக்காட்டில் அன்றிரவே புதைத்து விட்டான். பின்னர் காரை ஜெயங்கொண்டான் கார் புரோக்கர் பன்னீர்செல்வம் மூலமாக விற்று பணமாக்கிக் கொண்டான். இக்கொலை நடந்தது கடந்த பிப்ரவரி மாதம் பத்தாம் தேதி இரவு.

மார்ச் இருபத்தி ஆறாம் தேதியன்று அரியலூர் பெருமாள் கோயில் தெரு டாக்ஸி ஸ்டாண்டிற்கு தன் நண்பர்களுடன் வந்திருக்கிறான் சீதாராமன். அங்கு ரவிச்சந்திரன் (36) என்கிற டிரைவரிடம் சென்னை ஏர்போர்ட்டுக்குச் செல்ல வேண்டுமென டாடா சுமோ காரை வாடகைக்குப் பேசியுள்ளான். ரவிச்சந்திரன் சம்மதிக்கவே அன்றிரவு தன் நண்பர்களுடன் காரில் புறப்பட்டிருக்கிறான் சீதாராமன். அய்யூர் முந்திரிக்காட்டுப் பகுதியில் போய்க் கொண்டிருந்தபோது பின் சீட்டில் இருந்த சீதாராமன் திடீரென சைக்கிள் செயினை எடுத்து நண்பர்கள் உதவியுடன் ரவிச்சந்திரனின் கழுத்தில் போட்டு இறுக்கியுள்ளான். காரிலிருந்து குதித்துத் தப்பியோடிய ரவிச்சந்திரனை அந்த இடத்திலேயே கொலை செய்து உடலை முந்திரிக் காட்டின் உள்ளே புதைத்து விட்டனர். பின்னர் அந்த டாடா சுமோ காரை ஜெயங்கொண்டான் புரோக்கரிடம் கொடுத்து பணம் பெற்றுக் கொண்டுள்ளனர். இதில் பலியான டிரைவர் ரவிச்சந்திரனுக்கு மனைவியும் மூன்று குழந்தைகளும் உள்ளனர் என்பது தனி சோகம். தன் கணவன் கொலையுண்டதை அறியாத மனைவி சந்திரா

கடந்த ஆறு மாதமாக தனது கணவனைக் காருடன் காணவில்லையென சென்னை உயர்நீதிமன்றத்தில் ஹேபியஸ் கார்பஸ் மனு தாக்கல் செய்திருந்தார். ஆறு மாதம் கழித்து அழுகிய பிணமாக அவரது கணவரின் உடல் கிடைத்ததைக் கண்டு அவர் கதறியது பரிதாபம்.

இந் நிலையில் கடந்த மாதம் இருபத்தியெட்டாம் தேதி வடலூர் டாக்சி ஸ்டாண்டுக்கு வந்துள்ளான் சீதாராமன். அங்கு ஸ்ரீதர் (29) என்பவரிடம் டாடா சுமோ காரை வாடகைக்குப் பேசியுள்ளான். காருடன் புறப்பட்டு இரவு சீதளவாடி காட்டுப் பகுதியில் வந்து கொண்டிருந்தபோது டிரைவர் ஸ்ரீதரின் கழுத்தில் அதே சைக்கிள் செயின் முறையில் கொலை செய்து சடலத்தை முந்திரிக் காட்டில் புதைத்து விட்டு சுமோவை வழக்கம்போல் பன்னீர் செல்வத்திடம் விற்பனைக்கு ஒப்படைத்துள்ளான். ஜெயங்கொண்டான் பன்னீர் செல்வம் இந்த மூன்று கார்களையும் அவ்வப் போது குறைந்த விலைக்கு விற்று சீதாராமன் வசம் பணம் தந்துள்ளான்.

சீதளவாடி முந்திரிக்காட்டில் சடலம் புதைக்கப்பட்டுள்ள தகவல் தெரியவர, புலன் விசாரணையில் இறங்கியது காவல்துறை. அப்பொழுதுதான் தமிழர் விடுதலை இயக்கத்தைச் சார்ந்தவர்கள் சீதாராமன் தலைமையில் ஒரு கும்பலாக கார் கடத்தல் மற்றும் டிரைவர் கொலைகளில் சம்பந்தப்பட்டிருப்பது தெரிய வந்துள்ளது.

யாரிந்த சீதாராமன்?

பெரம்பலூர் மாவட்டம், பிலாக்குறிச்சி கிராமத்தைச் சேர்ந்தவன் சீதாராமன்(27). இவனுக்கு சிவா, ரஞ்சித்குமார், செல்லகுமார் என்று பல்வேறு பெயர்கள் உண்டாம்.

சீதாராமன் உட்பட செல்வகுமார், ரமேஷ், பன்னீர்செல்வம், பாபு லால், ரவி மற்றும் கல்லூரி மாணவன் பாஸ்கர் ஆகிய ஏழு நபர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர். பாஸ்கர் என்பவன் பி.காம். இரண்டாமாண்டு மாணவன். இது போன்ற காரியங்களில் அவன் ஈடுபடுவது அவனுக்கு 'பார்ட் – டைம் ஜாப் போல' என்று காவல்துறையிடம் தெரிவித்துள்ளான். பத்துப் பதிமூன்று கொலைகளையாவது இவர்கள் செய்திருப்பார்கள் என்கிறது காவல்துறை.


• செல்வகுமார், பாஸ்கர்


• சீதாராமனும் பன்னீர் செல்வமும்


• வேடிக்கை பார்க்கும் மக்கள்...


• தோண்டப்படுகிறது...

சீதாராமனின் ஒப்புதல் வாக்குமூலத்தில் தமிழர் விடுதலை இயக்கம் குறித்து நிறையவே வெளிப்படையாகச் சொல்லி உள்ளானாம். இதனால் ஜெயிலுக்குள்ளேயே தனது இயக்கத்தவர்கள் தன்னைக் கொலை செய்து விடக்கூடும் என்கிற அச்சத்தையும் வெளிப்படுத்தியுள்ளான் அவன்.

– இருள்நீக்கியான்

# 9

■ முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார் ■

# குறையொன்றுமில்லை

'நம:' என்பது ஸர்வ மந்த்ரங்களுக்கும் ஹ்ருதயம். ஹ்ருதய ஸ்தானத்தில் அமைந்திருக்கிற சரணாகதி மந்திரம் இது.

நம: என்றால் வணக்கம் என்று சாமான்யமான அர்த்தம். ஆனால் அது உண்மைப் பொருள் அல்ல.

ந ம: என்பதற்கு - அந்த இரண்டு பதங்களுக்கு விசேஷமான பொருள் உண்டு.

ந என்பது ஓர் அக்ஷரம்; ம: என்பது ஒரு முழுமையான பதம். இரண்டும் சேர்ந்ததுதான் நம:. ம: என்பது எதைக் காட்டுகிறது...? என்னுடையது, எனக்கு என்ற அர்த்தத்தை அது கொடுக்கும். ந என்றால் இல்லை என்று அர்த்தம்.

ஓம் கேசவாய நம: என்றால் என்ன அர்த்தம்?

'கேசவனின் பொருட்டு - எனக்கில்லை - இது கேசவனின் பொருட்டு' என்று கொடுப்பதாக அர்த்தம். அப்படியானால் நமக்கு இல்லை என்று ஆகிறது. 'இதிலே நமக்குச் சம்பந்தமில்லை; அவனுடையது!' இந்த மாதிரிதான் நம் ஆத்மா **அவனுடையது** என்று சமர்ப்பிக்கிறோம். அப்போது இது நமக்கில்லை என்று ஏற்பட்டுப் போகிறது. 'இது அவனுடைய சொத்து' என்று சமர்ப்பித்து விடுகிறோம். ஆத்ம சமர்ப்பணம் பண்ணுகிறோம்.

பொதுவாக, 'இது என்னுடையது இல்லை' என்று எப்படிச் சொல்லுவோம்...? 'இந்த மாதுளம்பழம் என்னுடையது இல்லை என்கிறபோது. உலக வழக்கிலே 'என்னுடையது இல்லை' என்பது கடைசியிலே வரும். 'இல்லை' என்பதைக் கடைசியிலேதான் போடுவோம். 'இல்லை இந்த மாதுளம்பழம் என்னுடையது' என்று யாரேனும் சொல்வார்களா...? அப்படிச் சொன்னால், 'இது என்ன? இவர் இவ்வளவு விசித்திரமாகப் பேசுகிறாரே என்று தோன்றும்.

இங்கே நம: என்பதை நாம் கவனித்தோமானால் 'இல்லை என்னுடையது' என்றுதான் அர்த்தம். ஏன் இல்லையை முன்னே போட்டது...?

'இந்த மாதுளம்பழம்' என்று சொன்ன உடனே, 'இல்லை' சொல்லுவாரோ மாட்டாரோ அப்படிச் சொல்லுவதற்குள் பற்று வந்து விடுமோ! என்று எச்சரிக்கையாய்த்தான் முதலிலேயே 'இல்லை'யைப் போட்டது. முதலிலேயே இல்லை என்று சொல்லி விடட்டும் என்றது.

'இது எதுவும் நமதில்லை' என்கிற ஞானம் பரிபூரணமாக வர வேண்டும். அவனுடையது. அவனுக்கேயானது காமம் என்கிறார் ஆழ்வார். அவன் பொருட்டே எல்லாம் என்கிறார்.



சுவாமி தேசிகன் இன்னொரு இடத்திலே அழகாகச் சொல்கிறார்: _ 'எல்லாம் அவன் பொருட்டு என்பதை அத்யாஸ்சர்யமாய் உணர்ந்த ரீதியிலே, சர்வேச்வரா நீ ஏற்க வேண்டும். இதெல்லாம் உன் பொருட்டு; என் பொருட்டு அல்ல...' என்று பகவானிடத்திலே சமர்ப்பிக்க வேண்டும்.

'அக்னேநய' என்று ஆரம்பிக்கும்_ சரணாகதி மந்திரம் என்றே அதற்குப் பெயர். கர்ம காண்டத்திலே, யக்ஞமெல்லாம் முடிந்த பிறகு உபஸ்தான மந்திரமாக இதைச் சொல்லி கர்மாவை முடிக்க வேண்டும்.

இதே மந்திரம் ஈசாவாஸ்ய உபநிஷத்திலே அவன் பெருமையைக் காட்டி, 'அவனிடத்திலே ஆத்ம சமர்ப்பணத்தை நீ பண்ணினாயானால், நம்மிடத்திலுள்ள பாவங்களையெல்லாம் போக்கி, நம்மைப் பாவனமாக்கி, உயர்ந்த கதியைக் கொடுக்கிறான்' என்று சொல்கிறது. இந்த மந்திரார்த்தத்தைத்தான் பகவான் சரம சுலோகத்திலே - கீதையிலே - பேசினான் என்பதை நாம் உணர வேண்டும்.

பரமாத்மா - அவன் உயர்ந்தவன்.

ஜீவாத்மா - இவன் ஸ்வதந்த்ரன் அல்ல; அந்த பரமாத்மாவுக்குப் பரதந்த்ரன். அவனை உணர்ந்து அவனிடத்திலே இந்த ஆத்மாவைச் சமர்ப்பிக்க வேண்டும் என்பதை பரமாத்ம சப்தமானது வலியுறுத்துகிறது.

அவன் பரமாத்மா பரமாத்மா பரமாத்மா என்று வெறுமே சொல்லிக் கொண்டிருப்பதில் அர்த்தமில்லை. 'அவனைச் சேர்ந்தது இது' என்று உணர்ந்து, அவனிடத்திலே அர்ப்பணித்தால்தான், அவனைப் பரமாத்மா என்று சொல்வதிலே பலன் ஏற்படுமேயொழிய, அவனைப் பரமாத்மா என்று சொல்வதனாலே அல்ல - என்பதை ஆசார்யர்கள் எடுத்துக் காட்டுகிறார்கள்.

அடுத்தது பாருங்கள்... கடோபநிஷத்திலே ஒரு மந்திரம்.

அது கர்ம காண்டத்திலேயும் - வேதத்தில் - முதல் காண்டத்தில் வருகிறது; ஸ்வேதாஸ்வேதர உபநிஷத்திலேயும் வருகிறது. பல உபநிஷத்களிலேயும் வரக்கூடிய மந்திரம் இது. கர்மகாண்டத்திலேயும் வரக்கூடியது. எம்பெருமானுடைய பெருமையை ரொம்ப அழகாகச் சொல்கிறது. அதன் சாரம் இதுதான்:

சூரியன் விசேஷமாகப் பிரகாசிக்கிறான், எப்போதும் சுசியாய் இருக்கிறான் சூரியன். விஷ்ணு, சுசியான சூரியனிடத்திலே நித்ய வாஸம் பண்ணுகிறான்! ஆதித்ய மண்டல அந்தர்வர்த்தி பகவான் என்பதை நாம் நித்யம் ஸந்தியாவந்தனத்திலே சொல்கிறோம்:

'சூரியனுடைய தேஜஸிலே வர்த்தமானன் இப்பொழுதும் இருந்துகொண்டிருக்கிறான். அந்த அம்ருதமான எம் பெருமான் சூரிய தேஜஸிலே விளங்குகிறான்' என்று கொண்டாடுகிறது மந்திரம்.

இந்த மந்திரத்தைச் சொல்லி நித்யம் சூரியனைப் பார்க்க வேண்டும். சூரியனைப் பார்க்காமல் சாப்பிட்டால் கணத்திலே தோன்றி கணத்திலேயே மறையக்கூடிய அல்ப புழுவுக்குச் சமானம் என்கிறது வேதம்!

சரீரத்திலே வரக்கூடிய சரும வியாதிகள், ஹ்ருதய நோய், கண் மந்தமாவது, காது சரியாகக் கேட்காமல் போவது - இப்படி சரீரத்தில் ஏற்படக் கூடிய நோய்கள் அனைத்தையும் சூரிய நமஸ்காரத்தினால் போக்கிக் கொள்ளலாம்.

ஆரோக்கியம் நமக்கு வேண்டுமானால் சூரியனை நமஸ்காரம் பண்ண வேண்டும்.

ஆந்திர தேசத்தில் விசாகபட்டினத்தைத் தாண்டி விஜயநகரத்துக்கு இடையிலே ஓர் அழகான ஊர். ஸ்ரீகூர்மம் என்று அதற்குப் பெயர். அதையும் தாண்டிப் போக வேண்டும். அரசவல்லி என்று அந்த ஊருக்குப் பெயர். சந்தர்ப்பம் கிடைப்பவர்களெல்லாம் அங்கே போய் சேவிக்க வேண்டும். சூரியனுக்கு ஒரு கோயில் உண்டு அங்கே. சூர்யநாராயணர் கோயில். நித்யம் அங்கே எல்லோரும்



தமிழ்ப்படங்களுக்கு ஆங்கிலப் பெயர்கள் வைப்பதாக டாக்டர் ராமதாஸ் அங்கலாய்த்து வருகிறார். டாக்டரைத் திருப்திபடுத்த - சில 'ஆங்கில, தமிழ்ப்படங்களுக்கு நாம் வைத்த 'அசல்' தமிழ்ப் பெயர்கள்.

சூர்யநமஸ்காரம் பண்ணிக் கொண்டே இருக்கிறார்கள். கீழே விழுந்து எழுந்து பண்ணுகிறார்கள். பிரத்யேகமாக உடற்பயிற்சியே பண்ண வேண்டியதில்லை; மந்திரத்தைச் சொல்லி சூர்ய நமஸ்காரம் பண்ணினால் பரிபூர்ண ஆரோக்கியம், நல்ல முறையிலே அமையும்.

அங்கே போனால், எல்லோரும் அருணத்தை நன்றாகக் கற்றுக்கொண்டு ஞாயிற்றுக்கிழமைகளில் ஒவ்வொரு கிருஹத்திலே. ஒன்றுகூடி பக்தர்கள் சூர்ய நமஸ்காரம் பண்ணுவதைப் பார்க்கலாம். மந்திரத்தை ஜபித்து, அந்தந்த மந்திர பிரகாரம் எந்தெந்த நமஸ்காரம் பண்ண வேண்டுமோ அந்தந்த மாதிரி விசேஷமாகப் பண்ணுகிறார்கள். இப்படி நமஸ்காரம் பண்ணுகிறபோது நல்ல ஆரோக்கியம் ஏற்படும்.

அந்த ஆரோக்கியத்தைக் கொடுப்பது யார் என்று கேட்டால், 'வைத்யோ நாராயணோ ஹரி! வைத்தியர்களுள் வைத்தியரான ஹரி நாராயணன்.

அவனை வேதம் என்ன சொல்கிறது...?

உயர்ந்த வைத்தியன் என்கிறது. முதல் வைத்தியன் யார் என்று கேட்டால், எம் பெருமான் நாராயணன் என்று கொண்டாடுகிறது.

மருந்து யார்...? அவனேதான் மருந்து. மருத்துவனும் அவனே, மருந்தும் அவனே. அப்படிப்பட்டவன் எம்பெருமான். அதனால்தான் குலசேகர ஆழ்வார் 'வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்பால் மாளாக் காதல் நோயாளன்' என்றார்.

திருவித்துவக்கோடு என்று ஒரு க்ஷேத்திரம், கேரள தேசத்திலே. அந்த வித்துவக்கோடு எம்பெருமானைப் பாடுகிறபோதுதான் அவனை 'மருத்துவன்' என்கிறார். 'மாளாக் காதல் நோயாளன்' என்கிறார். யாருக்குக் காதல்...? நோயாளிக்கு!

மருத்துவரைப் பார்த்தவுடனே நோயாளிக்கு ரொம்ப சந்தோஷம். உடம்பு முடியாவிட்டாலும் எழுந்து நின்று கை கூப்புகிறார் அவர். வந்தவுடனேயே அவரைப்

ரன் - ஓடு காலி
12 பி - வடபழனி to பட்டினப்பாக்கம்
ஒன்.டூ.த்ரீ - ஒரு தபா... ரெண்டு தபா...
மூணு தபா
யூத்- பொடிக
ஜென்டில்மேன் - பெருசு
பாய்ஸ் - சிறுசு
பிரண்ட்ஸ் - வெட்டிப்பசங்க
லக்கிமென் - மச்சக்காரன்
த்ரீ ரோஸஸ் - முளைச்சி மூணு எல
விடாத ரோஜாக்கள்

- கஜேந்திரன்

பார்த்து அஞ்சலி பண்ணி கைகூப்புகிறார். அப்படி ஒரு மருத்துவரைப் பார்த்தால், அவர் என்ன வைத்துக் கொண்டிருப்பார் கையில்?

கையில் பெரிய கத்தி வைத்துக் கொண்டிருக்கிறார் மருத்துவர்! அந்த பக்கத்திலே பார்த்தால் கத்திரிக்கோல்! ஏகப்பட்ட ஆயுதங்கள்! ஆனாலும் அவர் பேரிலே அன்பு ஜாஸ்தியாகிறது நோயாளிக்கு!

காரணம் என்ன...? இவர் வாளால் அறுத்துச் சுட்டாலும் காதல் ஏன் ஏற்படுகிறது? சுடுதல் என்று பூர்வ காலத்திலே சில வியாதிகளுக்கு ஒரு சிகிச்சை உண்டு. திரியை எண்ணெயிலே நன்றாகத் தோய்த்து காலில் வெடிப்பு இருந்தால் அதிலே தட்டுவார்கள். எண்ணெயோடு, சூட்டோடு தட்டினால் அந்த பித்த வெடிப்பெல்லாம் போய்விடும். ரொம்ப கடினமான சிகிச்சை இது! தாங்குகிற சக்தி நமக்கு வேண்டுமல்லவா! தாள முடிவதில்லை என்பதால்தான் இப்போது 'இன்ஜக்ஷன்' பண்ணி விடுகிறார்கள்!

அட்டைப் பூச்சியை எடுத்து உடம்பிலே விடுவார்கள் - அது ஒரு சிகிச்சை! நீர் வைத்துக் கொண்டால், உடம்பிலிருந்து நீரை உறிஞ்சி எடுக்க அட்டைப் பூச்சியை விடுவார்கள்! அதுவானால் நீரோடு ரத்தத்தையும் சேர்த்து உறிஞ்சும்.

நம்கூட இருக்கிற பந்துமித்ரர்களெல்லாம்கூட இந்த மாதிரி நமக்கு ஹிதத்தைத் தருகிற பாவனையில் இருப்பார்களேயொழிய, கொடுமை செய்வார்கள்.

ப்ருஹதாரண்யக உபநிஷத் என்ன சொல்கிறது...?

பத்னி பர்தாவை விரும்புவதும்

பர்தா பத்னியை விரும்புவதும்கூட அவரவருடைய இச்சைக்காகவேயொழிய, ஒருவர் மற்றவருக்காக விரும்புவதில்லை என்கிற உண்மையைக் காட்டுகிறது அந்த உபநிஷத்.

இப்படியிருக்கையிலே அந்த மருத்துவரிடத்தில் மட்டும் அன்பு ஏற்படுகிறதே!

வைத்தியனிடத்தில் நோயாளிக்கு ஏற்படுகிற அன்பு, அதே விச்வாசம் எம்பெருமானிடத்திலே நமக்கு ஏற்பட வேண்டும்.

நம்மை இந்தப் படுகுழியிலே தள்ளி, பல விதமான பிறவிகளைக் கொடுத்து, சித்ரவதை பண்ணுகிறான். இதெல்லாம் பண்ணினாலும் மாளாத காதல் நோயாளன் போல், 'உன்னை விட மாட்டேன்' என்கிறார் குலசேகர ஆழ்வார். 'எனக்கு நல்லதைத்தானே நீ பண்ணுகிறாய். என்னை உன் திருவடி சேர்த்துக் கொள்வதற்காகவே இவ்வளவு சிரமத்தை நீ கொடுக்கிறாய்!' என்று பகவானுடைய காருண்யத்தைப் பேச வேண்டும்.

அதனாலே சூர்ய அந்தர்வர்த்தியாய், சூர்ய அந்தர்யாமியாய், ரோகங்களைக் களைபவனாக பகவான் இருக்கிறான்.

வஸு என்ற சப்தத்தை எடுத்துக் கொள்வோம். சர்வத்ர வஸதி - சர்வத்திலும் வாஸம் பண்ணுகிற பொருள் எது...? வாயு!

அந்த வாயுவிலும் வாயுவாகவும் எம் பெருமானே இருக்கிறான்.

வேதத்தின் இரண்டாம் காண்டம் வாயுவோடுதான் ஆரம்பிக்கிறது. அந்த இரண்டாங் காண்டத்தைப் பாராயணம் பண்ணுவது ரொம்பக் கஷ்டம்! இரண்டாம் காண்டத்தை மட்டும் ஒருவர் சுலபமாகச் சொல்லிவிட்டால் மீதி காண்டங்களையெல்லாம் அனாயாசமாய்ச் சொல்லிவிடலாம். இரண்டாம் காண்டத்தில், வந்த ஓசையே வந்து கொண்டிருக்கும். புத்தியைப் போட்டுப் புரட்டும்!

காஞ்சிபுரத்திலே கருட சேவையின்போது இதைச் சொல்லுவார்கள். நெட்டுரு குறைவாய் இருப்பவர்கள் சொல்லாமல் நிறுத்தி விடுவார்கள். முதல் கோஷ்டியிலே நின்று சொல்பவர்கள்தான் சொல்ல முடியும்.

இந்த இரண்டாம் காண்டம் ஆரம்பிப்பதே வாயுதேவதாத்மகமான இஷ்டியாகத்தான்.

213 இஷ்டிகளை இரண்டாம் காண்டம் சொல்கிறது. காம்யேஷ்டிகள் என்று பெயர். காம்யமான கோரிக்கையோடு பண்ணக்கூடிய காரியங்கள் - சின்னச் சின்ன யக்ஞங்கள்.

அதிலே வாயவ்யம் என்பது முதலிலே சொல்லப்படுகிறது. எம் பெருமான் வாயு தேவதைக்குரிய நக்ஷத்திரத்திலேதான் முதலில் தோன்றினான். அது என்ன நக்ஷத்திரம் என்று கேட்டால், ஸ்வாதி நக்ஷத்திரம்.

ஒவ்வொரு நக்ஷத்திரத்தும் ஒரு தேவதை உண்டு. ஸ்வாதி நக்ஷத்திரத்துக்கு வாயு தேவதை. வாயு ஸர்வத்ர வஸதி - எங்கேயும் இருக்கிறான். எம் பெருமான் நரசிம்மனும் அவதார காலத்திலே எங்கும் நிறைந்து நின்றான்.

ஸ்வாதி நக்ஷத்திரத்துக்கே நிறைய தனிச் சிறப்புகள். அதையும் சொல்கிறேன்.

(வளரும்)

# டூயட் இல்லாத காதல் கதை!

* மௌனம் பேசியதே - சூரியா, த்ரிஷா

ஏதாவது புதுமை பண்ணிக் கொண்டிருக்கும் கோடம்பாக்கத்தில் தன் பங்குக்கு, "டூயட்டே இல்லாமல் படம் பண்ணியிருக்கிறேன்' என்கிறார் 'மௌனம் பேசியதே' இயக்குனர் அமீர்.

அதென்ன 'மௌனம் பேசியதே?'

"தன் வாழ்க்கையில் காதல் நுழையாத, பிடிக்காத ஒரு வாலிபனுக்கு, காதல் உணர்வு வரும்போது மௌனம் கலைகிறது. இதுதான் கதை; சூர்யா அந்தப் பாத்திரத்தில் நடித்திருக்கிறார்." என்று விளக்கம் தரும் அமீர், இயக்குனர் பாலாவிடம் உதவியாளராக இருந்தவர்.

படத்துக்காக புதுவை கடற்கரையில் இவர்கள் போட்ட 'காப்பி ஷாப்'பை வேடிக்கை பார்க்க தினமும் ஏராளமானக் கூட்டமாம். அங்கு நடந்த பதினெட்டு நாள் ஷூட்டிங், திருவிழா போல் இருந்தது என்கிறார்.

"இதுவரை புதுவை கடற்கரையில் செட் போட்டு யாரும் ஷூட் பண்ணியது கிடையாது. நாங்கதான் முதன்முதலில் பண்ணினோம். 'செட்'டைப் பார்க்க புதுவை முதல்வர் வந்திருந்தார். அடுத்த இரண்டு நாட்களில் அந்த அரசாங்கத்திடமிருந்து அழைப்பு வந்தது. என்னன்னு விசாரிச்சா, அந்த செட்டை நாங்க அப்படியே டூரிசத்துக்குப் பயன்படுத்திக்கிறோம்னாங்க; எனக்கு ரொம்ப ஆச்சர்யமா போச்சு; ஆர்ட் டைரக்டர் ராஜுக்குத்தான் நாங்க நன்றி சொல்லணும்" என்ற அமீர், படத்தில் ஒரு டஜன் புதுமுகங்களை இறக்கியிருக்கிறார்.

"நிறைய ஆசைகளோடும் கற்பனைகளோடும் சினிமாவுக்கு வர்றவங்க கிட்ட நிச்சயமா திறமை இருக்கும். இன்வால்வ்மென்ட் இருக்கும். அந்த நம்பிக்கையிலதான் அறிமுகப்படுத்தியிருக்கேன். படத்துல இரண்டாவது ஹீரோவா வர்ற புதுமுகம் நந்தா, நீங்க நம்பவே மாட்டீங்க, பல படத்துல நடிச்ச மாதிரியான அனுபவத்தைத் தந்திருக்காரு." என்று சொல்லும் இந்த இயக்குனருக்கு இதுதான் முதல் படம்.

முதல் படம் வெளி வரும் முன்பே எக்கச்சக்க பாபுலராகிவிட்ட த்ரிஷாதான் படத்தின் நாயகி. 'ஒரு ஜீவனுள்ள நடிப்பைத் தந்திருக்கிறார்' என்கிறார் இயக்குனர் புன்னகையோடு!

— அப்பு



* அமீர்

# நதிக்கரை ஞாபகங்கள்!

• புகழேந்தி



சமீபத்தில் இரண்டு மாதங்கள் தமது ஓவிய கித்தான்களோடு ஐரோப்பிய நாடுகளுக்குக் கலைப் பயணம் செய்று வந்திருக்கிறார் ஓவியர் புகழேந்தி. அவரின் அனுபவங்கள்.

★ வாஷிங்டன் ஆர்ட் மியூசியம். தலைநகர் என்பதால் கூட்டம் மொய்க்கிறது. இன்னும் நம்மிடம் கலையை ஆழமாகப் பார்த்து ரசிக்கிற ரசனை வளரவில்லை. அமெரிக்கர்கள் ரசிப்பதோடு மட்டுமல்ல. பிடிக்கிறதோ, பிடிக்கவில்லையோ விவாதம் செய்கிறவர்களாக இருக்கிறார்கள். ஒரு தமிழ்க் குடும்பம் அங்கு நுழைந்த வேகத்தில் தவறான இடத்திற்கு வந்ததுபோல் திரும்பிப் போய் விட்டது. இதுதான் நம் நிலைமை. அமெரிக்காவில் வாழும் தமிழர்கள் மியூசியம் பற்றிய புரிதலே இல்லாமல் வாழ்கிறார்கள்."



• ரெய்ன் நதியோரம்

★ நாம் இன்று பேசுகிற பல விஷயங்கள் அமெரிக்காவில் எண்பது வருடங்களுக்கு முன்பே செய்து முடித்திருக்கிறார்கள். ஓவிய நுட்பங்களில் பல வருடங்கள் பின்தங்கியிருக்கிறோம் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் அதை அனுபவபூர்வமாக உணர்ந்து வந்திருக்கிறேன்.

★ கோடுகள், நிறங்கள், வடிவங்கள் தரும் ஓவிய அனுபவங்களைத் தாண்டி வெறும் 'ஒலி' மட்டுமே கலை வெளிப்பாடாக மாறியுள்ளதை அங்கு கண்டு கொள்ள முடிந்தது.

★ பிரான்ஸ், கலையும் கலைஞர்களும் கை கோர்க்கும் தேசம். லூவர் மியூசியம். யாராலும் தகர்க்க முடியாத அருங்காட்சியகம். அதை ஓர் ஓவியனாகப் பார்ப்பதற்குப் பதினைந்து நாட்கள் வேண்டும். டாவின்சியின் மோனலிசாவைப் பார்த்தேன். அந்த உன்னதமான ஓவிய அழகியின் முன்னால் ஒரு நிமிடத்திற்கு ஆயிரம் பேர் நிற்கிறார்கள்.

★ பாரிஸில் 'வொயிட் சர்ச்' என்கிற இடம். அதற்கு அருகிலேயே ஓவிய பஜார். வந்து செல்கிற பார்வையாளர்களை உடனே இன்ஸ்டன்டாக வரைந்து கொடுத்து காசு பார்க்கிறார்கள்.

★ இலண்டனில் நான் பாத்த கார்ல் மார்க்ஸ் கல்லறை, இயற்கையெழில் கொஞ்சும் இடத்தில் இருக்கிறது. வீடியோ படமெடுக்க அனுமதியில்லை. ஒரு புறம் அரசப் பரம்பரையின் கல்லறைகள். மறு புறத்தில் மேதைகளின் கல்லறைகள். அழகான அமைதி. அங்கே மார்க்ஸின் அழகிய சிற்பத்தோடு கல்லறை. எனக்கு நெகிழ்ச்சியான அனுபவம் அது.



• ஓவிய பஜார்



• மார்க்ஸ் கல்லறை

• ஓர் ஓவியனாக மட்டுமல்ல பேராசிரியராகப் போய் வந்தது புதிய அனுபவம். ஐரோப்பா மக்களின், குறிப்பாக புலம் பெயர்ந்து வாழ்கிற தமிழர்களின் சமூக வாழ்க்கையைப் பார்த்து வந்தது என்னுள் நிறையக் கேள்வியை விதைத்திருக்கிறது. அதனை இனி வரும் வகுப்புகளில் மாணவர்களோடு பகிர்ந்து கொள்ள ஆசையோடு இருக்கிறேன். தேம்ஸ், நைல், ரெய்ன் என்ற மூன்று முக்கிய நதிகளின் கரைகளில் நடந்து வந்த ஞாபகங்கள் ஆச்சரியமாகப் பதிவாகியிருக்கின்றன. என் கவிதையில் ஓவியங்களாக எழுதுவேன்.

— சுபு

# என்டோசல்ஃபன் சர்ச்சை!

ஆசிரியருக்கு,

'என்றைக்குத் தடை செய்யப்படும் என்டோசல்ஃபன்?' என்ற கட்டுரை (கல்கி 25.8.2002), உண்மைக்கு மாறான தகவல்களைத் தந்திருக்கிறது. உங்கள் நிருபர், சம்பந்தப்பட்ட தொண்டு நிறுவனங்களின் தவறான கருத்துக்களைக் கேட்டுக் குறை கூறியிருக்கிறார். சர்வதேச கான்சர் ஆராய்ச்சிக் குழுவும், உலக சுகாதார அமைப்பும் என்டோசல்ஃபனால் புற்று நோயோ, பிறப்புக் கோளாறுகளோ வராது என்று கருதுகின்றனர்.

ஃபிலிப்பைன்ஸில் என்டோசல்ஃபான் தொடர்ந்து பயன்படுத்தப்படுகிறது என்பதைத் தயவு செய்து அறியவும்.

கேரள நீதிமன்றம் என்டோசல்ஃபனைத் தடை செய்திருப்பதாகக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அது தவறு. ஆகஸ்ட் 12 ஆம் தேதி வெளியிட்ட ஆணைப்படி நிபுணர் குழு அறிக்கை மத்திய அரசுக்கு அளிக்கப்பட்டு ஒரு முடிவு எடுக்கப்படும்வரை, என்டோசல்ஃபன் அல்லது அது தொடர்பான தயாரிப்புகள் மாநிலத்தில் எங்கேயும் பயன்படுத்தப் படக் கூடாது. என்டோசல்ஃபன் அபாயகரமானது என்ற அடிப்படையில் இந்த இடைக்காலத் தீர்ப்பை வழங்கவில்லை; ஒரு முன்ஜாக்கிரதைக்காகவும், பாதுகாப்புக்குமாகவே வழங்கப்பட்டுள்ளது. இது ஒரு தரப்புக்குச் சாதகமாக இருந்தாலும், மத்திய அரசு முடிவு எடுக்கும்வரை மட்டுமே இந்த இடைக்காலத் தடை இருக்கும். இந்தத் தீர்ப்பு முழுத் தடை அல்ல. இடைக்கால நிறுத்தம் மட்டுமே என்பதை நீங்கள் உணர வேண்டும்.

**எம். ராகவேந்தர்**
**என்டோசல்ஃபன் தயாரிப்பாளர்கள்**
**நலச் சங்கம்,**
**மும்பை.**

எமது கட்டுரையாளர் கூறுகிறார்:

பல செய்தித் தாள்களிலும், பத்திரிகைகளிலும், டி.வி.யிலும் வெளியான செய்திகளின் தொகுப்பே எழுதிய கட்டுரை. என்டோசல்ஃபன் தயாரிப்பாளர்களைக் குறை கூறுவதைவிட, அதனால் பாதிக்கப்பட்டதாகச் சொல்லப்படும் காசர்கோடு கிராம மக்களின் அவதியை எடுத்துக்காட்டி எச்சரிப்பதுதான் கட்டுரையின் நோக்கம்.

இது தொடர்பாக இந்தியன் கவுன்சில் ஆஃப் மெடிகல் ரீசர்ச் (ICMR) கேட்டுக் கொண்டபடி, ஆமதாபாதைச் சேர்ந்த நேஷனல் இன்ஸ்டிட்யூட் ஆஃப் ஆக்குபேஷனல் ஹெல்த் (NIOH), என்டோசல்ஃபன் மிச்சங்கள் இருப்பதைச் சுட்டிக்காட்டின. அப்படி என்றால், ஸிஎஸ்இ-யின் பரிசோதனைக்காக, மருந்து தூவிய சில நாட்களுக்குள்ளேயே எடுத்த சாம்பிள்களில், எந்த அளவுக்கு இருந்திருக்கும் என்று ஊகித்துக்கொள்ளலாம். இந்த NIOH அறிக்கை மார்ச் 2002லேயே தயாரிக்கப்பட்டும், இதுவரை இரகசியமாகவே வைக்கப்பட்டிருந்ததாகவும் தெரிகிறது.

ஸிஎஸ்இ-யின் அறிக்கையைத் தயாரிப்பதில் மேற்பார்வை செய்த ஆலோசகர் பத்மா எஸ். வங்கார், கான்பூர் ஐ.ஐ.டி.யில் பணி புரிபவர். இந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டதற்காக இவர் மிரட்டப்பட்டதாகவும் அறிகிறோம்.

அமைப்பு - ரீதியாகவும், நிதி வசதியாலும் வலுவான நிலையிலுள்ள உறபத்தியாளர்கள், எந்தவிதப் பிரதிபலனும் பாராது, பண பலம் ஏதும் இன்றி, எளிய மக்கள் படும் துயரை எதார்த்தமாக வெளிப்படுத்தும் தொண்டு நிறுவனங்களை எல்லாம், தவறாகச் செயல்படுபவை, உள்நோக்கம் கொண்டவை என்று ஒட்டு மொத்தமாக, சகட்டுமேனிக்குச் சாடுவது வருத்தத்துக்குரியது.



# டான்ஸி : ஜெ.யின் திடீர் பல்டி!

"டான்ஸி நிலம் வாங்கியதைத் தொடர்ந்து பல விரும்பத்தகாத சம்பவங்கள் நடந்து விட்டபடியால் எனது கட்சிக்காரர் (ஜெயலலிதா) அந்த நிலத்தைப் பொதுநலத்துக்காக தானமாகவும் கொடுக்கத் தயாராக இருக்கிறார்" என்று ஜெயலலிதாவின் வழக்கறிஞர் கே.கே. வேணுகோபால் சுப்ரீம் கோர்ட்டின் மேல் முறையீட்டு மனு விசாரணையின்போது சொன்னது பெரிய திருப்பத்தையும் பரபரப்பையும் ஏற்படுத்தியிருக்கிறது.

உயர்நீதிமன்றத்தில்கூட தான் செய்தது தவறில்லை என்று வாதாடி வெற்றி பெற்றுவிட்டு இப்போது பல்டியடிக்க என்ன காரணம்?

"இந்த வழக்கு விசாரணையின்போது நீதிபதிகள் ராஜேந்திர பாபுவும், வெங்கடராம ரெட்டியும் பல கேள்விகளையும், கருத்துக்களையும் வெளிப்படுத்தினார்கள். விசாரணையின் துவக்கத்திலேயே பெரிய பதவியிலிருப்பவர்கள் எப்படி பொறுப்போடும் சந்தேகத்துக்கு அப்பாற்பட்டும் இருக்க வேண்டுமென்பதை விளக்க, லால்பகதூர் சாஸ்திரி, ரயில்வே அமைச்சராக இருந்தபோது தமது மகனுக்கு ரயில்வேயில் நியாயமாக வேலை கிடைத்தும்கூட 'ஏற்றுக் கொள்ள வேண்டாம்' என்று தடுத்து விட்டதை குறிப்பிட்டனர் நீதிபதிகள்.

"டான்ஸி அரசு நிறுவனம் அல்ல என்று ஜெயலலிதா வழக்கறிஞர் சொன்னபோது, இதைக் கண்டுபிடிக்க நாங்கள் நீண்ட ஆராய்ச்சியை அல்லவா மேற்கொள்ள வேண்டியிருக்கும் என்று கொஞ்சம் நகைச்சுவையுடன் கூறினர். அமைச்சர்கள் அரசு சொத்துக்களை வாங்கக்கூடாது என்று வழிகாட்டு நெறிகள்தான் இருக்கின்றன; சட்டம் இல்லை என்று ஜெ. வழக்கறிஞர் சொன்னபோது இதுபோன்ற வழிகாட்டு நெறிகளே அரசுப் பொறுப்பிலிருப்பவர்களுக்குத்தான்; சாதாரண மக்களுக்கு அல்ல என்று எடுத்துக்காட்டினார்கள் நீதிபதிகள். அவர்களது கடுமையான நிலை கண்டு இந்த பல்டி" என்கிறார் இந்த வழக்கை தி.மு.க சார்பில் மானிட்டர் செய்யும் ஒரு முக்கியப் பிரமுகர்.

"இப்போதுகூட தாம் செய்தது தவறு என்று உணர்ந்து நிலத்தைத் திருப்பிக் கொடுப்பது போலத் தெரியவில்லை. ஏதோ சென்டிமென்டலாக அந்த நிலம் வாங்கியது சரியில்லாததால் திருப்பித் தருவதாகதான் சொல்கிறார். இதை அவர் தனி நீதிமன்றத்தில் சொல்லவில்லையே!" என்கிறார் மூத்த வழக்கறிஞர் ஒருவர். ஜெ. நிலத்தை ஒப்படைக்கத் தயாராக இருப்பதால் நீதிமன்ற வழக்கை சீரியஸாக அணுக வேண்டாம் என்று சு.சுவாமி மனு தாக்கல் செய்யப் போகிறாராம்.

ஜெயலலிதாவின் இந்த பல்டியை நீதிமன்றத்தில் சரியானபடி எதிர்கொள்ள தனது யுக்திகளை மாற்றியமைக்கிறது தி.மு.க. "அவ்வளவு சுலபமாக விட்டுவிடக்கூடிய விஷயமா இது?" என்கிறார்கள் தி.மு.க வழக்கறிஞர்கள்.

— ப்ரியன்

டாக்டர் எல். மகாதேவன்

# நோயைத் தடுக்க வழி!

## இரட்டைத் தன்மைகள்

ஒரு சிலருக்கு வாதம், பித்தம், கபம் இவற்றில் ஏதாவது ஒன்றின் தன்மை மட்டுமே அதிகமாகக் காணப்படும். அவர்கள் ஒரு விதத்தில் அதிர்ஷ்டசாலிகள். தங்கள் உடல்கூறு பற்றி திட்டவட்டமாக அறிந்து அதற்கேற்ப நடந்து கொள்ள முடியும். ஆனால் பலருக்கு இரண்டு தோஷங்கள், அதாவது வாத பித்தம், பித்த கபம், வாத கபம் என்று கலந்து காணப்படும். இவர்கள் இரட்டைத் தன்மை கொண்டவர்கள். சில சமயங்களில் ஒரு தோஷத்தின் குணம் மேலோங்கி வரும். ஒற்றைத் தோஷமுள்ளவர்களுக்கு அதிகப் பிரச்னை இல்லை. ஆனால் நம்மில் பெரும்பாலோர் இரட்டைப் பிரக்ருதி உடையவர்களே.

இரட்டைப் பிரக்ருதி கொண்டவர்களின் குணங்களைப் பார்ப்போம்.

## வாத - பித்த பிரக்ருதி

வாத – பித்த தன்மையுடையோர் வாத தோஷத்தின்படி, உஷ்ணத்தை விரும்பினாலும் அவர்களுடைய பித்த குணம் அதை அடக்கிவிடும். பித்த குணம், நிறைய சாப்பிடுவதற்குத் தூண்டினாலும் வாத குணம் இருப்பதால் ஜீரண சக்தி நிலையற்றதாக இருக்கும். உடல் தோற்றம் வாத பித்த தன்மையை வெளிக்காட்டும். வாதத்தின் கருளும், பித்தத்தின் நீளமும் கலந்து தலைமயிர் அலை அலையாகக் காணப்படும்.

பிரச்னை என்று வரும்போது பயமும் கோபமும் மாறி மாறி வரும். அதன் பலனாக ஆத்திரமும் அதிகாரமும் வெளிப்படும். பித்த குணம் அதிகாரத்தைக் கிளப்பும்போது வாத குணம் தன் சக்தியைப் பிரயோகித்து ஐயத்தை எழுப்பிவிடும். எனவே முன்னைவிட பலவீனமே வெளிப்படும்.

ஆரோக்கியமான வாத – பித்த மனிதர்களுக்கு வாதத்தின் சுயசிந்தனைகளும், பித்தத்தின் செயல்படுத்தும் தன்மையும் இணைந்திருக்கும். வாதத்தின் எளிமையும், பித்தத்தின் வலிமையும் அவர்களின் பொதுக் குணமாக அமைந்திருக்கும். இந்த வலிமையை சுய முன்னேற்றத்திற்காகப் பயன்படுத்த வேண்டும். அல்லாவிடில் போதைப் பொருட்களில் நாட்டம் ஏற்பட ஏதுவாகும். வாதத்தையோ பித்தத்தையோ தனியாகக் கொண்டவர்களுக்கு இந்த பிரச்னை இல்லை. இரண்டு பிரக்ருதிகளும் இணைந்திருப்பவர்களுக்கு மட்டுமே இந்தப் பிரச்னை. இனிப்புச் சுவை இவர்களுக்கு ஏற்றதாக இருக்கும்.

## பித்த - கப பிரக்ருதி

பித்த – கப பிரக்ருதி உடையவர்கள் எந்த நிலைமைக்கும் ஏற்றவாறு தங்களை மாற்றிக்

கொள்வார்கள். கபத்தின் உறுதியும், பித்தத்தின் இணைந்து செல்லும் தன்மையும்தான் இதற்குக் காரணம். எல்லா வகையிலும் வெற்றி காண்பவர்கள் பொதுவாக பித்த – கப பிரக்ருதி உடையவர்களாகத்தான் இருப்பார்கள். பித்தத்தின் செயல்வேகமும் கபத்தின் வலிமையும் இதைக் கவனித்துக் கொள்கிறது. பித்தத்தின் கோபத்தை கபத்தின் எச்சரிக்கை உணர்வு அடக்கிவிடுகிறது. கசப்பு, துவர்ப்பு சுவைகள் இவர்களுக்கு ஏற்றதாக இருக்கும்.

## வாதகப பிரக்ருதி

வாதமும் கபமும் குளிர்ச்சியோடு சம்பந்தப்பட்டவை. எனவே வாத - கப பிரக்ருதி கொண்டவர்கள் கபத்தின் ஆதரவால் தனி வாத பிரக்ருதிகாரர்களைப் போல் அதிகக் குளிரால் அவதிப்படமாட்டார்கள். பித்த பிரக்ருதிகளைப்போல் சற்று உயரமாக, சாதாரண உடல்கட்டுடன் காணப்படுவார்கள். அதிக உஷ்ணம் இல்லாததால் ஜீரண பிரச்னைகள் ஏற்படலாம். கபம் கட்டுதல் போன்றவை நேரலாம்.




வாத – கப பிரக்ருதி உடையவர்கள் தங்கள் வேலையில் மிகவும் கவனமாக இருப்பார்கள். சற்று அதிகமாக என்றுகூடச் சொல்லலாம். சிந்திக்காமலேயே முடிவுக்கு வந்துவிடுவார்கள். கபத்தின் உணர்ச்சியும் வாதத்தின் தீவிர உழைப்பும் சேர்ந்து அவர்களை உணர்ச்சி மிக்கவர்களாக ஆக்கிவிடும். சிறிய பாதிப்பும் மனத்தில் ஆழமான விளைவை ஏற்படுத்தி விடும். இவர்களுக்கு எப்போதும் உஷ்ணம் தேவைப்படும். எனவே, இனிப்பு, கசப்பு போன்றவற்றை விட உப்பு, காரம் போன்ற சுவைகளே மிகவும் பிடிக்கும்.

## ஸந்நிபாத பிரக்ருதி

வாதம், பித்தம், கபம் மூன்றும் சேர்ந்து இருப்பது ஸந்நிபாத பிரக்ருதி. இவர்களிடத்தில் நோய் அண்டாது. நோய் வந்தால் சீக்கிரம் போகவும் செய்யாது.

**உங்கள் பிரக்ருதியைக் கண்டுபிடிக்க ஒரு சுலபமான வழி**

பிரக்ருதியை ஆய்வு செய்வதன் மூலம் நோய்க் காரணங்களைச் சுலபமாகக் கண்டறியலாம். அதன் மூலம் அக்காரணிகளை ஒதுக்கி நோய் அண்டவிடாமல் பாதுகாத்துக் கொள்ளலாம். ரஸாயன சிகிச்சை (காயகல்பம்) மற்றும் வாஜிகரண சிகிச்சை (ஆண்மையைத் தூண்டி நன்மக்களை அளித்தல்) மூலம் ஆரோக்கியத்தை அதிகரிக்கலாம். தன்னுடைய பிரக்ருதி என்ன என்பதை அறிந்து கொண்டால் ஒருவன் தனது தினசரி வாழ்க்கை முறையையும் கால மாற்றத்தின் போதுள்ள முறைகளையும் அனுசரித்து அதற்குரிய அறிவுரைகளைக் கடைபிடித்து நோய் அண்டாமல் பார்த்துக் கொள்ளலாம். ஒருவனின் உடல் மற்றும் மனத்தின் சக்தி, திடசித்தம், உடம்பில் சகிப்புத்தன்மை, நோய் எதிர்ப்புத் திறன் ஆகியவற்றை அறிந்து கொள்ள பிரக்ருதி உதவுகிறது. ஒருவரது பிரக்ருதியைத் தொடர்ந்து ஆய்வதன் மூலம் அவரது உணவு முறை, வாழ்க்கை முறை இவற்றைத் திருத்திக் கொள்ள முடியும். பொதுவாக கபப் பிரக்ருதி உள்ளவர்கள் அதிகம் சிரமப்படமாட்டார்கள் என ஆயுர்வேதம் கூறுகிறது.

அட்டவணைகள் அடுத்த வாரம்.

## செப்டெம்பர் 25 முதல் அக்டோபர் 1 வரை

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம்** : 'நீயா, நானா? பார்த்துடலாமா?' என்று வரிந்து கட்டிக் கொண்டு, கோதாவில் இறங்கியவர்கள்கூட, "சரி... மறப்போம்... மன்னிப்போம்" என்று கை குலுக்க வருவார்கள். இதனால் மன அமைதி, உற்சாகம் ஏற்படும். குடும்பத்தில் கணவன் - மனைவி உறவு நிலை இனிமை தரும். கலைத் துறையைச் சேர்ந்தவர்கள் சுபிட்சம் காண்பார்கள். 2ல் ராகு, 8ல் கேது என்பதால், பேச்சில் கடுமையே காட்டாமல், சிந்தித்துச் செயல்படுவது நல்லது. கேது 8ல் என்றாலும் குரு பார்வை நன்மையே தரும். பெண்களின் அபிலாஷை நிறைவேறும். புதிய தொழில் தொடங்க நேரம் சரியில்லை. கவனத்தோடு இருக்கவும்.

**ரிஷபம்** : 'அது அவ்வளவுதான், எள்ளும் தண்ணியும் இறைச்சுட வேண்டியதுதான்!' என்று விரக்தியாக நினைத்துக் கொண்டிருந்த பாக்கிப் பணம், பழைய கடன் எல்லாமே இந்த வாரம் வசூலாகும். ஜவுளி, ஓட்டல், ரசாயனம், இயந்திரம், ஏற்றுமதி-இறக்குமதி சம்பந்தப்பட்ட துறைகளுக்கு ஏறுமுகமான நேரம். கேது7ல் இருப்பது பற்றிக் கவலை வேண்டாம். குரு பார்வை அமோகமாக இருப்பதால், சுப காரியங்கள் தங்கு தடையின்றி நடக்கும். பூர்வீக சொத்து வகைச் சிக்கல் தீரும். புதிய சொத்துக்கள் வாங்கும் அமைப்பும் உண்டாகியுள்ளது.

**மிதுனம்** : 'என் மனசுலே ரொம்ப நாளா ஓர் ஆசை இருக்கு; அது என்னிக்கு நிறைவேறுமோ?' என்று ஏக்கப் பெருமூச்சு விட்ட பெண்களுக்கு, அந்தக் கனவு நிறைவேறும் நாள் வந்தாச்சு. பொதுவாகவே உடல் நலமும், பண பலமும் உங்கள் மேன்மைக்கு உதவும் வகையில்தான் இருக்கு. ஸ்தல யாத்திரை, குல தெய்வப் பிரார்த்தனைகள் நிறைவேறும்... மாணவர்கள் வெற்றி நடை போடுவார்கள். 6ல் கேது உலவுவதால், மறைமுக மற்றும் நேர்முக எதிர்ப்புகள் மறையும். உத்தியோகத்தில் திருப்பம் ஏற்படும். கிரக வழிபாடு நன்மை தரும்.

**கடகம்** : 'நானும் எவ்வளவோ சாமர்த்தியமாதான் நடக்கிறேன். ஆனால் ஆபீஸ்லே நல்ல பேரே இல்லையே!' என்று மறுகிக் கொண்டிருந்தவர்களுக்கு இந்த வாரம், யோகமான காலம். சக ஊழியர்களின் ஒத்துழைப்பு, பதவி உயர்வு, கௌரவமான ஏற்றம், புதிய உத்தியோக முயற்சி, அதிகாரிகளின் பாராட்டு என சுமுகமான சூழ்நிலை உருவாகும். சுய தொழில், வியாபாரத்தில் அனுகூலமான திருப்பம் உண்டாகும். பழைய கடன் பாக்கிகள் பைசலாகும். கையிருப்புக் கூடும். நெருங்கிய உறவினர்கள், நண்பர்கள் உதவிக்கரம் நீட்டுவார்கள். புதிய வீடு, மனை, நிலம் வாங்கும் பாக்கியம் ஏற்படும். ராசியில் உச்சகுரு என்பதால், பொன், வெள்ளி சேரும்.

**சிம்மம்** : 'குழந்தைங்க சொல் பேச்சு கேட்கிறதில்லை. அவங்க எதிர்காலத்தை நினைச்சா பயமாயிருக்கு' என்று கவலைப்பட்டுக்கிட்டு இருந்தீங்க இல்லையா..? இனி, அந்தக் கவலை நீங்கும். புத்திரன், புத்திரிகள் வாழ்க்கையில் எதிர்பாராத முன்னேற்றம், மகிழ்ச்சி உண்டாகும். பெண்களுக்கு மகிழ்ச்சியான வாரம். தாராளமான பண நடமாட்டம் இருந்து, மனத்தில் உற்சாகத்தைப் பெருக்கும். ஸ்பெகுலேஷன் துறையில் அளவான லாபம் உண்டு. மருத்துவம், ரசாயனம், உணவு, தோல், வெண்ணெய் வகையறா ஆதாயம் கொண்டு வரும்.

**கன்னி** : 'அது + இஷ்டம்தான் அதிர்ஷ்டம்னு சொல்வாங்க. அந்த அதிர்ஷ்டம் நமக்கு வரவே வராது போல இருக்கே!' என்று சலித்துப் போய்ப் பேசிக் கொண்டிருந்தவர்கள்கூட, பூரித்துப் போகும்படியான விஷயங்கள் இந்த வாரம் முழுக்க நடக்கப் போகிறது. அதனால் குடும்பத்தில் குதூகலம் நிரம்பியிருக்கும். விருந்து, உல்லாசம், கேளிக்கை, சுப காரியங்கள் என்று மகிழ்ச்சி வெள்ளம் கரை புரண்டே

டும். மாணவர்களுக்குப் புதிய பொறுப்புகளும், திருப்பமான கல்வி அம்சங்களும் ஏற்படும். எழுத்து, பத்திரிகை, அச்சகம் ஆகியவை பலன் தரும். வெளிநாட்டுத் தொடர்பு ஆதாயம் கொண்டு வரும்.

**துலாம்** : 'என்னமோ போங்க. உடம்பே சரியில்லை. ரொம்ப அவஸ்தைப் படறேன்' என்று நோய்வாய்ப்பட்டு நொந்தவர்களுக்கு, மெள்ள மெள்ள ஆரோக்கிய மேன்மை ஏற்படும். இதனால் வாக்குச் சாதுர்யம் பளிச்சிடும். திறமை இரட்டிப்பாகும். மனத்தில் தன்னம்பிக்கை ஊற்றெடுக்கும். சட்டம், காவல், இராணுவம் ஆகிய துறைகளில் உள்ளவர்களுக்கு முன்னேற்றம் உண்டாகும். எங்கும் எதிலும் பெரியோர்களின் ஆலோசனைகளை ஏற்று நடப்பது நல்லது. வியாபாரிகள் அகலக் கால் வைக்கக் கூடாது. குரு 2ம் இடமான குடும்ப, தன, ஸ்தானத்தைப் பார்ப்பதால், சுப காரியங்கள் நடக்கும்.

**விருச்சிகம்** : 'நிறைய யோசனைகள் இருக்கு... உழைக்கவும் தயாராயிருக்கேன். ஆனால் என்னை மதிக்கவே மாட்டேங்கிறாங்களே' என்று புலம்பிக் கொண்டிருந்தீர்கள் அல்லவா! இதோ, காலம் கனிந்து, கல்கண்டு போன்ற நிலைமை வாய்த்துள்ளது. உத்தியோகத்தில் உங்களுக்கு நல்லதொரு திருப்பம் ஏற்படும். சுதந்தரமாகச் செயல்பட்டு, பாராட்டுப் பெறுவீர்கள். வேலையில்லாதவர்கள் அதற்கான முயற்சிகளில் ஈடுபட, அனுகூலமான பலன் ஏற்படும். தொழிலாளர்கள் முன்னணிக்கு உயர்வார்கள். கொடுக்கல் வாங்கல் சுமுகமாகும். கூட்டுத் தொழில் புரிபவர்கள் பேச்சிலோ, செயலிலோ பதற்றம் காட்டக் கூடாது.

**தனுசு** : 'மலை போல குவிஞ்சு கிடக்கிற கடன் தொல்லை என்றைக்குத் தீருமோ?' என்று விசனப்பட்டுக் காலம் கழித்துக் கொண்டிருக்க வேண்டாம். 6ல் ராகு, 12ல் கேது, குரு பார்வையுடன் உலா வருவது நல்ல அறிகுறி. கடன் தொல்லைகள் அறவே நீங்கி, மன அமைதி ஏற்படும். ஆசிரியர்கள், பிரசங்கிகள், சட்ட வல்லுனர்கள் முன்னேற்றம் அடைவார்கள். இன்ஜினியர்கள், இயந்திரப் பணியாளர்கள் ஆகியோர் முன்னணிக்கு உயர்வார்கள். வாணிபம், தொழில், அலுவலகம் சம்பந்தமாக வெளிநாடு போகும் திட்டம் கூடி வரும். உடல் ஆரோக்கியம் நல்லபடி இருக்கும்.



மகர ராசிக்காரரான, (ஓவியர் ஜெயராஜின் மனைவி) ரெஜினாவுக்குப் பொருளாதார நிலையில் முன்னேற்றம் உண்டாம்.

**மகரம்** : 'என்ன காரியம் பண்ணப் போனாலும் ஏதாவது முட்டுக்கட்டை முணுக்குன்னு முன்னாடி நிற்குதே' என்று முணுமுணுத்துக் கொண்டிருந்தீர்களே. இனி கிரக சஞ்சாரம் சாதகமாக இருந்து, குறுக்கீடுகளை ஓரங்கட்டும். தனகாரகன் குரு, 7ல் உச்சம் பெற்று உலவுவதால், எல்லா காரியங்களிலும் அனுகூலம் உண்டாகும். பொருளாதார நிலையில் படிப்படியான அபிவிருத்தி தெரியும். கோர்ட்டு, வழக்கு, விவகாரங்களில் அனுகூலமான திருப்பம் ஏற்பட்டு வெற்றி கிடைக்கும். இதனால் இழந்த மன அமைதியை மீண்டும் பெறுவீர்கள். மாணவர்களுக்கு உத்தியோக முயற்சிகள் வெற்றி தரும்.

**கும்பம்** : 'குன்று மேலிட்ட விளக்கா இருக்க வேண்டியவன் குடத்துக்குள்ளே விளக்கா இருக்கேன்' என்று வருந்திக் கொண்டேயிருந்த கும்ப ராசி அன்பர்களுக்கு, பெயர், செல்வாக்கு கூடும் காலம் வந்தாச்சு. புதன், சுக்கிரன், தங்கள் வீட்டில் பலம் பெற்று உலவுவதால், புதிய முயற்சிகள் யாவும் கைகூடும். சுய தொழில் அல்லது ஏஜென்ஸி ஆட்கள் முன்னணிக்கு உயர்வார்கள். தெய்வப் பிரார்த்தனை, தெய்வீக ஸ்தல யாத்திரை, ஆன்மிகக் காரியங்கள் யாவும் மன சந்துஷ்டி தரும். கொடுக்கல் - வாங்கல் வகையில் அனுகூலம் உண்டாகும். புதிய வீடு கட்டும் யோகம் உண்டாகும். வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வரும்.

**மீனம்** : 'ஆத்துலே போட்டாலும் அளந்து போடணும்பாங்க. தாம் தூம்னு செஞ்சுட்டேன். இப்போ கஷ்டப்படறேன்' என்று நொந்து போய்ச் சொல்பவர்களாக நீங்கள் இருக்கலாம். கவலைப்பட வேண்டாம். உங்கள் ராசிநாதன் குரு, பூர்வ புண்ணிய ஸ்தானம் கடகத்தில் உச்சம் பெற்றுள்ளதால், பணவசதி மட்டுமல்ல, தெய்வ பலம், தொழில் திறமை எல்லாமே கூடும். 3ம் இடத்தில் ராகுவும் 9ல் கேது, குரு பார்வை பெற்று இருப்பதால், எதிர்ப்புகள் மறையும். வெளிநாடு போகும் வாய்ப்புகள் கூடி வரும். குரு பலம் பூரணமாக இருப்பதால், பொன், பொருள், ஆடை, ஆபரணம் சேர்க்கை உண்டாகும். செவ்வாய் 6ல் என்பதால் ஆரோக்கிய மேன்மை உண்டாகும்.

